ஓம் தத் சத்

# சனாதன

# தர்மம்

## (உண்மையை நோக்கிய பயணம்)



சுவாமி பிரபஞ்சநாதன்

# சனாதன தர்மம்

(உண்மையை நோக்கிய பயணம்)

## முன்னுரை

ஒரு மரத்தின் விதை மிகச் சிறியதுதான். ஆனால் அதன் வளர்ச்சி மிகப் பிரமாண்டமான அளவு காணப்படுகின்றது. ஒரு சிறிய கடுகு அளவு விதை மிகப்பெரிய பல விழுதுகளுடன் கூடிய ஆலமரமாக மாற அதற்கு தேவையான சூரிய ஒளி, மழை நீர், காற்று போன்ற அத்தியாவசியத் தேவைகளை கொடுத்து அதை வளர்த்துக் காப்பாற்ற ஒருவன் தேவை.



அவனைத்தான் “**இறைவன்**” என்று நம்முடைய தர்மம் போதிக்கின்றது.

அந்த இறைவன் யார்?, அவன் எங்கு உள்ளான் என்ற பேருண்மையை தெள்ளத் தெளிவாக நம்முடைய “சனாதன தர்மம்” அறிவிக்கின்றது.

“மரத்தை வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்” என்பது பழமொழி.

அதுப்போல நம்முடைய சனாதன தர்மத்தை அதாவது, இந்து மதத்தை வளர்த்தவன் அதனை காப்பாற்றவும் செய்வான் என்ற நம்பிக்கை நம்மிடையே அவசியம் வேண்டும்.

இவ்வாறு “**வேதம்**” என்ற ஒரு வாழ்வியல் முறையான விதையை கொடுத்து, அதை “**சனாதன தர்மம்**” என்ற ஒரு மிகப்பெரிய மரமாக நமக்கு வளர்த்துக் கொடுத்தவன் சாட்சாத் அந்த சர்வேஸ்வரனே ஆகும்.

அப்படி இறைவனால் கொடுக்கப்பட்ட மனித வாழ்க்கைக்கு தேவையான நம்முடைய “**சனாதன தர்மம்**” என்ற வாழ்வியல் முறையான மரம் வளர அதற்கு ஆணிவேராக “**வேதம்**” என்ற வித்து அவசியம் என்று நம் முன்னோர்கள் கருதினார்கள்.

இந்து சமயத்தின் சடங்கு, சம்பிரதாயம், இறை வழிபாட்டுச் சுதந்திரம், நான்கு ஆசிரமங்களான வாழ்வியல் முறை என்ற ப்ரம்மச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம் மற்றும் சந்நியாஸம், இத்துடன் வானசாஸ்திரம், ஜோதிடம், அறிவியல் என எண்ணிக்கையில் அடங்காத அனைத்திற்கும் ஆதாரமான அந்த வேதத்தில் என்ன கூறப்பட்டுள்ளது என்று அறிந்து கொள்ள ஒரு பாமரன் விரும்பினான்.

அன்றைய காலங்களில் வேதத்தில் கூறப்பட்ட உண்மைத் தத்துவங்களை அறிய விரும்பிய மாணவர்கள் குருவுக்கு தொண்டுகள் செய்து அவரது நேரடி உபதேசங்களாக சிரவணம் என்ற முறையில் குருவின் வாயிலாக கேட்டு, அதன் பிறகு கேட்டதினால் உண்டான சந்தேகங்களை அவ்வப்பொழுது மனனம் என்ற முறையில் சந்தேக நிவர்த்தி செய்து கொண்டு படித்து வந்தனர்.

இத்தகைய வேத விஷயங்களை எளிமைப் படுத்திக் கொடுக்க விரும்பிய ரிஷிகள் அதை அந்தந்த கால கட்டங்களுக்கு ஏற்ப தன்னுடைய ஆச்சாரியரின் வழியாக சொல்லக் கேட்ட வேத

மந்திரங்களை தங்களுக்கு பிறகு வருகின்ற மாணவர்கள் படிப்பதற்கு எளிதாக ஓலைச் சுவடிகளில் எழுதி நான்கு வேதங்களாக வகுத்தனர்.



அவைகள் ஒவ்வொன்றிலும் ஸம்ஹிதை, பிராமணங்கள், ஆரண்யங்கள், உபநிடதங்கள் என நான்கு கிளைகள் காணப்படுகின்றன. இவற்றைப் புரிந்து கொள்வதற்கு உதவும் அங்கங்களான சிக்ஷா, சந்தஸ், நிருக்தம், வியாகரணம், கல்பம், ஜ்யோதிஷம், இத்துடன் மேலும் இதிகாச, புராணங்களையும், ஸ்மிருதிகளையும் படித்து முடித்தால் தான் ஓரளவுக்கு நம்முடைய சனாதன

தர்மமான இந்து சமயத்தை அறிந்து கொள்ளவே முடியும்.

இத்தனையையும் படித்துத் தெரிந்து கொள்ள முற்படுவது என்பது, ஒரு பூனை பாற்கடலை நக்கியே குடித்துத் தீர்த்து விடுவேன் என்று சொல்வதற்கு ஒப்பாகும்.

இவற்றை முழுமையாகக் கற்பதற்கு ஒரு ஆயுள் போதாது என்பதைப் புரிந்து கொண்ட பாமரன் வேதத்தின் சாரம் போன்ற சில முக்கியமான விஷயத்தைத் தெரிந்து கொண்டால் முழு வேதத்தையும் பற்றி அறிந்து கொள்ள முடியும் என்றும், அதன் மூலம் ஒரு தெளிவு கிடைக்கலாம் என்றும் நம்பினான்.

இத்தகைய தேடுதல்களில் ஈடுபட்ட பாமரன் தற்காலத்தில் காணப்படுகின்ற பல வகையான சொற்பொழிவாளர்களின் ஆன்மிகச் சொற் பொழிவுகளை கேட்டும், பல வகையான ஆன்மீகப் புத்தகங்களை படித்தும் பார்த்தான்.

இதனால், அவனுக்குத் தெளிவு உண்டாவதற்கு பதிலாக குழப்பத்தையே அடைந்தான். குழப்பம் ஏற்படக் காரணம் என்ன? என்றால் அவன் கேட்ட,

படித்த செய்திகளுக்கிடையே காணப்படுகின்ற பல முரண்பாடுகள் அவனை குழப்பமடையச் செய்தன.

**அது கடவுளுக்கு உருவம் உண்டா இல்லையா?**

**(அல்லது)**

**கடவுள் என்ற ஒன்று இல்லவே இல்லையா?**

இது போன்ற சந்தேகத்தை அடைந்த அந்த பாமரன் அவன் அறிந்திருந்த விஷயங்களை வைத்து ஒரு புறம் பார்த்தால், வேதாந்தம் படித்தவர்கள் கடவுளுக்கு உருவமில்லை, குணமில்லை என்கின்றனர்.

ஆனால் நடைமுறையில் உருவ வழிபாடு தான் வேத மந்திரங்களுடன் விஷேசமாக நடைபெற்றுவருகிறது. இதில் இந்த இரண்டுமே வேதத்திற்கு உகந்தது தானா அல்லது இரண்டில் ஒன்று தான் வேத சம்மதமானதா? என்ற சந்தேகம் அந்த பாமரனிடத்தில் உண்டானது.

**நட்ட கல்லை தெய்வமென்று நாலு புஷ்பம் சாற்றியே**
**சுற்றி வந்து முணு முணுத்து சொல்லும் மந்திரம் ஏதடா**
**நட்ட கல்லும் பேசுமோ? நாதன் உள்ளிருக்கையில்**
**சுட்ட சட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?**

என்று உருவ வழிபாட்டைக் கடுமையாகச் சாடிய சித்தர்களையும் நாம் வேத விரோதிகள் என்று இகழ்வதில்லை. மாறாக, அவர்களுக்கும் உருவச்சிலை வைத்துக் கோயில் கட்டி வேத மந்திரங்கள் மூலம் பூசை செய்கிறோம்.



Fig. 10.10. *Lingas* found at Harappa (left) and Kalibangan. (© ASI)

இந்த பூசை, புனஸ்காரங்களைக் கண்ட பாமரன் குழப்பத்துடன், காண்பதெல்லாம் கடவுள் அன்றி வேறு இல்லை, நீயும் கடவுள், நானும் கடவுள், ஆகவே **“இருப்பதெல்லாம் இறைவனே”** என்று உணர்ந்து கொண்டு, வாழும் இந்த சிறிது காலத்திலேயே அனைத்தையும், அனைவரையும் நேசித்து, எதன் மீதும் பற்றற்று, பரப்ரம்மத்துடன்

பரமானந்தமாக இரண்டறக் கலந்து இருப்பதுதான் முக்தி, இத்தகைய முக்திக்கு “**ஜீவன் முக்தி**” என்கின்றனர் அத்வைதிகள்.

பரப்ரம்மத்துடன் இரண்டறக் கலத்தல் என்பது சாத்தியமில்லை, இறைவன் தலைவன் நாம் அவருக்கு கட்டுப்பட்ட தாஸர்கள் அல்லது “**பக்தர்கள்**” என்கின்றனர், த்வைதிகள்.

இறைவனின் கருணைக்குப் பாத்திரமான உயிர், உடலை விட்டு நீங்கிய பின் நாராயணனின் அருகாமைக்குச் சென்று அவனுக்குச் சேவை செய்யும் பாக்கியத்தைப் பெறவேண்டும். இதுவே உண்மையில் முக்தி, இதுவே மனிதன் அடையக் கூடிய மிகப் பெரும் பேறு என்கின்றனர் விசிஷ்டாத்வைதிகள்.

எல்லோருமே இந்த வேதத்தைத் தான் இதற்கு பிரமாணமாகக் காட்டுகின்றார்கள்.

இதை அறைகுறையாக அறிந்து கொண்ட பாமரன் மேலும் அதிகப்படியான குழப்பத்தை அடைந்து, இதை யாரிடம் சென்று விபரம் கேட்டு அறிவது என்று மிகுந்த கவலையில் சந்தேகத்துடன் இருந்தவனுக்கு ஒருவர் கூறினார், “விஷ்ணுவே

மேலான தெய்வம். சிவன் என்பவர் அவருடைய பேரன் மாதிரி, ஆகவே அவருக்கு சுய சக்தி கிடையாது. அவரிடம் இருக்கின்ற சக்தியெல்லாம் விஷ்ணுவிடமிருந்து வருவது தான்" என்றார்.

அதற்கு ஆதாரமாக "**நாராயண பரம் ப்ரம்ம**" என்ற வேத மந்திரத்தை மேற்கோள் காட்டினார்.

மற்றொரு உபந்யாசகர், "**சிவன் தான் முதன்மையான தெய்வம்**" என்று கூறி அதற்கு ஆதாரமாக ருத்ரத்தில் வரும் "**ப்ரதமோ தைவ்யோ பிஷக்**" என்ற சொல் தொடரைக் காட்டி சிவனை மேலான தெய்வம் என்று கூறினார்.

சிவனே மேலான தெய்வம் எனக் கூறிய ஒரு சைவ சித்தாந்தக்காரரோ, "**விஷ்ணு என்பவர் காத்தல் தொழிலைக் கவனிப்பதற்காகச் சிவனால் நியமிக்கப்பட்டவர். அவர் சிவனடியார்களில் முதன்மையானவர்**" என்று மேலும் ஒரு புதிய சித்தாந்தத்தை வகுத்தார்..

'**அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு**' என்ற பாமர வசனம் இந்த

வேத விற்பன்னர்களின் உபதேசப் பேச்சுக்களில் அந்த பாமரனிடம் எடுபடாமல் போயிற்று.

இன்னும் சில உபந்யாசகர்கள் இந்து சமயத்தில் பல தெய்வங்களை வழிபடுகிறோம். எந்த பெயரிட்டு அழைத்தாலும் எல்லாம் ஒரே கடவுளையே வணங்குவதற்கு ஒப்பாகும். உதாரணமாக, உன்னையே எடுத்துக்கொள், நீ ஒருவன் தான் உன் வீட்டில் உன்னுடைய மகனுக்கு அப்பா, உன்னுடைய மனைவிக்கு கணவன், உன் அப்பாவிற்கு பிள்ளை, உன் பேரனுக்கு தாத்தா. இதுப்போல, உன்னை பல பெயர்களில் பல உறவு முறைகளில் அழைத்தாலும் இருப்பது நீ ஒருவன் மட்டுமே.

அதுப்போல, இறைவனை விநாயகர், சிவன், நாராயணன், முருகன் என்று இப்படி எந்த பெயர்கள் இட்டு வழிபட்டாலும், இருப்பது இறைவன் ஒருவனே என்று கூறுகின்றனர்.

இவர்களது கருத்துக்களையும், உபதேசங்களையும் கேட்ட பாமரன், இவர்களை நெருங்கி இவர்களது வாழ்க்கை முறையைக் கவனித்தால், இவர்களது பேச்சுக்கும், செயலுக்கும் சம்பந்தம் இல்லாத நிலையைக் கண்கூடாக கண்டு, இதில் யார்

கூறுவதை நம்புவது என்ற பதட்டத்துடன் பரதேஷி போல மாறி ஒரு சத்குருவை தேடி சில ஆசிரமங்களுக்கு செல்ல முற்படுகின்றான் இந்த பாமரன்.

இவ்வாறு ஆசிரமங்களைத் தேடிச் சென்றவனுக்கு, இவன் சென்ற வழியிலேயே வழிபோக்கனாக மற்றொரு பரதேஷி இவன் கண்முன் காணப்பட்டான். இந்த பாமரன் அவனை நிறுத்தி, தாங்கள் எங்கு, எதைத் தேடிச் செல்கின்றீர்கள் என்று வினவினான்.

இவனது விசாரணையின் வாயிலாக, இவனது சாஸ்திரத்தைப் பற்றிய சந்தேகத்தையும், வேதத்தை அறியும் ஆர்வத்தையும், அதன் அறியாமையினால் இவனது உண்மையான ஆதங்கத்தையும் அவனிடமே கேட்டு அறிந்து கொண்ட அந்த வழிப்போக்கனாக வந்த அந்த மனிதர், இந்த பாமரனைப் பார்த்து நீ, சனாதன தர்மத்தின் ஆணிவேராக உள்ள வேதம் எதைக் கூற வருகின்றது என்பதை அறிந்து கொள்வதற்கு முன்பாக அதை யாரிடம், எப்படிப்பட்டவர்களிடம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற அடிப்படை விஷயத்தை முதலில் அறிந்து கொள் என்று

அவனுக்கு கீழ்வரும் ஒரு உபதேசப் பாடலை விளக்கினார்.

**"காணவே சொல்லறிய உலக ஆசான்**
**கருதியவன் பணம்பறிக்க எத்துப் பண்ணி**
**நீணவே நெடிதாகச் சிவம் உண்டு பண்ணி**
**நிலையாமல் சீடனுக்கு பிறப்பு உண்டாக்கி**
**ஊணவே உலகமெல்லாம் இப்படியே போச்சு**
**உக்கி அந்த மாயத்தே உழன்று போனார்**
**தாணவேதான் தாள்திறந்தால் அவனே ஆசான்**
**சமர்த்தான குரு தேடி சார்பு கொள்ளே**
**சார்புறல்தான் சொல்லறியான் உலக ஆசான்**
**சமரசமாய்ப் பணம்பறிக்க சாங்கம் சொல்வான்**
**நாவுறவே நாள்போக்கிச் செபத்தைப் பண்ணி**
**ஞானியென்று பெயரிட்டுக் கொண்டு தானும்**
**பாரிலேதான் சஞ்சரிப்பார் சையோகிப்பார்**
**பரிந்தகுடி கெடுப்பார்கள் பொய்யும் சொல்வார்**
**ஓர்வுறவே வேடங்கள் அதிகம் பூண்பார்**
**உருட்டுவார் உலகத்து ஞானிதானே."**

இந்த உலகத்தில் ஒரு சிலர் தன்னைப் பெரிய குருநாதன் என்று சொல்லிக் கொண்டு, பெரிய சிவலிங்கத்தை உண்டு பண்ணி, பல

பொய்களைக் கூறி உன்னிடமுள்ள பணத்தையெல்லாம் பறிப்பார்கள்.

நிலையான யோகம் எது என்று அறியாமல், இவர்களை நம்பி வந்த சீடர்களையும் பிறவிச்சுழலில் சிக்க வைத்து மீண்டும், மீண்டும் அவனுக்கு பிறப்பு உண்டாக்கி, பொய்யான மாயப் பேச்சில் அவனை மயக்கி விடுவார்கள்.

இப்படிப்பட்டவர்களின் இந்த உபதேசத்தால் உலகில் உள்ள பெரும்பாலனவர்கள் மயங்கிப் போனார்கள். முறையான ஞான வழியை எவர் காட்டுகிறாரோ அவரே உண்மையான குருவாவார்.

அவரை நீ தேடிக் கொள். அதைவிட்டுவிட்டு பலவிதமானப் பொய்களைக் கூறி பணம் பறிப்பவர்களையும், நாட்கணக்கில் ஜெபம் செய்தால் போதும் என்று சொல்லிக் கொண்டும், பெண்போகம் செய்து கொண்டும், தான் ஒரு ஞானி என்று சொல்லிக் கொண்டும், உருட்டு, புரட்டாகப் பேசிக் குடி கெடுக்கும் இத்தகைய சண்டாளர்களை இனம் கண்டு கொண்டு, அவர்களை நெருங்கிவிடாமல் கவனமாக இரு என்று, அந்த மனிதர் இந்த பாமரனுக்கு அறிவுரை வழங்கினார்.

இந்த அறிவுறையைக் கேட்ட மாத்திரத்தில் சரியான ஒருவரை நான் சந்தித்துவிட்டேன் என்று முதன் முதலாக ஆனந்தத்தின் உண்மைத் தன்மையை உணர்ந்த பாமரன் சுவாமி!, தாங்களே எனக்கு குருவாக இருந்து என்னுடைய சந்தேகத்தை தெளிவு படுத்துங்கள் என்று அவரிடம் மன்றாடினான்.

அவனது தளராத தாகத்தை புரிந்து கொண்ட அந்த மாமனிதரும், அவனிடம் உன்னைப் போலவே தேடுதல்கள் கொண்டு பலர் அலைகின்றனர். ஆனால், அவர்கள் **"எதை அறிந்து கொண்டால் வேறு எதையும் அறியத் தேவை இல்லையோ"** அதை அறிந்து கொள்ள மறுக்கின்றனர்,

**எத்தனைதான் கற்றாலும், எத்தனைதான்**
**கேட்டாலும், எத்தனை சாதித்தாலும்,**
**இன்பமடையாத சித்தமே, இந்த உலக**
**வாழ்வனைத்தும் பொய்யாகத் தோன்றாமல்,**
**மெய்யாகத் தோன்றி விடும் உனக்கு.**

என்ற சிவபோகசாரத்தைக் கூறி,

அதனால் விளையும் பலனாக,

**"மலை மலையாய்ச் சுற்றிச் சுற்றி**
**மாண்டவர் கோடி**
**மறை நூல்கள் கற்றறிந்து மாண்டவர் கோடி**
**கலை பலவும் கற்றறிந்து மாண்டவர் கோடி**
**கரை சேர வழிதேடி மாண்டவர் கோடி**
**சிலைகளெல்லாம் சுற்றி வந்து**
**மாண்டவர் கோடி**
**சிறையைப் போல் குகையிருந்து**
**மாண்டவர் கோடி**
**அலைபோல மனமாயை தன்னினாலே**
**அலைந்த லைந்து மாண்டவர்கள் கோடி கோடி**
**நிலைபெறாத யோகத்தில் மாண்டவர் கோடி**
**நின்று கொண்டே தவமிருந்து மாண்டவர் கோடி**
**உலையா சந்நியாசத்தில் மாண்டவர் கோடி**
**ஒன்றி நின்ற சம்சாரத்தில் மாண்டவர் கோடி**
**மன்றாடி பூசை செய்தும் மாண்டவர் கோடி**
**வலை போல பின்னி நிற்கும் வாசியைத் தானே**
**வழி நடத்த அறியாமல் மாண்டவர்கள்**
**கோடானு கோடி."**

என்று மேற்கண்ட பாடலைப் பாடி, இதில் நீ எதை அறிந்து கொண்டு மாண்டுபோக விரும்புகின்றாய் என்று அவனது உள் மனதின் நோக்கத்தை அறிய முயன்றார்.

இத்தகைய பாடலைக் கேட்ட மாத்திரத்திலேயே சாஸ்டாங்கமாக அவரது காலில் விழுந்த பாமரன், சுவாமி! தங்களை விட என்னுடைய ஐயத்தை நீக்கும் மற்றொருவரை இனி நான் காண்பது அறிது. அப்படியே இனி நான் காண எடுக்கின்ற முயற்சிகளினால், தேவையற்ற கால விரையத்தை அடைந்து, கற்வேண்டியதை கற்க முடியாமல், அறியாமை இருளிலேயே இந்தப் பிறவியை நான் கடந்தேன் என்றால், இனி இப்பிறவி தப்பினால், எப்பிறவி வாய்க்குமோ? நான் அறியேன் பராபரமே! என்று அவரது காலை பலமாகப் பற்றிக் கொண்டு அவரிடம் மேலும் மன்றாடினான்.

அவனது உள்ளார்ந்த மனக் குமுறலை அறிந்துக் கொண்ட அவர் அவனுக்கு மேலும் சில உபதேசங்களை வழங்குவது என்று தீர்மானித்தார்.

அவரது சம்மதத்தை அறிந்து கொண்ட பாமரன், ஐயனே, என்னுடைய ஐயத்தினை கேட்டு தாங்கள் நகைக்காமல், அடியேனுக்கு புரியும் விதம் விளக்கம் அளிக்க வேண்டுமென்று தன்னுடைய ஐயத்தை அவரிடம் வினவினான்.



சுவாமி!, பல வகையான வழிபாட்டு முறைகள் நம்மிடையே வழக்கத்தில் உள்ளன. வேத மந்திரங்களைக் கூறி ஹோமம் செய்தால் எல்லா நலன்களை அடையலாம் என்று ஒரு சாரார் கூறுகிறார்கள். இன்னின்ன கோயிலில் சென்று அபிஷேகம், அர்ச்சனை, பிரதக்ஷிணம் முதலானவைகளை செய்தால் தீராத வினைகள் தீரும் என்கின்றனர் சிலர். யாக யக்ஞங்கள்

செய்ய வேண்டாம், நாம ஜபம் ஒன்றே போதும் என்கின்றனர் ஒரு சிலர். இன்னின்ன விரதங்களை அனுஷ்டித்தால் நமது கோரிக்கைகள் நிறைவேறும் என்கின்றனர் மற்றொரு சாரர். இவைகள் அனைத்திலும் எது சிறந்தது? இவைகளை எந்த வகையில் வேத சம்மதமானவை என்று நம்புவது?

மேலும், வேதம் சாட்சாத் இறைவன் கொடுத்தது என்று ஒரு சாரர் கூறுகின்றனர், இன்னும் சிலர் வேதம் என்பது பண்டைய கால ரிஷிகள் பிரபஞ்சத்திடமிருந்து கிரகித்து அவர்களது ஞான திருஷ்டியில் அறிந்து கொண்டு, அதனை மற்றவர்களுக்கு உபதேசித்ததாக கூறுகின்றார்கள். இன்னும் சிலர், வேதகாலத்தில் கோவில்கள், உருவ வழிபாடுகள் என்று எதுவும் கிடையாது என்று கூறுகின்றனர்.

அப்படியானால், இதில் எது உண்மை?, வேதத்தில் தவறுகள் நேர வாய்ப்புகள் இருக்காது என்ற நம்பிக்கையின் அடிப்படையில், அடியேன் வேதத்தை உயர்வாக எண்ணி அதன் படி வாழ விரும்பி, இந்த ஐயத்தை தங்களிடம் வெளிப்படுத்துகின்றேன் என்றான்.

மேலும், மறு பிறப்பென்றால் எப்பொழுது? அது பற்றியும் தெளிவு இல்லை. “உடலை விட்டு நீங்கிய உயிர் பத்து நாட்கள் பயணம் செய்து வைதரணி நதியைக் கடந்து பித்ரு லோகத்துக்குப் போய்ச் சேருகிறது. இறந்தவரின் பிள்ளையோ மற்றவரோ செய்யும் அபரக் கிரியைகள் தான் வைதரணி நதியைத் தாண்ட உதவுகின்றன. அவ்வாறு கர்மா இல்லாமல் செத்துப் போனவர்கள் பிசாசுகளாகவே அலைந்து கொண்டிருப்பர்” என்று சில சொற்பொழிவாளர்கள் சொல்கிறார்கள்.

வேறு சிலர், “இறந்த அந்தக் கணத்திலேயே, உயிரானது தான் செய்த பாப புண்ணியங்களுக்கு ஏற்ப வேறு ஒரு ஜன்மா எடுத்து பாப புண்ணியங்களின் பலனை அனுபவிக்கும்” என்கின்றனர்.

இன்னும் சிலர், “ஒரு பிறவிக்கும் அடுத்த பிறவிக்கும் இடையில் சொர்க்கம் நரகம் என்ற நிலை உண்டு. பாப புண்ணியங்களின் பலனை சொர்க்கத்திலோ நரகத்திலோ அனுபவித்து விட்டு அது முடிந்தவுடன் உயிர் வேறு பிறவி எடுக்கிறது” என்கின்றனர்.

இன்னும் சிலர், அப்படியெல்லாம் கிடையாது, அது கட்டுக்கதை உயிர் இந்த உடலை விட்டுப் பிரிந்தால், அதற்கு மறு பிறவி என்பதே கிடையாது என்கின்றனர்.

மற்றொரு சாரர், இறந்தவர்கள் உடலை விட்டு மறு பிறவிக்கு வேறு உடல் எடுப்பதாக இருந்தால், நீங்கள் ஏன் ஒவ்வொரு வருடமும் இறந்தவர்களுக்கு சிரார்த்தம் செய்யும் பொழுது, உங்களது பித்ருக்கள் **“காகா”** உருவில் வந்து உணவை எடுக்கின்றார்கள் எனில், அவர்களுக்கு வேறு பிறவியே கிடைக்காமல் **காகா** - வாகவே சுற்றிக் கொண்டிருக்கின்றாரா? என்று வினா எழுப்புகின்றனர்.

மேலும் சாஸ்திரத்தை படித்த மற்றொருவர் பித்ருக்களுக்கு சிராத்தம் செய்வது எல்லாம் வேதத்தில் சொல்லப்படவில்லை என்றும், அதற்கு ஆதாரமாக **“ஸத்யார்த்த ப்ரகாசம்”** என்ற ஒரு புத்தகத்தைக் காட்டி, இதை எழுதியவர் வேற்று மதத்தை சார்ந்தவரோ, அல்லது நாஸ்திகரோ அல்ல.

வேதத்தை தெய்வ வாக்காக நம்பிக் கொண்டாடியவரும், அதை நன்கு ஆராய்ந்து,

வேதத்தில் இல்லாத பொருள் இல்லை, அது எக்காலத்துக்கும் எல்லா இடத்துக்கும் பொருந்தக் கூடிய ஒரு நூல் என்று உறுதிப்படுத்தி "**மீண்டும் வேத காலத்துக்குப் போவோம்**" என்று கூறிய ஆரிய சமாஜ் என்ற ஒரு அமைப்பை நிறுவிய நிறுவனர் "**தயானந்த ஸரஸ்வதி**" என்ற மிகப்பெரிய வேதாந்தி ஆவார். இவர் 1875 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7 ஆம் தேதி இந்த "**ஆரிய சமாஜ்**" என்ற அமைப்பை நிறுவினார் என்று வரலாற்று உண்மைகளை கூறுகின்றார்.



இதில் வேடிக்கை என்னவென்றால், இப்படிப்பட்ட முரண்பட்ட கருத்துகளைக் கூறுபவர் அனைவரும் வேதத்தை மிக உயர்வாக மதிக்கிறார்கள். அவர்கள் தங்கள் கருத்துக்கு வேதத்தையே ஆதாரமாகவும் காட்டுகிறார்கள். இப்படி ஒன்றுக்கொன்று முரண்பட்ட கருத்துகளை வேதம் கூறுமானால் அது இவ்வளவு உயர்வாக மதிக்கப் பெறுமா? என்று பாமரன் தன்னுடைய சந்தேகத்தினை அவரிடம் வினவினான்.

வேதத்தின் பெயரால் அவரவர்கள் தங்களுக்குத் தெரிந்த சொந்தக் கருத்துகளைக் கூறி மக்களை ஏமாற்றி வந்தது பற்றி பாமரன் ஓரளவு அறிந்திருந்தான்.

உதாரணமாக, ‘கணவனை இழந்த பெண்கள் உடன்கட்டை ஏறுவது வேதத்தில் விதிக்கப்பட்ட ஒரு கடமை’ என்று ஒரு சாரார் வாதிட்ட காலத்தில் இராஜாராம் மோகன்ராய் என்ற வங்காளப் பிராமணர், ‘வேதத்தில் உடன்கட்டை பற்றி எங்கே இருக்கிறது, காட்டுங்கள்’ என்று கேட்டவுடன் அன்றைய அஞ்ஞானக் கூட்டம் ஆர்ப்பாட்டம் செய்து அடங்கியது.

பண்டித ரமாபாய் (1858-1922) என்பவர் ஒரு பெண்ணுரிமைப் போராளியாகவும் சமூக சீர்திருத்தவாதியாகவும் விளங்கிய பெண்மணி ஆவார்.




குழந்தைத் திருமணங்களை எதிர்த்துப் பரப்புரை செய்தவர். விதவை மறுமணம் உள்ளிட்ட பெண்களின் உரிமைகளுக்காகப் போராடியவர்.

இந்திய வரலாற்றில் பெண்களின் சம உரிமைக்கும், முழுமையான நல்வாழ்வுக்கும் போராடிய முதல் பெண்மணி ஆவார்.

ரமாபாய் ஒரு மஹாராஷ்டிர பால்ய விதவை இவர் ஏற்படுத்திய "சாரதா. சதன்" என்ற அமைப்பு பெண் கல்விக்கும், பொருளாதாரச் சுதந்திரத்துக்கும் வழிகாட்டிய அமைப்பு ஆகும்.

பண்டிதை ரமாபாய் பிராமணக் குடும்பத்தில் பிறந்து பின்னர் கிறித்தவ மதத்துக்கு மதம் மாறிய சமூக சீர்திருத்தவாதி ஆவார்.

**குறிப்பு:**

(வேதத்தை கற்றறிந்த பிராமண குடும்பத்தில் பிறந்து கிறிஸ்துவராக மதம் மாறினார் என்றால், அவரது மன நிலை எந்த அளவிற்கு இவர்கள் வேதத்தின் பெயரால் விளைவித்த அக்கிரமங்களை சந்தித்திருக்கும் என்பதை யோசிக்க வேண்டும்)

கேரள மாநிலத்தின் பெரும் பகுதியும் தமிழ்நாட்டின் தென் மாவட்டங்களான கன்னியாகுமரி, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களின் சில பகுதிகள் திருவாங்கூர் சமஸ்தானத்தின் கீழ் மன்னராட்சியின் கட்டுப்பாட்டில் இருந்தது.

அப்போது, ஆங்கிலேயர்களின் கீழ், இந்து நாடாக இருந்தது. அந்த காலகட்டத்தில் சாதீயக் கொடுமைகளால் மக்கள் அதிக அடக்குமுறைக்கு ஆளாகினர்.

பனையேறும் தொழிலைச் செய்து வந்த பனையேறி நாடார், நாயர், ஈழவர், புலையர் உட்பட 18 சமுதாயத்தைச் சார்ந்த பெண்கள் தங்கள் மார்பகத்தை மறைக்க மேலாடை அணிவதற்குத் தடை விதிக்கப்பட்டிருந்தது.

இவர்கள் மார்பகத்தை திறந்து போடுவதுதான் உயர் சாதியினருக்குத் தரும் மரியாதை என்று தரம் தாழ்ந்த எண்ணத்தில் திருவாங்கூர் நாடு ஒரு நடைமுறையை வகுத்திருந்தது.

இதன்படி 18 சாதிகளைச் சேர்ந்த பெண்கள் மேலாடை அணியாமல் அவமதிப்புடன் வாழ்ந்து வந்தனர்.

இந்த அடக்குமுறையை எதிர்த்து சீர்திருத்த கிறித்தவத்தை ஏற்றுக்கொண்ட பனையேறி நாடார் சாதியைச் சேர்ந்த மக்கள் தங்கள் சாதிப் பெண்களுக்கு மார்பை மறைத்து சேலை அணிய உரிமை கோரிப் போராடத் தொடங்கினர்.

இது "தோள் சீலைப் போராட்டம்" எனப்பட்டது.



37 ஆண்டுகள் போராட்டத்துக்குப் பிறகு திருவிதாங்கூர் அரசு நாடார் கிறிஸ்துவ பெண்களுக்கு மட்டும் தோள் சீலை அணியவும், மார்பகங்களை மறைக்கவும் உரிமை அளித்தது.

**குறிப்பு:-**

(கிறிஸ்துவர்கள் இன்று இந்துக்களாகிய நம்மை மதம் மாற்றுகின்றார்கள் என்று ஒரு சாரர் ஓயாமல், பிதற்றிகொண்டிருக்கின்றார்கள். ஆனால், அன்று இதே இந்துக்களை சாதியின் பெயரால் கொடுமைப்படுத்தி, இந்துக்களிலிருந்து கிறிஸ்துவர்களாக மதம் மாற வேண்டிய கட்டாயச் சூழ் நிலைகளை யார் உருவாக்கினார்கள் என்பதையும் யோசியுங்கள்)

காந்தி தீண்டாமையை எதிர்த்தபோது சில சனாதனிகள் அவர் வேத விரோதமாகப் பேசுவதாக எதிர்த்தனர்.

காந்தி, 'வேதத்தில் தீண்டாமையை அனுமதிக்கும் பகுதியை எடுத்துக் கூறுங்கள்' எனக் கேட்டபோது அவருக்குப் பதில் சொல்ல முடியாத இது போன்ற வேதத்தை அரைகுறையாக அறிந்த கும்பல் அவரை எதிர்க்க முடியாமல் வாயை மூடிக்கொண்டது.

சுவாமி! இதுபோன்று எண்ணற்ற வரலாற்றுச் சம்பவங்கள் நடைபெற நம்முடைய சனாதன

தர்மத்தின் ஆணிவேராக கருதப்பட்ட வேதம்தான் காரணமாகுமா? என தன்னுடைய சந்தேகங்களை அந்த மாமனிதரிடம் வெளிப்படுத்தி, தாங்கள் மட்டுமே உள்ளதை உள்ளபடி கூறி, எனக்கு புரிய வைக்க முடியும் என்று அடியேன் ஆணித்தரமாக நம்புகின்றேன்.



ஆகவே தாங்கள் இதற்கு சரியான விளக்கம் நல்கினால் நான் சந்தோசமடைவேன் என்று வினவினான் பாமரன்.

இவனது தொடர்ந்த சந்தேகக் கேள்வி கணைகளினால் ஆச்சரியமடைந்த அந்த மாமனிதர் மிகுந்த ஆனந்தமடைந்து, இவனைப் போன்றவர்களுக்கே நாம் கூறப்போகின்ற விசயத்தை ஆர்வத்துடன் கேட்டு அறிந்து கொள்ளக்கூடிய தகுதி இருக்கின்றது என்று கருதி, இவனுக்கு கூறுவதினால், நம்முடைய ஆழ்ந்த உபதேசத்தின் முழுப்பயனும், கூறப்படுகின்ற காலத்தின் மகத்துவமும் மிக உயர்ந்ததாக இருக்கும் என்று கருதினார்.

எனவே அந்த பாமரனின் சந்தேகங்களுக்கு விளக்கம் அளிக்கும் வகையில், இந்த "**சனாதன தர்மம்**" ***(உண்மையை நோக்கிய பயணம்)*** என்ற நூல் இருக்கும் என்றால் அது மிகையாகாது.

நன்றி!

**என்றும் அன்புடன்,**

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# சனாதன தர்மம்

(சுவாமி பிரபஞ்சநாதன்)

**“தேடல் என்பது உள்ளவரை வாழ்வில் ருசி இருக்கும்**” என்று…

தேடி சோறு நிதம் தின்று
பலசின்னஞ் சிறு கதைகள் பேசி
மனம்வாடி துன்பம் மிக உழன்று
பிறர்வாட பல செயல்கள் செய்து
நரைகூடி கிழப் பருவம் எய்தி -
கொடும் கூற்றுக்கு (எமனுக்கு) இரையென மாயும்
பல வேடிக்கை மனிதரைப் போலே…

என்று பாரதியின் பாடலில் காணப்படுகின்ற அந்த ஆதங்கம் சிறிதும் இன்றி, தனக்காக தினமும் உணவைத் தேடி அலைகின்ற சாதாரண ஐந்தறிவு கொண்ட ஜீவர்களைப் போன்றே, ஆறறிவு படைத்த இன்றைய மனிதர்களின் வாழ்க்கை முறை இருப்பதைக் கண்கூடாகக் காண முடிகின்றது. இதைக் கண்டு மனம் பரிதவிக்கின்றது.

இதற்குக் காரணம் என்னவென்று ஆராய முயன்றால், அறியாமை என்ற இருளில் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருக்கும் இன்றை சமுதாயம் **“எதை அறிந்து கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ அதை அறிய மறுக்கின்றது”.**

**தேடிக் கண்டு கொண்டேன் திருமாலோடு**
**நான்முகனும், தேடிக் காணாத தேவனை**
**என்னுள்ளே கண்டு கொண்டேன்** - அப்பர்.

என்று அன்றைய அறிவாளிகளான ஆத்மஞானிகள் தாங்கள் அறிந்து கொண்டதை மற்றவர்களுக்கும் அறிவிக்க விரும்பினார்கள்.

அவர்களது அறிவின் வெளிப்பாடாகத் தோன்றிய அனைத்துமே **“வேதங்கள்”** என்று நம்முடைய முன்னோர்களால் கொண்டாடப்பட்டன. வேதம் என்றால் **“உயர்ந்த அறிவு”** என்று பொருள்.

இந்த வேதங்கள் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே நம்முடைய பாரத தேசத்தில் கவிதைகளாகவும், செய்யுள்களாகவும் அன்றைய கலச்சார, பண்பாட்டிற்கு ஏற்ற

தர்மங்களாக அன்றைய மக்களிடையே அவைகளை கொண்டு சேர்க்க முயன்றனர்.

இப்படி இந்த மாஹான்களால் கொடுக்கப்பட்ட தர்மம் "**சனாதன தர்மம்**" என்று வழங்கப்பட்டது. சனாதன தர்மம் என்றால், என்றும் அழியாத, மாறாத தர்மம் என்று பொருள்.

எத்தனைதான் கற்றாலும், எத்தனைதான் கேட்டாலும், எத்தனை சாதித்தாலும் இன்புறாத சில மனிதர்கள் அன்று போலவே, இன்றும் இருக்கத்தான் செய்கின்றனர்.

இத்தகைய சில முற்போக்கு வாதிகளினால், இந்த தர்மம் பலவிதமான இன்னல்களைச் சந்தித்து இன்றுவரை அழியாமல் இருக்கின்றது என்றால், அதன் உண்மைத் தன்மை எத்தகையது என்பதை நிச்சயம் அறிய வேண்டும் என்பதே சரியாகும்.

அந்த தர்மம் எதை அறிவிக்க விரும்பியது?,

அந்த தர்மத்தினால் அடையும் பலன் என்ன?

என்று ஏற்கனவே அறிந்து கொண்ட ஞானிகள் இந்த பாரதத்தின் பல திக்குகளில் தோன்றி, தங்களது தாய் மொழியான அவரவர்களது மொழியிலேயே இந்த தர்மத்தை மற்றவர்களுக்கு

உபதேசித்தார்கள். அதை வலியுறுத்தும் விதமாக நம்முடைய தமிழ்க் கவி பாரதியும்,

**'முப்பது கோடி முகமுடையாள் - உயிர் மொய்ம்புற வொன்றுடையாள் - இவள் செப்பு மொழி பதினெட்டுடையாள் - எனிற் சிந்தனை ஒன்றுடையாள்”**

என்று அன்றைய பாரதத்தின் மக்கள் தொகையான முப்பது கோடியைக் குறிப்பிட்டு, முப்பது கோடி மக்களின் உயிர் ஒன்று என்றும், பேசுகின்ற மொழி பதினெட்டு ஆயினும், அவர்களின் சிந்தனை ஒன்று என்றும், நாட்டின் ஒற்றுமையை வலியுறுத்தி, ஆத்ம ஞானத்தை அறிந்து பாடியுள்ளார்.

இந்த ஒற்றுமையை குழைக்கும் விதமாக ஒரு சில முற்போக்கு வாதிகள் எல்லா காலங்களிலும், இந்த பாரத தேசத்தில் இருந்து கொண்டு, இன்றைய இந்தியாவின் இந்த அறியாமை நிலைக்கு காரணமாக அமைந்தனர்.

ஆனால், இவர்களது, பாசாங்குத்தனம் நம்முடைய சனாதன தர்மத்தினிடம் செல்லுபடியாகாமல், அங்கங்கு ஒரு சில அறிஞர்கள் தோன்றி, இன்று

வரை நம் தர்மத்தை காப்பாற்றி வந்து, நம்மிடையே கொடுத்து, நாம் நம்மை உணரக்கூடிய உன்னத நிலையிலேயே வைத்திருப்பதினால், நம்முடைய சனாதன தர்மத்தின் மகத்துவம் எத்தகையது என்பதை விளங்கிக் கொள்ளலாம்.

"வெறுமையிலிருந்து எதுவுமே உருவாக முடியாது."

1. பிரபஞ்சம் தோன்றிய காரணம்!

>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>>

நவீன விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக இன்றைய அறிவியல் இதற்கு விளக்கம் கொடுக்கின்றது.

இந்த பிரபஞ்சம் உருவாக சுமார் 1500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் திடீரென்று ஒரு பெரு

வெடிப்பு ஏற்பட்டது என்றும், அப்போது முதல், நட்சத்திரங்கள், பூமி, கிரஹங்கள் எல்லாம் உற்பத்தியாகின என்றும், இன்றுவரை இந்தப் பிரபஞ்சம் பலூன் ஊதுவது போல பெருகிப் பரந்து விரிந்து கொண்டே போகின்றது என்றும், முடிவு என்ன ஆகும் என்று எங்களுக்குத் தெரியாது என்றும், இந்த மாபெரும் வெடிப்பு (BIG BANG) ஏன் ஏற்பட்டது, எப்படி ஏற்பட்டது என்பதும் எங்களுக்குத் தெரியாது என்றும் இன்றைய அறிவியல் நூல்கள் ஆராய்ந்து கூறுகின்றன.

இந்த அறிவியல் எதை உண்மை என்று கண்டுபிடித்து கூறி வந்தாலும், காலச்சக்கரத்தின் சுழற்சியில் அவைகளில் உண்மை இல்லை என்று மற்றொரு நவீன அறிவியல் அதை நிருபித்து விடும்.

இது போன்று இன்று **"கடவுள்துகள்"** வரைதான் இன்றைய நவீன விஞ்ஞானம் முன்னேறியுள்ளது.

ஆனால், எதை உண்மை என்று அறிவியல் இன்று நிருபிக்க வருகின்றதோ, அந்த அறிவியல் உண்மைக்கு அப்பாற்பட்டது நம்முடைய "தத்துவம்" என்பதை அன்றே நம்முடைய முன்னோர்கள் அறிந்திருந்தனர்.

அப்படிப்பட்ட முன்னோர்கள் இந்த பூமிப்பந்தில் மனித இனம் முதன் முதலாக தோன்றிய காலத்தில், பரந்த உலகத்தின் மையப் புள்ளியான நம்முடைய பாரத தேசத்தில்தான் அந்த முன்னோர்கள் தோன்றினார்கள் என்பதை அறிந்து, நாம் இந்த தேசத்தில் பிறந்தவர்கள் என்பதில் பெருமை கொள்ளலாம்.

அப்படிப் பிறந்த மனிதர்களின் பூர்வீக நாகரிகம் இந்தியாவின் வடக்கே இன்று நம்முடைய நவீன அறிவியல் தொல்பொருள் அகழ்வாராய்ச்சியாளர்களின் கண்டுபிடிப்பால், கிடைத்த மிகப்பழமையான சிந்து சமவெளி நாகரிகத்திற்கு முற்பட்ட நாகரிகம் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

அப்படி அவர்களால் கண்டு பிடிக்கப்பட்ட அன்றைய காலகட்டத்தில் வாழ்ந்த நம் முன்னோர்களின் பூர்வீகம் அறிவின் உச்சகட்ட நிலையில் இருந்ததை நிரூபிக்கும் வகையில் அன்றே அவர்கள் இந்த பிரபஞ்சம் தோன்றிய விதத்தையும், அதன் முடிவையும் கவிதைகளாக வடித்துள்ளதை கண்டு ஆச்சரியமடைந்தார்கள் இன்றைய விஞ்ஞானிகள்.

அன்றே நம் முன்னோர்களால், இவ்வாறு கூற முடிந்ததற்குக் காரணம் அவர்களிடையே இருந்த மெய்ஞ்ஞானம் என்ற பொக்கிஷம் ஆகும்.

இந்த மெய்ஞ்ஞானத்தை அன்றிலிருந்து இன்று வரை நம்மிடையே தக்கவைத்துக் கொண்டுள்ளதினால் மட்டுமே நம்முடைய தர்மம் “சனாதன தர்மம்” என்று அனைவராலும் அழைக்கப்பட்டது.

உலகிலேயே பழமையான நூல் ஒன்று உண்டென்றால் அது ரிக் வேதம் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இல்லை.

மேலும் உலகிலேயே மிகப்பெரிய பழங்கால கவிதைத் தொகுப்பு இந்த **“ரிக் வேதம்”** ஆகும்.

இந்த ரிக் வேதத்தோடு நவீன அறிவியல் ஆய்வாளர்கள் எழுதியுள்ள நூல்களை ஒப்பிடும் போது, ஒரு பெரிய விந்தை என்னவென்றால் நவீன அறிவியல் எதைக் கண்டு பிடித்து இன்று கூறுகின்றதோ, அதையே 7000 ஆண்டுகளுக்கு முன்பு எழுதாக்கிளவி என்று அழைக்கப்பட்ட இந்த வேத நூலில் ஒரு பிரம்மாவின் யுகக்கணக்கில்

1500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் இப்போதைய பிரபஞ்சம் தோன்றியதாக காணப்படுகின்றது.



அது மட்டுமின்றி காலம் என்பது வட்ட வடிவில் பயணம் செய்யும் என்பதால் இது மீண்டும் சுருங்கி, மீண்டும் விரிவடையும் என்றும் நம்முடைய முன்னோர்கள் வகுத்த இந்த நூல்கள் விவரிக்கின்றன.

சரஸ்வதி நதி கி.மு 2000 - க்கு முன்னரே மறைந்து விட்டது என்று பாபா அணுசக்திக் கேந்திர விஞ்ஞானிகளும், நாஸா (NASA) விண்வெளியிலிருந்து எடுத்த புகைப்படமும் காட்டியதால் ரிக் வேதத்தின் காலம் கி.மு 2000 - க்கு முந்தையது என்பது உறுதியாகி விட்டது.

அது மட்டுமின்றி துருக்கியில் கிடைத்த களிமண் க்யூனிபார்ம் கல்வெட்டில் ரிக் வேதத்தில் தெய்வங்கள் எந்த வரிசைக் கிரமத்தில் இருக்கிறதோ அதே வரிசைக் கிரமத்தில் இருப்பதை கி.மு. 1400 ல் அன்றைய ஆய்வாளர்கள் கண்டு பிடித்தவுடன் ரிக்வேதம் கி.மு. 1400 லேயே துருக்கிவரை சென்றதும் உறுதியாகி விட்டது.

சரஸ்வதி நதி பற்றித் துதிக்கும் பாடல்கள் ரிக் வேதம் முழுதும் ஐம்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் காணப்படுகின்றன்.

எனவே ரிக் வேதத்தை எவரும் .கி.மு 2000 க்குக் குறைவாக மதிப்பிட முடியாது.

அதாவது மொஹஞ்சதாரோ, ஹரப்பா நாகரீகத்துக்கு முந்தையது நம்முடைய வேதகால நாகரீகம் என்பது உறுதியாகின்றது.

அப்படிப்பட்ட பழமையான வேதம் என்ன கூற வருகின்றது என்பதை அறிவதற்கு முன்னர்

வேதம் என்றால் என்ன? என்று அறிவதும் அவசியம்.

வேதம் என்பது உயர்வான அறிவு என்று பொருள் கொள்ளப்படுகின்றது.




வித் என்ற வடமொழிச் சொல்லை வேராகக் கொண்டு **"வித்யா"** வித்தை, வேதம் என்று வந்தது.

“**வித்**” என்றால் சமஸ்கிருதத்தில் அறிதல் என்று பொருளாகும்.

வேதங்கள் என்பதற்கு ”**உயர்வான அறிவு**” என்றும் பொருள்படும்.

இந்த உயந்த அறிவை நல்கும் வேதம் எதன் அடிப்படையில் பழமையானது என்று இன்றைய நவீன ஆய்வாளர்கள் ஆராய்ந்ததின் விளைவாக அவர்கள் அறிந்து கொண்ட விஷயங்கள் கி.மு. 5000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பாலைவனத்தில் பசுமை பொருந்திய ஒரு நாகரீகம் இருந்துள்ளது என்றும், அது குஜராத்தின் கட்ச் மாவட்டத்தின் தலை நகரமான புஜ் நகரில் இருந்து 200 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் **காதிர் பேட்** என்ற தீவில் உள்ள **தோலா விரா** என்ற கிராமத்தை உள்ளூர் மக்களால் “**கோட்டா திம்பா**” என்று அழைக்கப்படுகின்ற இடத்தில் அசாதாரணமான வரலாற்றை கொண்ட “**சிந்து சமவெளி நாகரீகம்**” இருந்துள்ளது என்பதற்கான சான்றுகள் கிடைத்தன.

இந்தியத் தொல்லியல் ஆய்வகமும், காந்திநகரில் உள்ள ஐ.ஐ.டி குழுவினரும் நடத்திய ஆய்வில்,

தோலா விராவில் மிகப்பெரிய நீர் சேமிப்பு கட்டமைப்பு இருந்தது கண்டறியப்பட்டுள்ளது.



கட்ச் பகுதியில் உள்ள தோலா விரா மற்றும் அகமதாபாத் அருகே உள்ள லோத்தல் ஆகிய நகரங்கள் **“ஹரப்பா நாகரிகம்”** என்று அழைக்கப்படும் சிந்து சமவெளி நாகரிகத்தின், இன்றைய குஜராத்தில் அமைந்துள்ள, முக்கிய இடங்களாகும்.

சிந்து சமவெளி நாகரிகம் கி.மு 3000 முதல் கி.மு 1500 வரை விளங்கியதாக இந்திய தொல்லியல் ஆய்வகம் கூறினாலும், இது சுமார் 6,000 ஆண்டுகளுக்கு முன்பே இருந்ததாக முனைவர் **“சமர் கண்டு”** தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

பேராசிரியர் ஷிண்டேவும் சிந்து சமவெளி நாகரிகம் 5,000 ஆண்டுகளுக்கும் மேலான தொன்மையை உடையது என்கிறார்.

"ராக்கிகார்ஹி மற்றும் பிற பகுதிகளில் சமீபத்தில் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த தகவல் சிந்து சமவெளி நாகரிகம் குறைந்தது 5,500 ஆண்டுகள் பழமையானது என்பதை உணர்த்துகிறது," என்கிறார் ஷிண்டே.



மத்திய ஆசியாவில் இருந்து வந்த ஆரியர்கள் படையெடுப்பே சிந்து சமவெளி நாகரிகம் அழியக் காரணம் என்று பிரிட்டன் ராணுவ அதிகாரியும், தொல்லியல் ஆய்வாளருமான சர் எரிக் மார்டிமர் வீலர் கூறுவதை மறுக்கும் ஷிண்டே, இயற்கைச்

சீற்றமே அந்த நாகரிகம் அழியக் காரணம் என்கிறார்.

இது போன்ற சில அறிஞர்கள் சரஸ்வதி நதிதீர ஆய்வு செய்து, விஞ்ஞான முறையில், வேதத்தின் காலத்தை நிர்ணயித்துவிட்டதாகவும். அதாவது கி.மு. 2000 க்கும் முன்னர்தான் இருக்க முடியும். சிந்துவெளி நாகரீகத்துக்கு முந்தியோ அல்லது சமகாலத்தானதோ இருக்கலாம் என்று கூறினார்கள்.

ஆனால் இதற்கு முன்னரே ஹெர்மன் ஜாகோபி, பாலகங்காதர திலகர் ஆகியோர் வானசாஸ்திர முறைப்படி ஆராய்ந்து கி.மு 4000 அல்லது அதற்கு முன் என்று சொன்னார்கள்.

1. அதிதி காலம் (கி.மு. 6000-4000)
2. மிருகசீரிஷ காலம் (கி.மு. 4000-2000)
3. கிருத்திகை காலம் (கி.மு. 2500-1400)
4. கடைசி காலம் (கி.மு. 1400-500).

இவ்வாறு, திலகர் வேதகாலத்தை நான்கு பிரிவுகளாகக் கொள்கிறார். மேலும், வேத-ஸம்ஹிதைகளிலும், கிரந்தங்களிலும் ஜோதிடம் பற்றிய பல குறிப்புகள் கிடைத்திருக்கின்றன.

அவற்றை ஆதாரமாகக் கொண்டு லோகமான்ய பால கங்காதர திலகர், ஜெர்மானிய அறிஞர் யாகோவி ஆகிய இருவரும் தனித்தனியே வேதத்தின் ஆரம்ப காலம் கி.மு. 4000 என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.



மகாராஷ்டிரத்தில் புகழ்மிக்க ஜோதிடராக விளங்கிய பாலகிருஷ்ண தீட்சிதர், சதபத கிரந்தத்தைக் கொண்டு ஜோதிடபூர்வமான ஆராய்ச்சி நடத்தி ரிக்வேத காலம் 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று உறுதிப்படுத்துகிறார்.

இது திலகர் குறிப்பிட்ட காலத்துக்கும் சிறிது முற்பட்டது. திலகர் ரிக்வேதத்தைக் கொண்டு பல ஆராய்ச்சிகள் நடத்தி, பல பிரமாணங்களை சேகரித்தார். அவற்றை ஆதாரமாகக் கொண்டு அவர் கூறுகிறார்: வசந்த காலத்தில் மிருகசீரிஷ நட்சத்திர நாளில் ரிக்வேதம் தோன்றியது.

தைத்திரீய ஸம்ஹிதையின் படி, பால்குன (பங்குனி) பவுர்ணமியன்று வருஷப் பிறப்பு கொண்டாடி வந்திருக்கிறார்கள். ஆகவே, தேவர்களின் தாய் அதிதியின் காலம் இந்தியப் பண்பாட்டின் மிகப் பழமை பொருந்திய காலமாக இருக்க வேண்டும் என்றும் அது கி.மு. 6000-4000 இரண்டுக்கும் இடைப்பட்ட காலமாக இருக்க வேண்டும் என்றும் திலகர் கூறுகிறார்.

ஆனால் மகா சூத்ரங்கள் குறிப்பிட்டுள்ள துருவ நட்சத்திரத்தின் தோற்றத்தை ஆதாரமாகக் கொண்டு வேதகாலத்தை கி.மு. 4000 என்று ஜெர்மன் அறிஞர் யோகோவி அறுதியிடுகிறார்.

இது, பலருக்கும் புரியாத விஷயம் என்பதால் எதிர்ப்பும் இல்லாமல் ஆதரவும் இல்லாமல் அந்த வாதம் ஒரு புறம் ஒதுங்கிவிட்டது.

இது போன்று வரலாற்று அறிஞர்கள் வேதங்கள் தோன்றிய காலத்தைப் பற்றிக் கூறும்போதும் அவர்களுக்குள் கருத்து வேறுபாடுகள் எழுகின்றன. வரலாற்றுப் பார்வையில் வேதங்களை ஆராய்ந்த மேல்நாட்டு அறிஞர்களும், இந்திய அறிஞர்களும் வேத காலத்தை நிர்ணயிக்க முயன்றிருக்கிறார்கள்.



மாக்ஸ்முல்லர் என்ற அறிஞர் வேதங்களில் பழமையானது ரிக் வேதம், அது தோன்றிய காலம் கி.மு. 1200 என்று நிர்ணயம் செய்தார். ஆனால், சில அறிஞர்கள் மாக்ஸ்முல்லர் வேதத்துக்கு நிர்ணயித்த காலம் தவறு என்று கூறி அவரது காலத்திலேயே அவர் சொன்ன கி.மு 1200

என்பதற்கு பலரும் கடும் எதிர்ப்பு தெரிவிக்கவே அவர் தன்னுடைய கருத்தினை மாற்றிக் கொண்டு, நான் சொன்னதெல்லாம், இதற்கு கீழாக வேதத்தின் காலத்தை யாரும் குறைக்கமுடியாது என்று சொன்னேனே தவிர இதுதான் முடிவு என்பதல்ல, வேதத்தின் காலம் 5000 ஆண்டுகளுக்கு முன்னரும் இருக்கலாம் என்று சமாளித்து தப்பித்துக் கொண்டார்.

இந்தியப் பண்பாட்டுப் பராம்பரியத்தைப் போற்றும் அறிஞர்கள், வேதங்களின் காலத்தை நிர்ணியக்கும் விஷயத்தில் மௌனமாக இருக்கிறார்கள். அவர்கள் இதைப் பற்றி பேச விரும்புவதில்லை.




வேதங்கள் அபௌருஷம் (மனித சக்தி தவிர்த்த வேறோர் மேலான சக்தி) என்பதிலேயே அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். வேத காலத்து மகரிஷிகள் வேத மந்திரங்களைக் கண்டறிந்தவர்களே தவிர,

படைத்தவர்கள் அல்லர் என்பது இவ்வகை அறிஞர்களின் ஒருமித்த கருத்து.

சரி, ஏன் இந்த வேதத்தை இவ்வளவு முக்கியமாக ஆராயவேண்டும் என்ற சந்தேகம் சிலருக்கு வரலாம். இந்த பிரபஞ்சத்தின் தோற்றமும், முடிவும் இந்த வேதத்தின் வாயிலாகவே அறிந்து கொள்ள முடியும் என்பதினாலும், உண்மையில் வேதம் எதைக் கூற வருகின்றது என்பதையும், அதில் இறைவன், இறைவழிபாடு, சமயம், சாங்கியம், மற்றும் சனாதன தர்மத்தின் ஒட்டுமொத்த பெருமைகளையும் இந்த வேதத்தினாலேயே அறிந்து கொள்ள முடியும் என்பதினாலேயும் இந்த நீண்ட ஆராய்ச்சி தேவைப்படுகின்றது.

இந்த சிந்து சமவெளி பற்றிய ஆராய்ச்சியின் வாயிலாக சிந்து சமவெளி நாகரிகத்தின் காலகட்டத்தை பற்றி பல தகவல்கள் இருந்தாலும் கூட கி.மு 5,500 ல் இருந்து கி.மு 1,700 இதற்குள் அந்த நாகரிகம் பற்றிய காலகட்டம் அடங்கி விடுகிறது. ஆனால், வேதம் அதற்கு முன்பாகவே அன்றைய மக்களால் நடைமுறைப் படுத்தப்பட்டு அவர்கள் ஒரு குருவின் வாயிலாக சொல்லக்

கேட்டு, அதைக் கேட்ட சிஷ்யர்கள் பிறகு மற்றவர்களுக்கு சொல்லியவாறு நடைமுறையில் இருந்தது. அதனால் நம் தமிழ் நூல்கள் வேதத்தை '**எழுதாக்கிளவி**' என்று அழைக்கின்றது.

அதனால், நாம் இப்போது தமிழின் முதல் இலக்கண நூலான தொல்காப்பியத்திற்கு செல்வோம். தொல்காப்பியத்திற்கும் முந்தைய ஒரு பழமையான நூல் நம் தமிழ் இலக்கியத்தில் கிடையாது என்பதினால் ஆய்வாளர்கள் இந்த நூலையும் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டனர்.

தொல்காப்பியத்துக்குப் பாயிரம் தந்துள்ள புலவர் பனம்பாரனார் தொல்காப்பியர் காலத்தவர். அவர் தம் பாயிர உரையில் '**ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்**' என்று குறிப்பிடுகிறார்.

"**ஐந்திரம்**" என்பது சமஸ்கிருத இலக்கணநூல். இது பாணினி எழுதிய வடமொழி இலக்கண நூலுக்குக் காலத்தால் முற்பட்டது.

தொல்காப்பியர் காலத்தில் சமஸ்கிருத இலக்கணம் பாணினியம் தோன்றவில்லை. எனவே தொல்காப்பியர் பாணினிக்கு முந்திய நூலான "**ஐந்திரம்**" என்ற சமஸ்கிருத இலக்கண

நூலையும் அறிந்திருந்தார். மேலும், தமிழில் இருந்த 'முந்துநூல்' (அகத்தியமும்) கண்டிருந்தார்.

தொல்காப்பியம் தோன்றிய காலம் பற்றி பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்ட காலக்கணிப்பு ஏதும் இல்லை. பல்வேறு காலகட்டங்களில் பல ஆய்வாளர்கள் வெவ்வேறு விதங்களில் இதன் காலத்தைக் கணிக்க முயன்றுள்ளார்கள்.




பண்டைக்காலத்தில் பாண்டிய நாட்டில் இருந்து தமிழ் வளர்த்ததாகக் கருதப்படும் மூன்று தமிழ்ச் சங்கங்களில் இடைச் சங்க காலத்தின் இறுதியில் இந் நூல் எழுதப்பட்டதாகச் சிலர் கருதுகிறார்கள்.

இதன் அடிப்படையிலும், இறையனார் களவியல் உரை என்னும் நூலில் காணப்படும் மேற்படி சங்கங்கள் செயற்பட்ட கால அளவுகளை அடிப்படையாகக் கொண்டும், தொல்காப்பியம் கி.மு 5000 ஆண்டளவில் ஆக்கப்பட்டது என்று இவர்கள் கணித்தார்கள். எனினும் தற்காலத்தில் பெரும்பாலான ஆய்வாளர்களால் இது ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

தெ. பொ. மீனாட்சிசுந்தரம், இலக்குவனார் போன்றவர்கள் இந்நூல் கி.மு 700 ஆம் ஆண்டளவில் ஆக்கப்பட்டதாகக் கருதினார்கள். வேறு சிலர் இதன் காலத்தை கி.மு 500-க்குச் சிறிது முன்பின்னாகக் கணித்து கூறினார்கள்.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவராகப் பணியாற்றிய எஸ். வையாபுரிப்பிள்ளையும் வேறு சில வெளிநாட்டு அறிஞர்களும் தொல்காப்பியத்தின் காலத்தை மேலும் பின் தள்ளி கி.பி 3 ஆம் நூற்றாண்டு என்றனர்.

தொல்காப்பியம் பல ஆசிரியர்கள் கொண்டது என்போரின் கருத்தோ, கி.மு. 3 - ஆம் நூற்றாண்டில் தொடங்கப்பெற்று கி.பி. 5 - ஆம்

நூற்றாண்டு வரை இந்நூல் எழுதப்பெற்றது என்பதாகும்.

ஆயினும் மா. இராசமாணிக்கனார் தன் கால ஆராய்ச்சி நூலில் மணி மேகலை எழுதப்பட்ட காலம் கி. பி இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பு என்று பல்வேறு சான்றுகளுடன் எஸ். வையாபுரிபிள்ளையின் கருத்துகளை மறுத்தும், மா. இராசமாணிக்கனார் தொல்காப்பியர் காலம் கி.மு 4 - ஆம் நூற்றாண்டுக்கு முன்பு என்றும் உறுதியாக கூறுகிறார். இருப்பினும் செம்மொழி தமிழாய்வு நடு நிறுவனம் தொல்காப்பியர் ஆண்டினை கி.மு 711 என்று பொருத்தியது.

இதனால் சமஸ்கிருதமும், தமிழும் சமகால மொழிகளாக இருந்துள்ளது தெரிய வருகின்றது. மேலும், தமிழும், சமஸ்கிருதமும் கிரந்த எழுத்துக்களால் அன்றைய காலங்களில் எழுதப்பட்டு வந்தன. இதில் சமஸ்கிருதம் பேச்சு மொழியாக மட்டுமே வழக்கத்தில் இருந்து வந்தது. கிரந்த எழுத்துக்கள் என்பன தமிழர்களுக்குரியது. பிற்காலத்தில் சமஸ்கிருதத்தை ஆச்சாரியர்கள் தங்கள்

வாய்மொழியாக கூற மாணவர்கள் அதை எழுதத் தொடங்கினர்.

சமஸ்கிருதத்தை எழுதுவதற்கென்று தமிழ் கிரந்த எழுத்துக்கள் இருந்ததுப் போலவே, வடமொழியில் தேவநாகரி வடிவில் சமஸ்கிருதப் படைப்புகள் எழுதப்படுகின்றன. கிறிஸ்து பிறப்பிற்கு முந்திய ஆயிரம் ஆண்டுகளில் **"சமஸ்கிருதம் வளர்ச்சி அடைந்த மொழி"** யாக இருந்தது.



காஷ்மீர் முதல் இந்தோனேஷியா, கம்போடியா வரை நூற்றுக்கும் மேற்பட்ட மொழிகள் புழக்கத்தில் இருந்த போதிலும் சமஸ்கிருதம் அங்கெல்லாம் முக்கியமான தொடர்பு மொழியாக இருந்தது. அம்மொழியை இந்துக்களை விடவும்

பௌத்தர்களே அதிகம் பயன்படுத்தினர். ஒருவர் புத்தமதம் மற்றும் அதன் கொள்கைகள் பற்றிப் படிக்க விரும்பினால் கட்டாயம் சமஸ்கிருதம் படித்தாக வேண்டும்.

சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டுள்ளவற்றின் இலக்கியம், இலக்கியக் கொள்கைகள், பௌத்தத்தத்துவம், அளவையியல், உடற்காட்சித் திளைப்பியல், இசை, நடனம், மருத்துவம், வானியல், கணிதம், வேதங்கள் என இந்தப் பட்டியல் நீளமானது.

இதனைச் சரியாகப் புரிந்து கொள்ளும் ஒருவரால் தான் சமஸ்கிருதம் மற்ற மொழிகளுக்கு எவ்வளவு வளத்தைச் சேர்த்துள்ளது என்பதைப் புரிந்து கொள்ள முடியும்.

கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வரைக் கன்னடத்திலும் தெலுங்கிலும் பெரிய அளவில் எதுவும் எழுதப்படவில்லை. அதேநேரத்தில் இவ்விரண்டு மொழிகளுமே பேச்சு மொழியாகப் பரந்து பாரதத்தின் தெற்கே பல இடங்களில் இருந்தன என்பதையும் மறந்து விடக் கூடாது.

அவ்விரு மொழிகளும் தங்கள் மொழியில் இலக்கிய வளத்தை உருவாக்க நினைத்த போது ஏறத்தாழ சமஸ்கிருதத்தில் இருந்துதான் எல்லாவற்றையும் கடன் பெற்று உள்வாங்கிக் கொண்டு வளர்ந்தன என்பதையும் மறந்து விடக்கூடாது.

அதே நேரத்தில் அந்த மொழிகளில் பேசப்பட்ட பேச்சு வழக்கில் இருந்து எதனையும் உள் வாங்கிக் கொள்ளவே இல்லை, பேச்சுமொழி இலக்கியங்கள் அந்த மொழிகளில் தாக்கம் செய்யவே இல்லை என்பதையும் நாம் காணமுடியும்.

சமஸ்கிருதத்தில் கவிதைகள் செய்வதன் வழியாகவே புலவர்கள் தகுதி பெற்றனர். ஒரு தெலுங்குக் கவி தனது மொழியில் தானே எழுதிய ஒரு பிரதியைச் சமஸ்கிருதத்தில் எழுதப்பெற்ற பிரதியின் தெலுங்கு வடிவம் எனச் சொல்லிக் கொள்வதையே விரும்பினார். அதனை சமஸ்கிருத மொழி வேதத்தோடு தொடர்பு படுத்துவதற்காக “**அனுவேதம்**” எனச் சொல்லிக் கொண்டதையும் பார்க்க முடிகின்றது.

உண்மையில், இப்படி தனக்கென சொந்தமாக எழுத்துக்களே வைத்துக்கொள்ளாத சமஸ்கிருத மொழியில் நாம் இன்று எழுதுகின்ற அத்தனை எழுத்துக்களுமே தேவநாகரி எழுத்துக்களாகும்.

சனாதன தர்ம வழிபாட்டு முறையைப் பின்பற்றும் இந்துக்கள் அனைவர்க்கும் சமஸ்கிருதமே பொதுவான வழிபாட்டு மொழி. உலகெங்கும் உள்ள இந்து ஆலயங்களில் சமஸ்கிருத மொழி தான் வழிபாட்டு மொழி. சமஸ்கிருதம் தற்போது கர்நாடகா மாநிலத்தில் சிமோகா அருகே ஹொசஹல்லி, மத்தூர் என்ற இரண்டு ஊர்களில் பேச்சு மொழியாகவும், அலுவல் மொழியாகவும் உள்ளது.

இந்தியாவின் அலுவல் மொழிகள் பதினைந்தில் இதுவும் ஒன்றாகும்.

இந்தி, வங்காளி, குஜராத்தி, மராத்தி, காசுமீரி, அரியான்வி, நேபாளி, ஒரியா, கொங்கணி, மைத்திலி, சிந்தி, பஞ்சாபி, உருது முதலிய மேம்பட்ட பல வட இந்திய மொழிகள் பலவற்றுக்கும் இதுவே மூல மொழியாகக் கருதப்படுகின்றது.

எனினும் இந்து சமயத்தின் நான்கு வேதங்கள், பல சமய நூல்கள் உட்பட ஏராளமான தொன்மையான இந்திய இலக்கியங்கள் இம்மொழியிலேயே எழுதப்பட்டுள்ளன.

சமஸ்கிருத புராண நூல்களிலேயே - மொழிகளின் பட்டியல் ஒன்று வருகிறது. அதாவது கி.மு 3 - வது நூற்றாண்டிலேயே எழுந்த '**சமவயங்ககத்தா**' என்ற பிராகிருதத்தில் எழுதப்பட்ட சமண நூல் 18 வகை எழுத்துக்களைக் குறிப்பிடுகிறது.

அவையாவன.

1.பாம்பி

2.யவனானி

3.தோசபுரியா

4.கரோத்தி

5.புக்கரசரியா

6.போகவையா

7.பகாரியா

8.உயமித்ரகரியா

9.அக்கரபுட்டியா

10.தவனானியா

11.கிணிகையா

12.அங்காலிவி

13.கணிதாவிலி

14.காந்தவ்யவிலி

15.ஆடம்சாலிவி

16.மகாசனி

17.தமிழி

18.பொலிம்னி

இங்கே குறிப்பிடப்பட்டுள்ள எழுத்து வடிவப் பட்டியலில் தமிழி இருப்பது காண்க.

இவ்வாறு பல மொழிகள் கி.மு 3 - ஆம் நூற்றாண்டில் எழுத்து வடிவம் கொண்டு பயன் பாட்டில் இருந்த பட்டியலில் வருகின்ற நம்முடைய தாய்மொழியான தமிழுக்கு வருவோம். சமஸ்கிருத இலக்கிய உத்திகள், வடிவங்கள் வந்து சேர்வதற்கு முன்பே தமிழ் மொழி தனித்தன்மையுடன் கூடிய பல விரிவான இலக்கியங்களைக் கொண்டிருந்தது. தமிழின் தனித்துவம் அன்றும், இன்றும் மாறாமல் காக்கப்பட்டுள்ளது.

அதற்குக் காரணம், தமிழ் மொழி பரவலாக, இந்த பாரத தேசத்தைக் கடந்து வெளியே சென்ற போதும், அதில் எந்த மாற்றங்களுக்கும் உட்படாமல் அப்படியே இருந்தது என்றால், அது நம்மிடையே நாம் இந்தியர்கள் என்று கூறிக்கொள்வதில் காணப்பட்ட ஒற்றுமை ஆகும்.

தமிழில் எழுதப்பட்டுள்ள தொடக்க கால இலக்கியங்களுக்கும் சமஸ்கிருதத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அவை அனைத்தும் அந்தந்தப் பகுதியின் வாய்மொழி இலக்கியத்திலிருந்து உருவானவை. இந்த உருவாக்கத்திற்குத் தமிழ் மொழி பேசப்படும் இன்றைய பகுதிகள் மட்டுமல்லாமல் வட இந்தியாவின் பகுதிகளும் பங்களிப்புச் செய்திருக்கும் என்றே தோன்றுகிறது.

ஏனென்றால், அவை பழங்காலத் தமிழ்ச் சமூகத்தின் பண்பாட்டைக் காட்டுவதோடு சமஸ்கிருதம் போன்ற மற்ற மொழி மூலங்களால் சிதைக்கப்படாததாகவும், அந்தந்தக் காலக்கட்டத்தில் இருந்த மற்ற எந்தப் பண்பாட்டோடும், இலக்கியத்தோடும், ஒட்டாமல் தனக்கென ஒரு தனித்துவம் கொண்ட

மொழியாகவும் தமிழ் மொழி இன்று வரை இருக்கின்றது.

தமிழின் சங்கக் கவிதைகளை வாசிக்கும் ஒருவர் தமிழ் மொழி பேசும் மக்களின் பல்வேறு பட்ட பிரிவுகளோடும், அவர்களின் வாழ்க்கை முறைகளோடும், அவர்கள் வாழ்ந்த பகுதிகளோடும் அவைகள் தொடர்பு கொண்டனவாக இருந்தன என்பதை அறிய முடியும்.



ஏனென்றால், தமிழ் மொழி, சமஸ்கிருத மொழியின் தாக்கம் ஆரம்பிப்பதற்கு முன்னரே தனக்கென ஒரு தனி அடையாளத்தை உருவாக்கிக் கொண்டு

விட்டது. இலக்கியத்தில் மட்டுமல்லாமல் மொழியின் கூறுகளான எழுத்து வடிவம், உச்சரிப்பு முறை ஆகியவற்றில் தமிழ் மொழி தனித்தன்மை கொண்டிருந்ததோடு தக்க வைத்துக் கொள்ளக் கூடியதாகவும் இருந்தது.

தமிழ் மொழியின் பழமையை பறைச்சாற்றும் வண்ணம் தற்பொழுது **கோர் ரோரி** (KHOR RORI) என்ற ஓமன் நாட்டுப்பகுதியில் கண்டுபிடிக்கப்பட்ட ஓட்டுச்சில்லுவில் பழங்காலத்து தமிழ் எழுத்து வடிவங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.






இந்த ஓட்டுச்சில்லில் **"நந்தை கீரன்"** என்று எழுதப்பட்டிருக்கிறதாம்! இப்போது நாம் பேசிப்பழகி எழுதி வரும் தமிழ் எழுத்து வடிவில் இல்லாமல், மிகப் பழங்காலத்தில் தமிழ் எழுதப்பட்ட எழுத்து வடிவில் இருப்பதை

வல்லுனர்கள் தமிழ் - பிராமி என்று அழைக்கிறார்கள்.

ஆனால் மலையாளம் போன்றவை தனி வரிவடிவம் கொண்டனவாக இருந்தாலும் உச்சரிப்பில் சமஸ்கிருதத் தன்மையை உள்வாங்கியனவாக இருக்கின்றன.

இவ்வாறு, மகத்துவம் வாய்ந்த தமிழும், சமஸ்கிருதமும் இன்றைய அரசியல் மாறுபாடுகளினாலும், சில மொழி சீர்திருத்தவாதிகள் என்று கூறிக்கொள்ளும் ஒரு சிலராலும், நம் தாய் மொழியான தமிழ் மொழி நவீன மயமாக்கப்படுதலும், வேதகாலத்தில் தோன்றிய பேச்சுமொழியான சமஸ்கிருதம் தேவநாகரி வடிவில் எழுதப்படுவதும் இன்று காணப்படுகின்றன.

இப்பொழுது நம்மிடையே இருக்கின்ற தமிழ் எழுத்தின் வடிவங்கள் காலந்தோறும் சிறு சிறு மாற்றங்களைப் பெற்று, இன்று நாம் பயன்படுத்தும் இந்த நிலையை அடைந்திருக்கின்றன.

எழுத்தில் திடீரென நிகழ்ந்த ஒரு மாற்றத்தையும் அதை அறிந்து திகைத்துப்போன இன்றைய

காலத்திலேயே நாமும் வாழ்கின்றோம் என்பதும் இன்று காணமுடிகின்றது.

| பழைய வடிவம் | சீர்திருத்த வடிவம் |
|---|---|
| ணா | ணா |
| ணை | ணை |
| ணொ | ணொ |
| ணோ | ணோ |
| லை | லை |
| ளை | ளை |
| றா | றா |
| றொ | றொ |
| றோ | றோ |
| னா | னா |
| னை | னை |
| னொ | னொ |
| னோ | னோ |

என்ன எழுத்துகள் எப்படி மாறின எனத் தெரியாதவர்களுக்காக இவ்வட்டவணை

நாம் உட்பட மிகப் பலரும் இம்மாற்றம் நடைபெற்று, இன்று நிலைபெற்றுள்ள இந்த காலத்தைச் சேர்ந்தவர்கள்.

அதனால் ஒரு பழைய தமிழ் நூலை நீங்கள் படிக்க முற்பட்டால் எழுத்தளவிலான சில தடுமாற்றங்களை நீங்கள் இன்று எதிர்கொள்ள நேரிடும்.



சென்ற நூற்றாண்டு முதற்கொண்டு, தினசரி பத்திரிக்கைகளுக்காக தமிழ் அச்சு ஊடகத்தின் தேவை கருதி, தமிழ் எழுத்துக்களில் தகுந்த வரிவடிவில் சிற்சில மாற்றங்களைப் பெற்றது. அம்மாற்றங்களைத் தேவை கருதித் தந்தை பெரியார் செய்த வடிவ மாற்றங்களில் **’ஐ‘** காரம் சேரும் எழுத்துகளான **ணை, லை, ளை, னை** ஆகிய எழுத்துகளின் மேல் இருந்த யானையின் துதிக்கையைப் போன்ற கொம்பினை நீக்கியதும் ஒன்று.

இத்தகைய தமிழ் எழுத்துக்களில் மாற்றங்களை ஏற்படுத்திய இவர்களைப் போன்றவர்கள் தமிழக அரசியலிலும் மிகப் பெரிய மாற்றங்களை

ஏற்படுத்தக் காரணமாயிருந்தனர். இவர்களால் மாற்றத்திற்கு உட்பட்ட தமிழக அரசியல்வாதிகளால் சமஸ்கிருதம் என்பது பிராமணர்களின் மொழி என்றும், வடமொழி என்ற ஒன்று தமிழ் நாட்டிற்கு தேவையில்லை என்றும், நாம் இந்தியர்கள் என்பதிலிருந்து விலகி, நாம் தமிழர்கள் என்ற ஒரு பிரிவினைச் சூழலை வளர்த்து விட்டனர்.

அத்துடன் நில்லாமல் சமஸ்கிருதம் என்ற மொழி, தமிழோடு எப்போதும் போட்டி போட்டுக் கொண்டே இருப்பதாக நினைக்கும் ஒரு போக்கையும், இரண்டு மொழிகளுக்கும் இடையே நடக்கும் யுத்தம் போலவும், ஆரியர்கள் மொழி சமஸ்கிருதம், திராவிடர்கள் மொழி தமிழ் என்பதுவும் இவர்களது தனிப்பட்ட பிரச்சாரமாக தமிழகம் முழுவதும் பரப்பிவிடப்பட்டது.

இது போன்ற பிரச்சாரம் கடவுள் எதிர்ப்பு கொள்கை கொண்ட ஒரு சாரரிடம் மட்டும் பரப்பிவிடப்படாமல், கடவுளை வணங்கும் மக்களிடம் கூட தமிழ் மந்திரங்கள் மட்டுமே சிறப்பு, தமிழ் முறை பூசைகள் மட்டுமே சிறப்பு

என்று கூறி, சமஸ்கிருதத்தை முழுவதுமாக முடக்க முயன்றனர்.

இத்தகைய போக்கை அறியாத சிலர் தமிழ் பற்று கொண்ட கூட்டம் என்ற போர்வையில், நாம் இந்தியர்கள் என்பதை மறந்து, நாம் தமிழர்கள் என்ற ஒரு பிரிவினைக்கு ஆளாகி, இன்றைய சூழலில் முழுக்க முழுக்க தமிழை வளர்க்கின்றோம் என்று கூறிக்கொண்டு கடவுள் எதிர்ப்பு கொள்கை கொண்டவர்களை விட கடவுளின் பெயரைக் கூறிக் கொண்டு சமய வெறியர்களாக மாறிக்கொண்டு இருக்கின்றார்கள்.

அதன் தாக்கமாக இன்று கோவில்களில் பாடப்படும் வழிபாட்டு மந்திரங்களையும், அர்ச்சனை போன்ற மந்திரங்களையும் தமிழிலேயே கூற வேண்டும் என்றும், பிற பூசைகள், வேள்விகள் போன்றவைகளையும் தமிழ் மொழியில் மட்டுமே செய்ய வேண்டும் என்ற ஒரு கட்டாயக் கொள்கைகளையும் தமிழர்களிடையே பரப்பி இந்துக்கள் என்ற ஒற்றுமையை அழித்து, நான் தமிழன், நான் மலையாளி, நான் வடநாட்டவன் என்ற வேற்றுமையை தூண்டி நம்முடைய தர்மத்தை

தகர்க்க விரும்பும் தீயவர்களுக்கு துணை போகின்றனர்..

இவர்கள் இந்தியா என்ற ஒரு தாய் தான் பெற்றெடுத்த தன்னுடைய பிள்ளைகளான பல மொழிக் குழந்தைகளுக்குள்ளே வேற்றுமையை உண்டாக்கி, அந்த மொழிக் குழந்தைகளுக்குள் நீ உயர்ந்தவன், நீ தாழ்ந்தவன் என்ற பிரிவினையை தூண்டி, அந்த மொழிக் குழந்தைகள் கையினாலேயே இந்தியா என்ற தன் தாயை பல கூறுகளாக துண்டு, துண்டாக வெட்டி, பிரிவினை செய்ய முயற்சிக்கும் சூழலை உருவாக்கி, தேசப்பற்று அற்று, தன் தாய் நாட்டையே மொழி, சாதி, இனம், மதம் என்று ஏதாவது ஒரு காரணத்தைக் காட்டி பிரிவினையை உண்டாக்கி விடவேண்டும் என்பது இவர்களது நோக்கம் ஆகும்.

இவர்களைப் போன்று மொழிகளினால் தேச ஒற்றுமையை குலைத்து, நம்மிடையே பிரிவினைகளை உண்டாக்க துடிக்கும் நயவஞ்சகர்களான சமய வெறியர்களை நாம் அடையாளம் கண்டு, அவர்களிடமிருந்து விலகினால் மட்டுமே நமது சனாதன தர்மத்தின்

உண்மைத் தன்மையை மொழிகளைக் கடந்து நாம் அறிந்து கொள்ள முடியும்.

உண்மையில் இந்த இரு மொழிகளையும் இணைக்கும் ஒரு பாலத்தின் வாயிலாகத்தான் நாம் நம் சனாதன தர்மத்தின் எல்லைக்குள் நுழைய முடியுமே தவிர, தனி மொழியாக தமிழை மட்டும், அல்லது சமஸ்கிருதத்தை மட்டும் கொண்டு நுழைய முயல்வது என்பது, பாலத்தின் ஒரு புறம் நின்று வேடிக்கைப் பார்ப்பதற்குச் சமம் ஆகும். இதனால் பாலத்தைக் கடந்து தர்மத்தின் எல்லைக்குள் நுழைய முடியாது.

சனாதன தர்மத்தின் சத்தியத்தை முழுவதுமாக அறிய விரும்பும் எவரும் மொழிகளுக்குள் சிக்கிக்கொள்ளாமல், மொழிகளுக்கு அப்பாற்பட்டு சிந்திக்க வேண்டும்.

காரணம், இந்த மனித உடல் கிடைத்த பிறப்பால் மட்டுமே ஒருவன், பிராமணன், மற்றொருவன் சத்திரியன், சூத்திரன் என்றெல்லாம், நாம் சாதிகளால் பாகுபடுத்திப் பார்க்கின்றோம். மேலும், இவன் தமிழன், இவன் தெலுங்கன், இவன் மலையாளி, இவன் கன்னடன், இவன் வட

நாட்டவன் என்று மொழிகளினால் பிரித்துப் பார்க்க முயல்கின்றோம்.

உண்மையில், நாம் பிறப்பதற்கு முன்பு நம்முடைய நிலை, தந்தையின் உடலினுள் உள்ள விந்தணுக்களின் கூட்டத்தில் கண்ணுக்கு புலப்படாத ஒரு சிறு அணுத்துகள் மட்டுமே என்பதை மறந்து விடுகின்றோம்.

ஆனால், இந்த மனித தேகம் கிடைத்தவுடன், அந்த நிலை மறந்து, பிறப்பால், சாதி, மதம், மொழி என்ற ஒரு குறுகிய வட்டத்துக்குள் சிக்கிக் கொண்டு வெளியே வரத்தெரியாமல் தவிக்கின்றோம்.

வெளியே வரும் வழியை நம்முடைய பெரியவர்கள் கூறினலும், நம் அஹறங்காரத்தினால் அதை ஏற்க மறுக்கின்றோம்.

இந்த நிலை மாறி, எவன் ஒருவன் சுயமாக சிந்திக்க ஆரம்பிக்கின்றனோ, அவனே அனைத்தையும் கடந்து மேலே வர முடியும்.

**“யார் ஒருவன் அணுவிலிருந்து மனித பிண்டமாக வெளிப்பட்டு, இந்த அண்டத்தை அறிகின்றானோ அவனே அண்டமும்,**

**பிண்டமும் அற்ற “அகண்டம் நான்” என்பதையும் அறிகின்றான்”.**



இதை அறிந்து கொள்ள முடியாத அஞ்ஞானக்கூட்டம், சமஸ்கிருதம் என்ற மொழி பிராம்மணர்களது மொழி என்றும், பிராமணர்களால் எழுதப்பட்ட நூல்களே சமஸ்கிருத நூல்கள் என்றும், படிப்பறிவில்லாத மக்களிடையே பரப்பி விட்டுக்கொண்டிருந்தது.

ஆனால், வியாஸரோ, வால்மீகியோ, காளிதாஸனோ, ஏன், பாரவி என்ற

பல்லவர்காலத்தில் வாழ்ந்த புகழ்பெற்ற சமஸ்கிருத கவிஞன் முதற்கொண்டு இவர்கள் யாரும் பிராம்மணர்களே அல்ல.

மேலும் இன்று கூட கேரளத்தில் சிரியன் கிறிஸ்துவர்களும், ஈழவர்களும்தான் பெரும் சமஸ்கிருத பண்டிதர்களாக உள்ளனர்.

இன்னும் ஒரு சிலர் ஒருபடி மேலே சென்று, சமஸ்கிருதம் என்பது தேவமொழி, அதில் இறைவழிபாட்டு மந்திரங்களும், நூல்களுமே மட்டும் உள்ளன என்று நினைக்கின்றனர்.

ஆனால், உண்மையில் இறை மறுப்பு நூல்களும், வேத மறுப்பு நூல்களும் சமஸ்கிருத நூல்களில் அதிகம் காணப்படுகின்றன.

சமஸ்கிருதம் ஆஸ்திகர்களுக்கு உண்டான மொழி என்று ஒரு சாரர் நினைப்பதை தகர்க்கும் வண்ணம், உண்மையில் ‘இந்திய மொழிகளிலேலே நாஸ்திகம் தொடர்பான கருத்துக்களை அதிகமாகக் கொண்டிருப்பது




சம்ஸ்கிருதம் தான்' என்கிறார் நோபல் பரிசு பெற்ற அறிஞர் அமர்த்யாசென்.

**'பகுத்தறிவோடு பொருந்தாத அறிவுரைகளை முனிவர்கள் கூறினாலும் பகுத்தறிவாளர்கள் ஏற்கவேண்டியதில்லை.**

**அறிவோடு பொருந்தும் வாசகங்களை பாமரர்கள் கூறினாலும் அவர்கள் ஏற்றுக்கொள்ளலாம்'**

என்கிறது யோகவாசிட்டம் என்ற நூல் (11.18.2.3).

இதுவல்லவோ உண்மை ஞானம்.

இந்த உண்மைத் தெளிவை அறிய விரும்பாத அரைகுறை அறிவாளிகளான அஞ்ஞானிகள் வேறு

எதன் வாயிலாக, தங்களது அஹங்காரத்தை விட்டு, இந்த சனாதன தர்மத்தை அறிந்து கொண்டு அமைதியான, ஆனந்த வாழ்வு வாழமுடியும்?

எனவே, நாம் உண்மையில் மொழிகளைக் கடந்து தர்மத்தின் உள்ளே நுழைந்தால் மட்டுமே நம்முடைய பாரம்பரியம், கலாச்சாரம், பண்பாடு மற்றும் வேதம் கூறும் மெய்ஞ்ஞான உண்மைகளை அறிந்து கொள்ள முடியும்.

எனவே, நம் தர்மத்தை எந்த மொழியில் அறிந்து கொண்டால் என்ன?

அதன் உள்ளார்ந்த உண்மைத் தன்மையை புரிந்து கொண்டு பயன் பெற வேண்டும் என்பதே நல்ல நோக்கமாகும்.

அதை தமிழ் மொழியில் கூறி இருந்தால் மட்டுமே ஏற்றுக்கொள்வேன், வட மொழியில் கூறி இருந்தால் தவிர்த்து விடுவேன் என்று கூறுவது நம்முடைய அறியாமையை வெளிச்சம் போட்டு காட்டுகின்றது.

இந்த இரு மொழிகளையும் ஒன்றோடொன்று மோதவிட்டால் யாருக்கு லாபம் ?

யாருக்கு நஷ்டம் ? என்பதை யோசியுங்கள்!

இரு கண்களில் எந்த கண் சிறந்தது என்று யாராவது கேட்டால் எவ்வளவு முட்டாள்தனம்?

அதுப்போல, தமிழ் சிறந்ததா?, சமஸ்கிருதம் சிறந்ததா என்று கேட்பது கூட முட்டாள்தனமே ஆகும்.

தமிழில் இன்றைய அளவில் பல சமஸ்கிருத சொற்களை நாம் பார்க்கலாம்.

ஆனால் இன்று என்ன நடக்கிறது என்றால், மிக நுட்பமாக திட்டமிட்டு, தமிழ் என்பதை சமஸ்கிருதத்திற்கு எதிரியாக சித்தரிப்பதில் சிலர் கிட்டதட்ட வெற்றி பெற்று வருகிறார்கள்.

நம்முடைய கலாச்சாரம், கல்விமுறை, தேசஒற்றுமை மற்றும் மெய்ஞ்ஞானம் ஆகியவைகளை கண்டு மிரண்டுபோன அன்னியனான வெள்ளைக்காரன் கூட நம்முடைய தர்மத்தின் அரிய பொக்கிஷங்களான பலவற்றை மிகவும் தேடித்தேடி சேகரித்து, அந்த அரிய ஓலைச் சுவடிகளை அவனது நாட்டிற்கு கொண்டு சென்று அச்சிட்டு புத்தகங்களாக மாற்றி அவனது

கண்டு பிடிப்பை போலக் காட்டிக் கொள்ளும் அல்ப ஆசையை மட்டுமே அடைந்தான்.

ஆனால் நம்முடைய தாய் நாட்டிலேயே பிறந்து தனது தாய்க்கே துரோகம் செய்யும் அளவிற்கு இவர்கள் மாற யார் காரணம்?. அல்லது எது காரணம்? என்று சற்று நின்று நிதானமாக யோசித்து பார்க்க வேண்டும்.

நம்முடைய இந்திய மொழிகளான சமஸ்கிருதத்தையும், இந்தியையும் தமிழ் நாட்டிற்கு கொண்டுவர விடாமல், இந்த அளவிற்கு வெறுத்து தடுக்கும் இவர்கள் அந்நிய மொழியான ஆங்கிலத்தை மட்டும் ஆதரிப்பது ஏன் என்று யோசிக்க வேண்டும்?

இன்னும் நம் மண்டையில் இந்த சூழ்ச்சிகள் ஏறவில்லை என்றால், அன்று ஆங்கிலேயனுக்கும், முகமதியர்களுக்கும் நாம் அடிமைகளாக வாழ்ந்ததுபோல, இன்றும் நாம் மீண்டும் அதுபோன்ற அடிமைத்தனத்திற்கு தயாராகும் அடி முட்டாள்களாக ஆக்கப்படுவோம்.

எனவே, இந்த இணையில்லா இரு பெரும் மொழிகளின் வாயிலாக இந்தியர்களை பிரித்து

விட்டால், தாங்கள் தம் அந்நிய சித்தாந்தங்களை சிரமமின்றி இந்தியாவில் நுழைத்து, நம் பாடதிட்டத்தில் கொடுத்து, இன்றைய இளைய சமுதாயத்திற்கு நம் தர்மம் தெரியாமல் கெடுத்து, அவர்களை மிக எளிதாக தங்கள் வசம் திருப்ப முடியும் என்று பகல் கனவு காண்கின்றார்கள்.

இன்றைய காலகட்டத்தில், தமிழை மெல்ல இந்துக்களிடம் இருந்து நகர்த்தி, அது ஒரு தனி கலாச்சாரம் என்றும், ஏனைய இந்திய கலாச்சாரத்தில் இருந்து அது மாறுபட்டது என்பது போன்ற ஒரு நிஜமற்ற மாயையை கிட்டத்தட்ட உருவாக்கியும் விட்டார்கள்.

பண்டைய பாரத வரலாற்றில் மொழியின் பெயரில் எந்த போரும் நடந்ததில்லை. சனாதன தர்மமே பாரதத்தின் ஆதாரமாய் இருந்தது. நம் நாடு மொழியைச் சார்ந்து இருக்கவில்லை, தர்மத்தைச் சார்ந்தே இருந்தது. சனாதன தர்மத்தை எடுத்து செல்லும் ஊடகங்களாகவே மொழிகள் இருந்தன, அப்படி செய்த காரணத்தினால்தான் மேலும் மொழிகள் செம்மை அடைந்தன.

உண்மையில் சமஸ்கிருதத்தினால் மட்டுமல்ல, இந்தியினால் மட்டுமல்ல, ஆங்கிலத்தினால் கூடத் தமிழுக்கு என்றுமே ஆபத்தில்லை. ஏனென்றால், தமிழ் மொழி தன் தனி அடையாளத்தையும் பண்புகளையும் தொடக்கத்திலிருந்து இன்று வரை தக்கவைத்துக் கொண்டுள்ளது. அதை இனி யாரொருவராலும் ஒன்றும் செய்ய முடியாது.

மேலும், 'வடமொழியில் பல நூல்களை நம் தமிழ் நாட்டைச் சார்ந்த பல அறிஞர்கள்தான் இலக்கியச் செல்வத்தையும், சமயக் கருத்துக்களையும், கலைக் கொள்கைகளையும் விரிவாக எழுதி வைத்துள்ளார்கள்'.

அவ்வாறு வடமொழியில் எழுதி வைத்தவர்களில் தமிழ் நாட்டைச் சேர்ந்த "**தண்டி**" என்னும் புலவர் பல்லவர் ஆட்சிக் காலத்தில் காஞ்சிபுரத்தில் வாழ்ந்தவர்.

இவர் வடமொழியில் **'தண்டியலங்காரம்'** என்னும் நூலை இயற்றினார். இந்த நூலைத் தழுவித் தமிழில் தண்டியலங்காரம் என்னும் நூல் தோன்றியது. தமிழில் தண்டியலங்காரம் நூலைச் செய்த ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

ஆனால், தண்டி என்ற தமிழர் எழுதிய வடமொழி நூல்கள் மூன்று அவைகள்,

1. தண்டியலங்காரம்
2. காவ்யாதர்சம் (கவிதைக் கண்ணாடி)
3. அவந்தி சுந்தரி (வசனக் கதை)



அதுபோலவே, அத்வைத நூல்கள் பல சமஸ்கிருதத்தில் எழுதிய சங்கரர் அன்று தமிழ்நாட்டின் எல்லைக்குட்பட்ட பகுதியாக இருந்த, இன்றைய கேரளத்தில் பிறந்த தமிழர் ஆவார். மேலும், விசிஷ்டாத்வைதம் என்ற நூலுக்கு விளக்கம் எழுதிய சான்றோரான இராமானுசர் காஞ்சிபுரப் பகுதியைச் சார்ந்த தமிழர்

ஆவார். இத்துடன் பரத நாட்டியம் பற்றியும், கர்நாடக சங்கீதம் பற்றியும், சமையற்கலை முதலான பல வடமொழி நூல்களையும், தமிழ் நாட்டுக் கலைகளையும் வாழ்க்கை முறைகளையும் ஆராய்ந்த அறிஞர்களில் பலர் தமிழர்களே ஆவார்கள்.

ஆகவே, ஆஸ்திகம், நாஸ்திகம் என்று மேலும், மேலும் சமஸ்கிருதத்திலேயே பேசிக் கொண்டு சமஸ்கிருதத்திற்கு எதிராக செயல்படாமல், நம்முடைய தமிழ் மீது வைத்திருக்கும் மதிப்பும், காதலும் எந்த அளவிற்கு உண்மையானதோ, அந்த அளவிற்கு சமஸ்கிருத நூல்களை எழுதிய தமிழர்களையும் உண்மையாக நாம் ஆதரித்து, அவர்களைப் போன்றே மொழிகளைப் பிரித்துப் பார்க்காமல், எம்மொழியும் சம்மதம் என்ற நல்ல நோக்கத்தோடு, நாம் தமிழர்கள் என்று கூறுவதை நிறுத்தி விட்டு, நாம் இந்தியர்கள் என்று கூறுவதில் பெருமைப்படுவோம். மொழியின் வாயிலாக பிரித்தாளும் சூழ்ச்சிக்கு இரையாகாமல் மற்றவர்களையும் தடுப்போம்.

தமிழர்களாகிய நாம் நம் இந்திய பாரம்பரியத்தை குறித்து நிறைய ஆராய வேண்டும்.

**"எப்பொருள் யார்யார்வாய் கேட்பினும், அப்பொருள் மெய்பொருள் காண்பது அறிவு"**

எனும் வள்ளுவனின் வாக்குக்கு இணங்க, **"வடமொழி என்பது ஆரியர்கள் மொழி, தென்மொழி என்பது தமிழர்கள் மொழி**" என்று பிரிவினைவாதிகளும், அந்நிய சக்திகளும் நம்மை பிளக்க நினைப்பதை நாம் புறக்கணித்து விட்டு, உண்மையை ஆராயும் பக்குவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

நம் தமிழ் இலக்கியங்களில் உள்ள பல பொக்கிஷங்களை நாம் வெளிக் கொண்டுவர கடமை பட்டுள்ளோம். அதைப்போலவே நம் மற்றொரு கண்ணாக உள்ள சமஸ்கிருதம் எனும் மொழியையும் நாம் ஆராய்ந்து, நம் முன்னோர்களின் அறிவுச் செழுமையை கண்டு ஆச்சரியத்துடன் ஏற்றுக் கொள்ளவும் வேண்டும்.

"**சமஸ்கிருதம்**" என்பது எளிய மொழி. சம்யக் என்றால் (நன்றாக) + க்ருதம் என்றால் (செய்யப்பட்டது) = சம்ஸ்க்ருதம் என்றால், நன்றாக உருவாக்கப்பட்டது என்பதே இதன் பொருள்.

எனவே, தமிழைப் போன்றே நாம் சமஸ்கிருதம் கற்போம், இவ்வாறு சமஸ்கிருதம் கற்பதின் வாயிலாக வேதத்தின் சுய தரிசனத்தையும், நம் சனாதன தர்மத்தில் உள்ள பெருமைகளையும் அறிந்து நம்முடைய தாய்மொழியான தமிழின் வாயிலாக இன்னும் சிறப்புறச் செய்து, மொழி, இனம், மதங்களைக் கடந்து **“நாம் எல்லோரும் சமம்**”, என்ற உயந்த தத்துவத்தையும், **“இருப்பதெல்லாம் இறைவனே”** என்ற உயர் ஞானத்தையும் நாம் இனி வருகின்ற இளைய தலைமுறைக்கு கொண்டு சேர்ப்போம்.

சரி!, பிரபஞ்சம் தோன்றிய விதத்திற்கும், இதுவரை செய்த மொழி ஆராய்ச்சிக்கும் என்ன தொடர்பு என்ற சந்தேகம் உண்டாகி இருந்தால், (நிச்சயமாக உண்டாகி இருக்கும்) அதற்குக் காரணம் உண்டு.

அதாவது, இந்த பிரபஞ்சத்தின் தோற்றமும், முடிவும் தெரிந்து கொண்டால், பிரபஞ்சத்தில் நடைபெறும் மற்ற இடைப்பட்ட விசயங்களை அறிவதில் சிரமம் இருக்காது அல்லவா?.

அதனால், இந்த பிரபஞ்ச இரகசியத்தை அறிந்து கொள்ள நாம் வேதத்தையே பிரமாணமாகக்

கருதுகின்றோம். ஈஸ்வரன், ஜீவன், இந்த பிரபஞ்சம் இந்த மூன்றையும் அறியும் ஆதாரமே வேதம் ஆகும்.



அப்படிப்பட்ட வேதம் சமஸ்கிருத மொழியில் இருப்பதினால், நம்முடைய ஆராய்ச்சி மற்ற மொழிகளைக் காட்டிலும் சமஸ்கிருதத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து ஆராயப்படுகின்றது.

மற்ற மொழிகளில் இல்லாத சிறப்பு இந்த சமஸ்கிருதத்தில் அப்படி என்ன இருக்கின்றது? என்று ஆராய்ந்தால், **"எழுதாக்கிளவி"** என்று அழைக்கப்பட்டு வாய் மொழியாக கேட்டு மற்ற ரிஷிகளால் கிரகித்துக் கொண்ட இந்த வேதம், வட மொழியில் ஏன் உள்ளது என்றால், நம்முடைய தமிழ் நாட்டில் தோன்றி தமிழ் மொழியில் மெய்ஞ்ஞானத்தை நமக்களித்த

திருமூலர், திருவள்ளுவர் போன்ற ரிஷிகளைப் போன்றே, வட நாட்டில் பல ரிஷிகள் தோன்றி, அவர்கள் அடைந்த மெய்ஞ்ஞானத்தை அவர்களது மொழியான வட மொழியில் பேசி, வட மொழியில் கொடுத்துள்ளனர். அந்த வகையில், இந்த வேதத்தை அவர்கள் எழுத்து வடிவம் பெறாத மொழியாக பேசி வந்த காலத்தில், அவர்கள் அறிந்த வட மொழியிலேயே இந்த வேதத்தை கொடுத்துள்ளனர். இதனைத் தமிழ் இலக்கண உரையாசிரியர்கள் **ஆரியம்** என்றும், **வடமொழி** என்றும் குறிப்பிடுகின்றனர்.

**வடமொழி** என்பது பிராகிருதம் (Prakrits), சமஸ்கிருதம் (Sanskrit) போன்ற மொழிகளுக்கு கொடுக்கப்பட்ட பொதுப் பெயர். தமிழகத்திற்கு வடக்கில் இவை பேசப்பட்டதால் இவற்றை வடமொழி என்று தமிழில் பொதுவாகக் குறித்தனர்.

தொல்காப்பிய உரை ஆசிரியர்களுள் ஒருவரான தெய்வச்சிலையார் என்பவர் தொல்காப்பியத்தில் குறிக்கப்படும் வடசொல்லுக்கு உரை எழுதுகையில் பாகத (பிராகிருதம்) மொழிகளை வடசொல்லுக்குரிய மொழிகள் என

வலியுறுத்துகிறார். இன்னும் சில ஆய்வாளர்கள் தொல்காப்பியம் கூறும் வடசொல் என்பது பாகத மொழிகளையே குறிக்கும் எனவும் கூறியுள்ளனர்.

தொல்காப்பிய உரையாசிரியர்களில் மற்றொருவரான இளம்பூரணரும், நன்னூல் உரையாசிரியர்களும் தமிழ் பேசப்பட்ட நிலத்தை அடிப்படையாக அமைத்துப் பாகுபடுத்தப்பட்டுள்ள நான்கு வகைப்பட்ட சொற்களில் ஒன்றான வடசொல்லுக்கு இலக்கணம் கூறும்போது ஆரிய மொழி என்றும், அதனைக் குறிக்கும் மற்றொரு சொல்லாக வடமொழி என்றும் குறிப்பிட்டு விளக்கம் கண்டுள்ளனர்.

ஆரியர் பேசிய மொழி "***ஆரியம்***" எனப்பட்டது. அதன் சொல் தமிழில் கலக்கும் போது அந்தச் சொல் தமிழருக்கு **வடமொழி.** ஆரியம் பேசும் மக்களுக்கு அவர்கள் குறியீட்டின்படி சமஸ்கிருதம் ஆகும்.

ஆரியம் என்றாலோ, வடமொழி என்றாலோ அது பாணினி இலக்கணம் எழுதிய சமஸ்கிருதத்தைக் குறிக்காது. அவருக்கு முன்பு ஆரியர்களால் பேசப்பட்டதும், '**ஐந்திரம்**' முதலான இலக்கண நூல்களைக் கொண்டிருந்ததுமான வேத கால வடமொழியை உணர்த்தும்.

**வடமொழி** எனப்படும் சமஸ்கிருத மொழியோடு தமிழுக்குக் காலந்தோறும் தொடர்பு இருந்து கொண்டே இருப்பதைக் காண முடிகிறது. சங்கம் மருவிய காலத்தில் சமண சமயச் செல்வாக்கினால் **பிராகிருதமொழித்** தொடர்பு ஏற்பட்டது.

ஆழ்வார், நாயன்மார் காலத்திலும் சோழர் காலத்திலும் வடமொழிச் செல்வாக்கு மிகுந்தது. எனவேதான் நன்னூல் ஆசிரியர் பதவியல் என்ற இயலில் வடமொழியாக்கம் பற்றிக் குறிப்பிட்டுப் பேசுகிறார்.

கி.பி. 14 ஆம் நூற்றாண்டில் மாலிக்காபூர் படையெடுப்புக்குப் பின் தமிழகத்தின் ஒரு பகுதியை முஸ்லிம்கள் ஆண்டனர். அப்போது **அரபு**, **உருது**, **பார்சிச் சொற்கள்** தமிழில் புகுந்தன.

கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் விஜய நகர நாயக்கர்கள் தமிழகத்தின் ஒரு பகுதியை ஆளத் தொடங்கிய போது தெலுங்குச் சொற்கள் தமிழில் புகுந்தன.

கி.பி. 16 ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் மேலை நாட்டார் தொடர்பு ஏற்படவே **போர்ச்சுக்கீஸ்**, **டச்சு**, **பிரெஞ்சு**, **ஆங்கிலச்** சொற்கள் தமிழில் கலந்தன.

தொல்காப்பியர் காலத்திலிருந்தே தமிழோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்ட மொழி **சமஸ்கிருதம்** எனப்படும் வடமொழியாகும்.

தொல்காப்பியர் வடக்கிலுள்ள மொழியைப் பற்றிப் பொதுவாக வடசொல் எனக் குறிப்பிடுகிறார். அதனால் இச்சொல் **பிராகிருதம்**, **பாளி** ஆகிய மொழிகளையும் குறிப்பதாயிருக்க வேண்டும் என்று **தெ.பொ.மீ.** குறிப்பிடுகிறார். செய்யுளில் இடம் பெறும் நால்வகைச் சொற்களைத் தொல்காப்பியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

- இயற்சொல் - சாதாரண எளிய சொற்கள்
- திரிசொல் - இலக்கியச் சொற்கள். ஒரு பொருள் பல சொல்லும், பல பொருள் ஒரு சொல்லும் இதில் அடங்கும்.
- திசைச்சொல் - கிளை மொழிச் சொற்கள்
- வடசொல்

இந்நான்கு சொற்களுள் வடசொல் என்பதனையும் சேர்த்துக் கூறுவது தொல்காப்பியர் காலத்திலேயே வடசொல் தமிழில் பெற்றிருந்த செல்வாக்கைக் காட்டுகிறது. வடசொற்களைத் தமிழில் எடுத்தெழுதுவது பற்றியும் தொல்காப்பியர் சிந்தித்துள்ளார்.

***வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ***
***எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே*** *(தொல். சொல். 395)*

***சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்***
*(தொல். சொல். 396)*

என்று விளக்குகிறார். தமிழ் மொழி மரபுக்கேற்ப மாற்றி எழுத வேண்டும் என்றும், சிதைந்து வருவனவற்றையும் ஏற்றுக் கொள்ளலாம் என்றும் குறிப்பிடுகிறார்.

நன்னூல் ஆசிரியர் வடமொழிக்கும் தமிழுக்கும் பொது எழுத்தால் ஆகியனவற்றைத் **தற்சமம்** என்றும் வடமொழிக்கே உரிய சிறப்பெழுத்தால் ஆனவற்றையும், திரிதல் முதலிய விகாரம் பெற்றுத் தமிழில் வழங்குவனவற்றையும்

**தற்பவம்** என்றும் கூறுகின்றார். வடிவம் மாறி அமைவது தற்பவம். வடிவம் மாறாதது தற்சமம். என்று இதனை தஞ்சை தமிழ் பல்கலைக் கழகத்தின் நாட்டுப்புறவியல் துறை தலைவர் **திரு. சு. சக்திவேல்,** விளக்குகிறார்.

தமிழில் ர கரமும், ல கரமும், யகரமும் சொல்லின் முதல் எழுத்தாக வருவதில்லை. இவ்வாறு வரும் வட சொற்களைத் தமிழில் எழுதும் போது,

'ர' கர முதல் சொல்லுக்கு அ, இ, உ என்பவற்றில் ஒன்றும்; 'ல' கர முதல் சொல்லுக்கு இ, உ என்பவற்றில் ஒன்றும்; 'ய' கர முதல் சொல்லுக்கு 'இ' கர உயிரும் தமிழில் வடசொல் அமையும்போது வரவேண்டும் என ஒரு நன்னூல் நூற்பா (148) விளக்குகிறது.

சமண, பௌத்த சமயங்களின் தொடர்பால் வடமொழிச் சொற்கலப்பு அதிகமாயிற்று. சங்க இலக்கியங்களில் பல வடமொழிச் சொற்களைக் காண முடிகின்றது. **கலித் தொகையிலும்**

**பரிபாடலிலும்** வடமொழிச் சொற்கள் நிறைய உள்ளன

| | | | | |
|---|---|---|---|---|
| ஆதி | (குறுந்தொகை, | 293 | : | 4), |
| யாமம் | (திருக்குறள், | | | 1) |
| அரமியம் | (குறுந்தொகை, | 6 | : | 1) |
| நேமி | (அகநானூறு, | 122 | : | 5) |
| ஆரம் | (கலித்தொகை, | 105 | : | 9) |
| காரணம் | (கலித்தொகை, | 79 | : | 12) |
| கமலம் | (கலித்தொகை, | 60 | : | 12) |
| போகம் | (பரிபாடல், | 2 | : | 14) |
| மிதுனம் | (பரிபாடல், | 5 | : | 79) |
| அவுணர் | (பரிபாடல், | 11 | : | 6) |
| அங்குசம் | (திருமுருகாற்றுப்படை, | | | 59) |
| உரோகிணி | (திருமுருகாற்றுப்படை, | | | 110) |
| சாலேகம் | (நெடுநல்வாடை, | | | 163) |
| பாக்கியம் | (நெடுநல்வாடை, | | | 125) |
| யவனம் | (திருக்குறள், | | | 1141) |
| யூபம் | (புறநானூறு, | 56 | : | 18) |
| | (புறநானூறு, | 15 | : | 21) |

| | | | | |
|---|---|---|---|---|
| சாவகர் | (சிலம்பு. | 15 | : | 190) |
| சாரணர் | (சிலம்பு. | 15 | : | 192) |
| தானம் | (சிலம்பு. | 15 | : | 43) |
| தருமம் | (சிலம்பு. | 10 | : | 163) |
| ஞானம் | (சிலம்பு. | 15 | : | 42) |
| விஞ்சை | (சிலம்பு. | 15 | : | 36) |
| இயக்கி | (சிலம்பு. | 15 | : | 116) |
| இந்திரன் | (சிலம்பு. | | | 5) |
| அந்தி | (சிலம்பு. 4) | | | |

சிலப்பதிகாரத்தில் காணப்படும் சில வடசொற்கள் மேலே வருவன.

**மணிமேகலையில்** காணப்படும் சமஸ்கிருதச் (வட மொழி) சொற்கள் பின்வருவன:

கருமம்

பாவனை

கந்தன்

நரகர்

அநித்தம்

துக்கம்

கி.பி. 7 - ஆம் நூற்றாண்டிலிருந்தே சமஸ்கிருதத்தின் உண்மையான செல்வாக்குக் காலம் தொடங்கியது; தமிழகம் சமஸ்கிருதக் கல்வியின் மையமாகத் திகழ்ந்தது. இரண்டாம் நரசிம்மனின் அவைக்களத்தில் தண்டி முனிவர் இடம் பெற்றிருந்தார். இக்காலக் கட்டத்தின் தொடக்கத்தில் செப்புப் பட்டயங்கள் சமஸ்கிருதத்தில் வெளியிடப்பட்டன.

பதினோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மணிப்பிரவாள நடை என வழங்கப்பட்ட புதிய நடை தமிழகத்தில் தோன்றியது. மணியையும் பவளத்தையும் மாற்றி மாற்றிச் சேர்த்துத் தொடுத்தாற்போல சமஸ்கிருதத் தொடர்களையும் தமிழ்த் தொடர்களையும் மாற்றி மாற்றிக் கட்டிய நடைப்போக்கு மணிப்பிரவாள நடை ஆகும்.

ஏறக்குறைய 17ஆம் நூற்றாண்டு வரை இந்நடை வழக்கிலிருந்தது. ஆழ்வார்களின் தமிழ்ப் பாக்களில் உள்ள தொடர்களைக் கொண்டு வைணவர்கள் உபநிடதங்களிலும் புராணங்களிலும் உள்ள சமஸ்கிருதத் தொடர்களை விளக்குவர்.

சைவர்களும் இந்நடையை மிகவும் எளிமைப்படுத்திக் கையாண்டனர்.

திருப்புகழிலும், வில்லிபுத்தூரார், தாயுமானவர் பாடல்களிலும் சமஸ்கிருதத் தொடர்கள் செல்வாக்குப் பெற்றிருந்தன. சாதாரண மக்களின் பேச்சுத் தமிழிலும் சமஸ்கிருதச் சொற்கள் புகுந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய முதல் தமிழ் நாவலான **பிரதாப முதலியார் சரித்திரம்** வடசொற் கலந்து எழுதப்பட்ட போக்கினைப் புலப்படுத்துகிறது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய **தமிழ் மொழித் தூய்மை இயக்கம்** குறிப்பாக வடமொழிச் சொற்களுக்கு எதிரான இயக்கமாக அமைந்தது. ஆனால் பிற இந்திய மொழிகளை ஒப்பிடும் போது தமிழ் மொழி சமஸ்கிருதத்திலிருந்து குறைவாகவே கடன் பெற்றுள்ளது.

வடசொற்களைத் தமிழில் எடுத்து எழுதும் போது சில சிக்கல்கள் எழுகின்றன. அதனை நீக்கச் சில

வழிமுறைகளும் கையாளப்படுகின்றன. அவற்றுள் குறிப்பிடத் தக்கவற்றை இங்குக் காண்போம்

(1) தமிழில் ஒலியன்கள் வருகை பெறும் முறைக்கேற்ப மாற்றி எழுதப்படுகிறது. ரகர மெய்யானது முன்னால் ‘இ’ சேர்த்து எழுதப்படுகிறது.

| | | |
|---|---|---|
| ரிஷி | - | இருடி |
| ரிஷபம் | - | இடபம் |

ஈகாரம் இகரமாகவும் ஆகரம் ஐகாரமாகவும் மாற்றம் பெறுகிறது.

| | | |
|---|---|---|
| கௌரீ | - | கவுரி |
| சீதா(சீத) | - | சீதை |

(2) வடமொழியில் உள்ள ஒலியன் தமிழ்மொழிக்கேற்பச் சமன்பாடு பெறுவது மற்றொரு முறை.

| | | |
|---|---|---|
| மாசம் | - | மாதம் |
| விஷம் | - | விடம் |

| | | |
|---|---|---|
| ஹர | - | அரன் |
| பக்ஷி | - | பட்சி - பச்சி |

(3) சில குறிப்பிட்ட இடங்களில் இடையில் உகரம் சேர்த்துத் தமிழில் மாற்றப்படுகிறது.

ஸ்ரகரா - சருக்கரை

(4) மொழி முதலில் அ, இ, உ சேர்த்து எழுதும் முறை பின்பற்றப்படுகிறது.

| | | |
|---|---|---|
| ரத்ன | - | அரத்தினம் |
| | - | இரத்தினம் |
| லட்சுமி | - | இலட்சுமி |
| லேகியம் | - | இலேகியம் |
| லோக | | உலோகம் |

(5) தமிழில் வருகை முறையில் இல்லாதபடி அமையும் வடமொழி ஒலிச் சேர்க்கைகள் இருவழிகளில் எழுதப்படுகின்றன.

1. சுரபத்தி
2. ஓரினமாதல்

ர், ல், ய் என்பனவற்றுடன் சேர்ந்து வரும் மெய்களைப் பிரிக்க **இகரச் சுரபத்தி** இடம் பெறுகிறது.

| | | |
|---|---|---|
| ப்ரஹ்மன் | - | பிரமன் |
| ப்லவ | - | பிலவ |
| பாக்ய | - | பாக்கியம் |

ஒலிச் சேர்க்கையில் இரண்டாவது ஒலி வகர அல்லது மகர மெய்யாய் இருக்குமாயின் **உகரச் சுரபத்தி** இடம் பெறுகிறது.

| | | |
|---|---|---|
| பத்மம் | - | பதுமம் |
| பக்வ | - | பக்குவம் |
| கர்மா | - | கருமம் |

**ஓரினமாதல்** முறையில் மூக்கொலி அல்லது தடையொலியாய் இருக்கும் முதல் மெய்யின் தன்மைக்கு ஏற்பவோ அல்லது இரண்டாம் மெய்யின் தன்மைக்கு ஏற்பவோ ஓரினமாகும் அமைப்பு பின்பற்றப்படுகிறது.

| | | |
|---|---|---|
| சிம்ஹம் | - | சிம்மம் |
| கன்யா | - | கன்னி |
| அக்ஷா | - | அக்கம் |
| புஸ்தக் | - | புஸ்தகம் |
| கஷ்டம் | - | கட்டம் |
| கர்மா | - | கம்மம் |

(6) மெய்யொலி இழக்கப்படுதலும் சில இடங்களில் மெய்யொலி இரட்டித்தலும் என ஒருமுறை பின்பற்றப்படுகிறது.

| | | |
|---|---|---|
| ஸ்ரமண | - | சமண |
| மாணிக்யம் | - | மாணிக்கம் |

திராவிடர்களின் தொடக்கக்கால அண்டை மொழிகள் முண்டா மொழிகளாகும். எனவே அவற்றின் செல்வாக்கைப் பழந்தமிழில் காண முடியும்.

tabeg, tapah ஆகிய சொற்களிலிருந்து தவக்காய், தவளைக்காய், தவளை ஆகிய சொற்கள் வந்தன. கத்தரிக்காய் என்ற பொருளில் பயன்படும்

வழுதுணங்காய் என்ற சொல்லும் இம்மொழியிலிருந்து வந்ததாகும்.

ஆஸ்ட்ரிக் மொழிகளிலுள்ள **niyor** என்ற சொல்லிலிருந்து முதிராத தேங்காயிலுள்ள இனிய நீராகிய **இளநீர்** என்ற சொல் வந்திருக்கக்கூடும் என்று கருதப்படுகிறது. **misei, bisai** என்னும் ஆஸ்ட்ரிக் மொழிச் சொற்களிலிருந்து மீசை, வீசை என்னும் சொற்கள் இடம் பெற்றன.

மிகுதியும் வழக்கில் உள்ள எதிரொலிச் சொற்களையும் (echowords) முண்டா மொழிகளிலிருந்தே பெற்றோம்.

| | | |
|---|---|---|
| சாப்பாடு | - | கீப்பாடு |
| பணம் | - | கிணம் |
| வீடு | - | கீடு |

என்பனவற்றில் எதிரொலிச் சொல்லான இரண்டாவது சொல் பொருள் முக்கியத்துவம் பெறவில்லை. ஆனால்,

சம்பளம் - கிம்பளம்

என்ற எதிரொலிச் சொற்களில் இரண்டாம் சொல் இலஞ்சமாக முறையின்றிப் பெறும் பணமான கையூட்டைக் குறித்து நின்று பொருள் முக்கியத்துவம் பெறுவதைக் காணலாம்.

மராட்டியர்கள் கி.பி. 1766 முதல் 1800 வரை தமிழகத்தை ஆண்டு வந்தனர். **சரபோஜி** என்ற மராட்டிய மன்னர் தஞ்சாவூரில் **சரஸ்வதி மகால்** என்ற நூலகத்தை ஏற்படுத்தி வடமொழி, மேலை நாட்டு மொழிகள், மராத்தி, தெலுங்கு, தமிழ் ஆகிய மொழிகளின் நூல்கள் பலவற்றைத் திரட்டி வைத்துப் பெருமை சேர்த்தார். தமிழில் 55 மராத்திச் சொற்கள் இடம் பெற்றிருப்பதாகத் **தமிழ்ப் பேரகராதி** கூறுகிறது.

இவற்றுள் 23 சொற்கள் இன்றும் பேச்சு வழக்கில் உள்ளன. தமிழில் வழங்கும் பல மராத்திச் சொற்கள் உணவு வகைகளைப் பற்றியவையாகும்.

சேமியா

கிச்சடி

கசாயம்

பட்டாணி

கோசும்பரி

வாங்கி

ஸொஜ்ஜி

முதலியன உணவு பற்றிய சொற்கள்

கங்காளம்

கிண்டி

ஜாடி

சாலிகை

குண்டான்

முதலியன சமையல் பாத்திரங்கள் பற்றியவை.

கண்டி

சாகி

லாவணி

அபங்கம்

டோக்ரா

முதலியன இசை தொடர்பான மராத்திச் சொற்களாகும்.

காமட்டி

கைலாகு

வில்லங்கம்

சாவடி

கோலி (சிறுவர் விளையாட்டு)

அபாண்டம்

கில்லாடி

இண்டி மாமா

கலிங்கம்

கொட்டு

சந்து

சலவை

ஜாஸ்தி

சுங்கு

சொண்டி

தடவை

தரகரி

திமிசு

நீச்சு

பீருடை

போன்ற சொற்களும் கலந்துள்ளன.

திராவிட மொழிகளுள் ஒன்றான தெலுங்குடன் தமிழுக்கு நீண்ட காலமாகத் தொடர்பு உண்டு. சோழர்களது வெற்றியாலும் திருமண உறவாலும் தெலுங்குச் சொற்கள் தமிழில் புகுந்தன. விசய நகரப் பேரரசின் சிற்றரசர்களான நாயக்கர்கள் ஆட்சி மதுரையில் நடைபெற்றபோது தெலுங்கு மொழி சிறப்புற்று விளங்கியது. தமிழ் நாட்டிற்கு ரெட்டியார்களும் நாயக்கர்களும் வந்து குடியேறியதால் தெலுங்குச் சொற்கள் தமிழில் புகுந்தன. தமிழ்ப் பேரகராதி 325 சொற்கள் தெலுங்கிலிருந்து தமிழுக்கு வந்ததாய்க் குறிப்பிடுகிறது.

**இரளி**, **உப்பசம்**, **சளிப்பு**, **கலிங்கம்**, **சொண்டி**, **கத்தரி**, **கடப்பாரை**, **ராயசம்**, **தரகரி**, **சேந்திரவர்**, **கம்பத்தக்காரர்**, **குப்பம்**, **ரெட்டியார்**, **பட்டர்**, **கோமட்டி** முதலிய சொற்கள் சான்று. **அக்கடா**, **அட்டி**, **அண்ணு**, **டாப்பு**, **துரை**, **பெத்த**, **தீவட்டி**, **ஜாடி**, **ஜதை**, **தண்டா**, **களுபு**, **கட்டடம்**, **கலப்படம்**, **உருண்டை**, **சொக்கா**, **திப்பி**, **தோத்தி**, **பட்டறை**, **பலப்பம்**, **சந்து**, **ரவிக்கை**, **ராவடம்**, **ரேக்கு**, **லாகிரி**, **உத்தி**, **உம்மச்சு**, **ஒட்டாரம்**,

**ஒயில்**, **கந்தை**, **கண்ணராவி**, **கபோதி**, **கம்பத்தம்**, **கம்பல்**, **கரிசை**, **கவுளி**, **காட்டம்**, **கும்பு**, **கெடுவு**, **கொப்பி**, **கொலுசு**, **சந்தடி**, **களிப்பு**, **சிட்டிகை**, **சிமிளி**, **தோபத்தி**, **பவிசு**, **வாணலி**, **ஜப்பை**, **அடாதுடி**, **அப்பட்டம்**, **ரம்பம்**, **காயம்**, **கொடுக்கு**, **தெம்பு**, **நமுத்தல்**, **ஜாஸ்தி**, **பத்தர்**, **அட்டபணை**, **சாம்பார்**, **சரவடி**, **பேட்டை**, **ரசவாங்கி**, **வில்லங்கம்** போன்றவையும் தெலுங்கிலிருந்து தமிழுக்குப் பெறப்பட்ட சொற்களே ஆகும்.

தமிழகம் கன்னட மொழியுடன் பழங்காலத்திலிருந்தே தொடர்பு கொண்டுள்ளது. விசய நகர அரசாட்சியின் கீழ் சிலர் தெலுங்கு நாட்டைச் சேர்ந்தவர்களாகவும் சிலர் கன்னட நாட்டைச் சேர்ந்தவர்களாகவும் இருந்தனர். ஹொய்சளர்கள் சோழ நாட்டைக் கைப்பற்றி ஆண்ட காலத்தில் கன்னடம் உச்சநிலை அடைந்து செல்வாக்குப் பெற்றிருந்தது. **அட்டிகை**, **இதா**, **எகத்தாளம்**, **சமாளித்தல்**, **சொத்து**, **பட்டாக்கத்தி**, **ஒது**, **இட்டளம்**, **குலுக்குதல்**, **குட்டு**, **கெம்பு**, **தாண்டல்**, **எட்டன்** போன்றன சான்றுகள்.

**தமிழ்ப் பேரகராதி** 38 கன்னடச் சொற்கள் தமிழில் புகுந்தவை என்று குறிக்கிறது.

மேற்குறிப்பிட்டவை தவிர, இந்தி, உருது போன்ற மொழிகளிலுள்ள சொற்களும் கலந்துள்ளன.

குமரகுருபரர் காசியில் சில காலம் வாழ்ந்தார். எனவே அவரது பாடல்களில் இந்திச் சொற்கள் காணப்படுகின்றன. மத்திய அரசாங்கப் பொது மொழியாக இந்தி இருப்பதனால் வழக்குத் தமிழிலும் அதன் தாக்கம் காணப்படுகிறது.




நயாபைசா (புதுக்காசு)

காதி (கைத்தறித் துணி)

நவாபுகள் ஆட்சிக் காலத்திலும், ஆங்கில ஆட்சியின் பொழுதும் நிர்வாகத் தொடர்பான பல உருதுச் சொற்கள் வழக்கில் இருந்தன. இன்றும் அவை வழக்கில் உள்ளன. தமிழில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட உருதுச் சொற்கள் கலந்துள்ளன எனத் தமிழ்ச் சொற்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

**நசர்**, **சராய்**, **கோரி**, **கெடுபிடி**, **கெழுவு அல்லது கெவு**, **கைதி**, **சப்பரம்**, **சராசரி**, **செலாவணி**, **சாட்டி**, **சாமான்**, **சாலேசுரம்**, **சீனி**, **சுக்கான்**, **சேடை**, **சீட்டு**, **தயார்** போன்றவை அவற்றுள் சில ஆகும்.

தமிழில் போர்ச்சுகீசு, ஆங்கிலம், உருது, அரபி முதலிய அயல்மொழிச் சொற்கள் சில கலந்துவிட்டது போலவே, பாகத (பிராகிருத) மொழிகளில் ஒன்றான பாளி மொழியிலிருந்தும் சில சொற்கள் கலந்து காணப்படுகின்றன.

புத்த பிக்ஷுக்கள் பொது மக்களுக்குப் பாளிமொழி நூலிலிருந்து மத உண்மைகளைப் போதித்த போது, சில பாளிமொழிச் சொற்கள் தமிழில் கலந்து விட்டன.

இவ்வாறே, அர்த்த மாகதி என்னும் வேறு பாகத மொழிச் சொற்களும், சம்ஸ்கிருதமொழிச் சொற்களும் ஆருகத மதத்தவராகிய ஜைனர்களாலே தமிழில் கலந்துவிட்டன. ஆருகதரும் பௌத்தரும் தமிழை நன்கு கற்றவர். அதனோடு பாகத, சம்ஸ்கிருத மொழிகளையும் பயின்றவர். இதனை

**ஆகமத்தொடு மந்திரங்கள் அமைந்த சங்கத**
**பங்கதமாப் பாகதத்தோ டிரைத்துரைத்த**
**சனங்கள்**.

என்று சமணரைப்பற்றித் திருஞான சம்பந்தர் திருவாலவாய்ப் பதிகத்தில் கூறியிருப்பதனாலும் அறியலாம்.

தமிழில் வழங்கும் பாளிச்சொற்கள் சிலவற்றைக் கீழே தருகின்றோம் :

**ஆராமம்**

பூந்தோட்டம் என்பது பொருள். பௌத்தரின் பள்ளி, விகாரை, தூபி முதலியவை இருக்கும் இடத்தைச் சேர்ந்த பூஞ்சோலைகளுக்கு இப்பெயர் வழங்கப்பட்டதாகத் தெரிகின்றது. இச்சொல் மணிமேகலையில் வந்துள்ளது.

**சமணர்**

இப்பெயர் ஜைன, பௌத்தத் துறவிகளுக்குப் பொதுப்பெயர். ஆயினும், இப்போது தமிழ்நாட்டில் ஜைன மதத்தினரைமட்டும் குறிக்கத் தவறாக வழங்கப்படுகின்றது. வடமொழியில் இது 'ஸ்ரமணர்' என்று வழங்கப்படுகிறது. இச்சொல் தேவாரம், மணிமேகலை முதலிய நூல்களில் காணப்படுகின்றது.

**சைத்தியம்; சேதியம்; தூபம்; தூபி**

இச்சொற்கள் பௌத்தர் வணங்குதற்குரிய கட்டிடங்கள், ஆலயங்கள், முதலியவற்றைக் குறிக்கின்றன. 'தூபம்', 'தூபி' என்பனவற்றை 'ஸ்தூபம்', 'ஸ்தூபி' என்னும் வடமொழிச் சொற்களின் தமிழ்த் திரிபாகவும் கொள்ளலாம். ஆயினும், பாளிமொழியிலிருந்து தமிழில் வந்ததாகக் கொள்வதுதான் பொருத்த முடையது. இச்சொற்களை மணிமேகலை, நீலகேசி முதலிய நூல்களில் காணலாம்.

**தேரன், தேரி**

இவை பௌத்தத் துறவிகளில் மூத்தவர்களுக்கு வழங்கும் ஆண்பாற் பெண்பாற் பெயர்கள்.

இச்சொற்கள் மணிமேகலை, நீலகேசி, தேவாரம் முதலிய நூல்களில் வந்துள்ளன.

**பிக்ஷு, பிக்ஷுணி**

(பிக்கு, பிக்குணி) முறையே பௌத்த ஆண், பெண் துறவிகளைக் குறிக்கின்றன. மணிமேகலை, நீலகேசி முதலிய நூல்களில் இச்சொற்கள் காணப்படுகின்றன.

**விகாரை, விகாரம்**

பௌத்தக் கோயிலுக்கும், பிக்ஷுக்கள் வாழும் இடத்துக்கும் பெயர்.

**வேதி, வேதிகை**

திண்ணை என்பது பொருள். அரசு முதலான மரங்களின்கீழ் மக்கள் தங்குவதற்காகக் கட்டப்படும் மேடைக்குப் பெயர்.

இந்த அளவிற்கு தமிழ் மொழியில் மற்ற மொழிகளின் தாக்கம் இருப்பதை அறியாத இன்றைய சிலர், தமிழ் மொழியைத் தனி மொழி என்று கூறுவதைத்தான் வேடிக்கையாக இருக்கின்றது.




நம்முடைய சனாதன தர்மத்தின் ஆணிவேராக இருக்கும் வேதம் எந்த அளவிற்கு காலத்தால் முற்பட்டது என்று அறிய விரும்பிய சில ஆராய்ச்சியாளர்கள் இன்றைய நவீன விஞ்ஞான முன்னேற்றத்தின் வாயிலாக சில தொழில் நுட்பங்களைப் பயன்படுத்தி கிரஹணக் குறிப்புகளை மட்டுமே வைத்துக் கொண்டு உலகிலேயே மிகப் பழமையான நூலான ரிக் வேதத்துக்குக் காலம் நிர்ணயம் செய்துள்ளனர்.

இந்த அணுகுமுறையை மேலும் சிலர் தீவிரமாக ஆராய்ந்ததில் இன்றைய ஆராய்ச்சியாளர்களில் ஒருவரான **உமாபாத சென்** என்பவர் ‘**ரிக்வேதகாலம்**’ என்ற புத்தகத்தின் மூலமாக பல சுவையான செய்திகளைத் தருகிறார்.

ரிக் வேதத்தில் உள்ள சூரிய கிரஹணக் குறிப்புகளை யாரும் உதாசீனம் செய்யமுடியாது. ஏ.லுட்விக் (A.Ludwig) என்பவர் இந்த கிரஹணக் குறிப்புகளை மிகவும் விரிவாக ஆராய்ந்து தனது ஆராய்ச்சிக் கட்டுரையில் ரிக் வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் (10-138-4) சூரியன் கிரஹணத்தால் பீடிக்கப்பட்டது பற்றிப் பாடியுள்ளனர். சிலர் இதை சந்திர கிரஹணம் என்று தவறாக மொழி பெயர்த்துவிட்டனர். ஆனால் முழு துதியையும் படித்தால் அது சூரிய கிரஹணம் என்பது தெளிவாகும் என்று வேதத்தைக் குறை கூறுவோரைக் கண்டித்துள்ளார்.

இதே போன்ற குறிப்புகள் பிற நாட்டு இலக்கியங்களில் வரும்போது கேள்வியே கேட்காமல் இருப்பவர்கள் ரிக் வேதம் என்று சொன்னவுடன் மட்டும் ஏன் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர்? என்று தன்னுடைய சந்தேகத்தை வெளிப்படுத்துகின்றார்.

மேலும் ரிக் வேதத்தின் நாலாவது மண்டலத்திலும் (4-28-2) ஒரு கிரஹணக் குறிப்பு வருகிறது. அங்கே இந்திரன், சோமனால்

சூரியனை மறைத்தார் என்று துதி பாடுகின்றனர். சோம என்ற சொல்லுக்கு வேதத்தில் இரண்டு பொருள் உண்டு: 1.நிலவு, 2.சோமரஸம்

இது நிலவைத்தான் குறிப்பிடுகிறது, சோம ரசத்தை அல்ல என்று பேராசிரியர் வில்லிபிராண்ட், வேதகால பழங்கதைகள் என்ற புத்தகத்தில் எழுதியுள்ளார்.

இந்திரன் இந்த கிரஹணத்துக்குக் காரணம் என்று அந்த மந்திரம் சொல்லுவது பலருக்கும் புதிராக இருந்தது. மேலும் ஸ்வர்வானு என்பதை மேகங்களென்று மொழி பெயர்த்தனர். ஆனால், சொல் பிறப்பியல் முறைப்படி ஆராய்ந்தால் சூரிய ஒளியைப் பிரதிபலிக்கும் சந்திரன் எனப் பொருள்படும்.

விஷ்ணு புராண காலத்தில் ஸ்வர்பானு என்பதை **“ராகு”** என்ற கிரகமாக மாற்றிவிட்டனர். புராணங்கள் என்பது வேதக் கருத்துக்களை எளிமைப்படுத்தி, படிப்பறிவில்லாத பாமரமக்களும் புரிந்து கொள்வதற்காக கதைகள் மூலமாக கொண்டு சேர்த்தனர்.

இந்திரன் கிரஹணத்தை உண்டாக்கியதாகவும் அத்ரி நாலாவது மந்திரத்தில் சூரியனைக் கண்டுபிடித்ததாகவும் வேதம் சொல்லும்.

இதன் பொருள் அவர் நாலு மந்திரம் உச்சரிக்கும் காலத்துக்கு சூரியன் முழுஅளவு மறைந்திருந்தது என்பதாகும்.

இந்துக்களின் சரியான கிரஹணக் கணக்கீட்டு முறைகளை லுட்விக் பாராட்டுகிறார். சூரியனின் ஒளியைத்தான் சந்திரன் பிரதிபலிக்கிறான் என்பதை வேத கால ரிஷிகள் அன்றே அறிந்திருந்தனர். இது மிகவும் அதிசயமான விஷயம் என்கின்றார்.

இந்திரனை கேட்டை நட்சத்திரத்துக்கு அதிபதி என்பர். இது இந்திரனுக்கும் கேட்டை நட்சத்திரத்திற்கும் உள்ள தொடர்பைக் காட்டுகிறது.

ரிக் வேதத்தின் 10-138-3/4 மந்திரத்தில் சூரியனின் குதிரைகளை இந்திரன் அவிழ்த்து விட்டான் என்பது சூரியனின் ஒளி குன்றி கிரஹணம் ஏற்பட்டதாகும் என்று லுட்விக் விளக்குகின்றார்.

ஐந்தாவது மண்டல (5-40) சூர்ய கிரஹணத்தை இன்னும் விரிவாகக் காட்டுகின்றது என்கின்றார்.

வேத காலத்தில் நடந்த இரண்டு சூரிய கிரஹணங்களில் ஒன்று பூரண சூரிய கிரஹணம். இந்திய அட்ச ரேகையில் நடந்த கிரஹணம் சூரியன், கேட்டை (இந்திரன்) நட்சத்திரத்தின் அருகில் பகல் நேரத்தில் இருந்தபோது நடந்தது. இந்த மாதிரியான நட்சத்திர நிலை எப்போது இருந்தது என்று வானாராய்ச்சிக் கூடத்துக்கு உமாபாதசென் எழுதிக் கேட்டபோது அமெரிக்காவிலுள்ள ஸ்மித்சோனியன் வானாராய்ச்சிக் கூடத்தைச் சேர்ந்த டாக்டர் ப்ரையன் மார்ஸ்டென், இப்படிப்பட்டதொரு நிலை கி.மு 2990 ல் இருந்தது என்று எழுதினார். ஆகவே முழு சூரிய கிரஹணத்தை கி.மு .3000 ஆண்டை ஒட்டியது என்றும், மற்ற பர்ஸ்வ கிரஹணம் பிந்தியது என்றும் தெரிகிறது.

சரஸ்வதி நதி தீர ஆராய்ச்சி, வானியல் ஆராய்ச்சி ஆகியன எல்லாம் விஞ்ஞான முறைப்படி வேத காலத்தை கி.மு. 2000 க்கு முன்னர் வைக்க உதவுவதால் மாக்ஸ்முல்லர் சொன்ன தேதியை ஒதுக்கித் தள்ளிவிடலாம்.

ரிக் வேதம் இப்போதுள்ள வடிவில் உருவாக பல நூற்றாண்டுகள் ஆனது அதிலுள்ள பல துதிகள் மூலம் தெரிகின்றன. முதல் மண்டலத்திலும் கடைசி மண்டலத்திலும் உள்ள பெரும்பாலான துதிகள் காலத்தால் பிந்தியவை என்றும் இடையிலுள்ள ஆறு மண்டலங்கள் காலத்தால் முந்தியவை என்பதும் பொதுவாக உள்ள கருத்து. 500 ஆண்டுக் காலத்தில் தோன்றிய பாடல்கள் இருக்கலாம் என்பது பலர் கருத்து.



ரிக்வேதம் என்பது கவிகளால் இயற்றப்பட்டது அன்று. வானத்தில் எப்போது முள்ள ஒலிகளை ரிஷிகள் கண்டு (மந்த்ர த்ருஷ்டா:) அளித்தனர்

என்பது இந்துக்கள் ஏற்கும் கொள்கை. ஆயினும் அதை அவர்கள் வெவ்வேறு காலங்களில் கேட்டு அல்லது கண்டு அளித்தனர் என்பதை வேதத்தில் உள்ள குறிப்புகளாலும் இலக்கண அமைப்புகளாலும் அறிய முடிகின்றது.

இதை ஒப்புக்கொள்வதால் வேதத்தில் புதியதும் பழையதும் உண்டு என்று அறிந்து அவைகளில் எது எது புதியது என்று சொல்ல முடியும். அதற்குச் சில உத்திகள் உள்ளன.




இதனால் வேதம் பற்றிய நம்பிக்கை பாதிக்கப்படாது **“சத்யம் வத”** – **“தர்மம் சர”** –

என்பதை யார் எந்த மொழியில் எப்படிச் சொன்னாலும், புதிய இலக்கணத்துடன் சொன்னாலும், பழைய இலக்கண விதிகளின்படி சொன்னாலும், வெவ்வேறு மொழிகளில் சொன்னாலும், அந்த மந்திரத்தின் பொருள் என்றுமே மாறாது.

இதனால்தான் வேதம் அனாதியானது. என்றும் உள்ளது. அதாவது அழியாத தர்மங்கள், கொள்கைகள், பண்புகள் அதிலுள்ளன.

ரிக்வேதத்திலுள்ள பத்து மண்டலங்களில் 2, 3, 4, 5, 6, 7 ஆகிய ஆறு மண்டலங்கள் குடும்ப மண்டலங்கள் (2 - க்ருத்சமடர் 3 - விஸ்வாமித்ரர், 4 - வாமதேவர், 5 - அத்ரி, 6 - பரத்வாஜர், 7 - வசிஷ்டர்) எனப்படும்.

அதாவது ஒரு ரிஷி பரம்பரையில் வந்த தந்தை, மகன், பேரன், கொள்ளுப்பேரன் என்பவர்கள் கண்டு (கேட்டு) நமக்கு அளித்தது. வேதத்தில் “மிகப்பழங்காலத்தில்”, **“முன்னோர்கள் சொன்னது”** என்றெல்லாம் வாக்கியங்கள் வருகின்றன. அப்படியானால் அந்த ரிஷிகளுக்கு முன்னதாகப் பல

தலைமுறைகள் இருந்தன என்பதை நாம் அறிகிறோம்.

அந்த வகையில் சனாதன தர்மம் என்ற இந்து மதத்தைப் பொறுத்த வரையில் வேதங்களே நமது ஆதாரமான புராதன நூல்களாக உள்ளன. அந்த வேதங்கள் அடிப்படையில் மிகப்பழமையான ரிக் வேதம் அற்புதமான கவிதைகளைக் கொண்டது.

இப்படிப்பட்ட ரிக் வேதத்தில் உலக சமாதானம், உலக மக்கள் நலம் பற்றிய பாடல் இருப்பதும், அதை, 6000, 7000 ஆண்டுகளுக்கு முன்னரே வேத கால ரிஷிகள் ஆடிப்பாடி ஆனந்தக் கூத்தாடி இருப்பது உலகையே வியக்க வைக்கிறது.

ஐக்கிய நாடுகள் சபை உருவாகும் முன்னரே இப்படி ஒரு அறிவார்ந்த சிந்தனை வேத கால நாகரீகம் சாந்த அன்றைய மக்களுக்கு எழுந்தது கண்டு இன்றைய நவீன விஞ்ஞானமே ஆச்சரியம் அடைகின்றது.

மேலும், பசு மாடு, குதிரை, டெஸிமல் சிஸ்டம், உலக மக்கள் நலம் என்பதில் எல்லாம் வேதகால நாகரீகம் முன்னோடியாக இருந்ததைக் கண்டும், அவர்கள் விஞ்ஞானத்திலும், மெய்ஞானத்திலும்

முன்னனியில் இருப்பது கண்டும் இன்றைய விஞ்ஞானிகளின் எல்லோர் மூக்கிலும் விரலை வைக்கவைத்து விட்டது.

இதைப்படித்த வெளிநாட்டு அறிஞர்கள் வேதம் பற்றிய எல்லாப் புத்தகத்திலும் இதைச் சேர்த்து வெளியிட்டனர்.

நூற்றுக்கும் மேலான அறிஞர்கள் இது பற்றி பிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கிலம், லத்தீன் மொழிகளில் உரை மற்றும் வியாக்கியானம் வாயிலாக தங்களது உண்மையான கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

அப்படி அவர்களை அசர வைத்த ரிக் வேத கவிதையில் காணப்படுகின்ற ஒரு ஸ்துதியின் பெயர் "நாஸதீய சூக்தம்" ஆகும்.

ரிக் வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் உள்ளது (10-129) இனி நாசதீய சூக்தத்தில் உள்ள அதிசய விஷயத்தைக் காண்போம்.

## நாஸதீய சூக்தம்

சரஸ்வதி நதி தீரத்தின் கரையில் 6000, 7000 ஆண்டுகளுக்கு முன்னர் உட்கார்ந்திருந்த ஒரு முனிவர் இரவு நேரத்தில் பல்லாயிரக் கணக்கான நடசத்திரங்கள் வான வீதியில் பவனி வருவதைக் கண்டார். உடனே இவை எப்படித் தோன்றின என்று ஞான திருஷ்டியில் கண்டார். அதை ஒரு பாடல் மூலம் வெளியிட்டார். அதுதான் "நாசதீய சூக்தம்" என்னும் துதி.




*(ரிக் வேதம்: பத்தாவது மண்டலம் 129 வது சூக்தம்)*

**இல்லையென்றோ உள்ளதென்றொ ஏதுமிலை**
**தொல்லுலகம் தொடுவானம் போதுமிலை**
**. மூடுபனி கூடியதோ**
**. கூடெனவே மூடியதோ**
**வல்லிருளோ வெள்ளமதோ பேதமிலை! ... 1**

(அப்போது எதுவுமே இல்லை, இல்லாமலும் இல்லை, ஏதேனும் இருந்ததுமில்லை, இல்லாமலும் இல்லை. அப்போது விண்வெளியோ ஆகாயமோ இல்லை. அதற்குப் பின்னரும் எதுவுமே இல்லை. என்ன நேர்ந்தது? எங்கே? யார் இதைக் கவனித்தார்? ஆழம் தெரியாத அளவுக்கு அப்போது தண்ணீர் இருந்ததா?)

**மரணமென்றும் மோட்சமென்றும் இல்லாதே**
**இருள்தனியே பகல்தனியே செல்லாதே**
**. அதுவொன்றே மூச்சற்றே**
**. அதிர்ந்ததுவே பேச்சற்றே**
**உருவெமென வேறெதுவும் கொள்ளாதே! ... 2**

(சாவு என்பதே அப்போது கிடையாது. மரணமில்லப் பெருவாழ்வு என்பதும் இல்லை. பகல் இரவு என்பதே இல்லை. ஆனால் ஒன்று மட்டும் உயிர்மூச்சுடன் இருந்தது. காற்றே இல்லாவிடினும் அது தனது சக்தியால் சுவாசித்துக் கொண்டிருந்தது. அதைத்தவிர வேறு எதுவுமே இல்லை.)

**இருளொன்றே இருளென்றே மூடியதே**
**உருவற்ற வெள்ளம்போல் கூடியதே**
**. ஒன்றெனவே ஓர்பொருளே**
**. தன்நிலையை ஓர்பொருளே**
**எரிதவத்தால் தன்னுள்ளே தேடியதே! ... 3**

(ஆரம்பத்தில் இருளை இருட்டு வளைத்துப் பிடித்துக் கொண்டிருந்தது. எதையும் பிரித்துக் காட்டுவதற்கு எதுவுமே இல்லை. எங்கும் தண்ணீரோ! எல்லா இடமும் வெற்றிடம். அப்போது தவ சக்தியால், தவ வெப்பத்தால் ஒன்று மட்டும் எழுந்தது. அது மாபெரும் வெடிப்பு.)

**உள்ளியதில் ஓராசை எழுந்ததுவே**
**உள்ளத்தின் மூலவித்தாய் விழுந்ததுவே**
**. தன்னிதயம் ஆயுமுனி**
**. உண்மையென மாயையென**
**உள்மனத்தின் உணர்வினிலே இழிந்ததுவே! ... 4**

(துவக்கத்தில் அதற்கு ஆசை எழுந்தது. அதுதான் மனதில் விதைக்கப்பட்ட முதல் விதை. ஒன்றுமே இல்லாததில் ஒன்று இருந்ததை ஞானத்தை நாடும் தெய்வீக கவிஞர்கள் கண்டார்கள்.)

**கதிர்பலவாய் சூனியத்தில் விரிந்ததுவே**
**அதிர்வாற்றல் அடியெனவே இருந்திடவே**
**. சந்ததிகள் உருவாக**
**. விந்தொன்றே கருவாக**
**அதிவேகம் உச்சியிலே திரிந்திடவே! ... 5**

(அந்தக் கயிறு, இணைப்பு, எங்கும் சென்றது ஆனால், கீழ், மேல் என்று ஏதாவது அப்போது உண்டா? விதைகள் தூவப்பட்டன. எங்கும் சக்தி. உயிர்த்துடிப்பு மேலும் கீழும்.)

**யாரறிவார் எங்கிருந்து படைப்பிதுவே**
**யாருரைப்பர் இதுவென்ன புடைப்பெனவே**
**. கடவுளரும் தேவருமே**
**. படைத்தபினே மேவினரே**
**யாரறிவார் எங்கிருந்த உடைப்பிதுவே! ... 6**

(யாருக்குத் தெரியும்? யார் இதைச் சொல்ல முடியும்? அது எப்போது தோன்றியது? இந்த படைப்பு என்பது எப்போது ஏற்பட்டது ? படைப்புக்குப் பின்னரே (நாம் இன்று வணங்கும்) கடவுளர் வந்தனர். அப்படி இருக்கையில் இது எப்போது தோன்றியது என்பதை எவர் அறிவார்?)

**படைப்பிதனைப் படைத்ததுவே புரப்பதுவோ**
**படைப்பிதனைப் படைத்ததுவே புரந்திலையோ**
**. பரவான வெளியினிலே**
**. அரசாளும் ஒளியவனே**
**படைப்புண்மை அறிவானோ**
**அறிந்திலையோ?...7**

(எப்போது, இந்தப் படைப்பு ஏற்பட்டது? அதுவே ஏற்பட்டதா? இல்லையா? யார் இதை மேலிருந்து கவனித்தாரோ அந்த உயர்ந்த சுவர்கத்துக்கே அது தெரியும். தெரியாமலும் இருக்கலாம். இதை இந்துக்கள் கடவுள் உலகைப் படைத்தார் என்ற கருத்தில் எடுத்துக் கொள்ளுவர். நாஸ்தீகவாதிகள் இங்கு சந்தேகம் இருப்பதாவும் எடுத்துக் கொள்ளுவர்.)

கடவுள் உண்டு, இல்லை என்ற இவ்விரண்டு ஆஸ்திக, நாஸ்திக கோணத்தில் பார்த்தாலும் இப்படி ஒரு ரிஷி முனிவருக்கு ஒரு சிந்தனை 6000, 7000 ஆண்டுகளுக்கு முன் தோன்றியதும், அதை வாய்மொழியாக 7000 ஆண்டுகளாக நம்முடைய இந்துக்கள் பாடிப் பாதுகாத்து வைத்திருப்பதும் உலக அதிசயங்களில் ஒன்றாகும்.

ஒரு விஞ்ஞானியோ, நாஸ்தீக வாதியோ, மாபெரும் பெரு வெடிப்புக்கு முன்னர் என்ன இருந்தது? அதை யார் தோற்றுவித்தார்? அவர் எப்படி வந்தார்? அல்லது அது எப்படி வந்தது? என்று கேள்வி கேட்டுக் கொண்டே போனால், இதற்கு விடையே கிடைக்காது.

ஆனால், ரிக் வேத ரிஷியோ மாபெரும் வெடிப்பை வர்ணித்துவிட்டு, இது கடவுளின் இச்சையால் ஏற்பட்டது என்று கூறுகின்றார்.



இவ்வாறு கடவுளின் இச்சையால் படைக்கப்பட்ட இந்த பிரபஞ்சம் ஒரு பலூனை ஊதிக்கொண்டே போனால் அது எப்படி பரந்து விரிந்துக்கொண்டே போகின்றதோ, அதுப்போல, இந்த பிரபஞ்சமும்

இன்று வரை எல்லையில்லாமல் விரிந்துக்கொண்டே போகின்றது. ஆகவே, இதன் இருப்பை அறியலாமே தவிர இதன் எல்லையை அறிய முடியாது. இதுபோல, சூக்தங்களை அறியலாமே தவிர முழு வேதத்தை அறிய முடியாது.

இப்படிப்பட்ட இந்த பிரபஞ்சத்தில் தோன்றியுள்ள பல கோள்களில் ஒன்றான பூமிப்பந்தில் நாம் வசிக்கின்றோம். நம்மைப் போன்றே பல உயிரினங்கள் இந்த பூமியில் பல விதமான ஸ்தூல உடல்களைக் கொண்டு வாழ்கின்றது. இதில் மனித கண்ணுக்கு புலப்படும் உயிரினங்கள் மட்டுமின்றி, கண்ணிற்கு புலப்படாத அமீபா போன்ற சூக்ஷும உயிரினங்களும் இந்த பூமியில் காணப்படுகின்றன.

இதே போன்று மேலும் சில கோள்களில் ஸ்தூல உடல்களால் மாறுபட்ட, ஸ்தூல உடல்களற்ற மற்ற சூக்ஷும உயிரினங்களும் வாழ்கின்றது என்பது உண்மை.

இதில் அறிவு என்ற ஒரு புரிதலில் மனிதன் மட்டுமே உயர்ந்த ஆறு அறிவு கொண்ட உயிரினமாகக் கருதப்படுகின்றான். அப்படிப்பட்ட

மனிதர்களில் அறிவற்ற மூடர்களும் காணப்படுகின்றனர். அது விதி விலக்கு.

இந்த அறிவுள்ள மெய்ஞ்ஞான மஹான்களால் அறிந்த, உணர்ந்த உண்மைகளை, மற்ற மனிதர்களுக்கு கொண்டு சேர்க்க விரும்பிய ரிஷிகளால் கொடுக்கப்பட்டதே இந்த வேதம்.

இந்த வேதம் கூற வரும் உண்மை என்னவெனில், கண்ணிற்கு புலப்படாத ஒரு மூல அணுவின் வெப்பத்தினால் வெளிப்பட்ட இந்த பிரபஞ்சம் பல விதமான பரிமாணங்களுக்கு உட்பட்டு இன்று காட்சிக்கு இவ்வாறு தோன்றுகின்றது.

இதில் பல கோடி ஆண்டுகளாக ஏற்பட்ட மாறுதல்களின் காரணமாக, பல கோள்களில் நிகந்த மாற்றங்களைப் போன்றே இந்த பூமியில் நிகழ்ந்த மாற்றத்தின் வெளிப்பாடாக உயிரினங்கள் முதற்கொண்டு மாற்றமடைந்த இன்றைய இந்த நாகரீகப் பூமியைக் காணமுடிகின்றது.

இதில் இயற்கையின் நியதியின்படி அனைத்து கோள்களும், ஜீவராசிகளும் இன்றளவில் அதனதற்கென விதித்த விதியின்படி (Laws) காணப்படுகின்றன. இதே பட்டியலில் மனிதனும்

இருப்பதினால், அவனது இயற்கை குணமான அறிவின் வெளிப்பாடாக தேடுதல் என்பது இன்றுவரை நீடிக்கின்றது.

சரி! இந்த மனிதர்களுக்கு மட்டுமா தேடுதல் இருக்கின்றது. அனைத்து ஜீவர்களுக்கும் தேடுதல் உள்ளன.

அனைத்தும் எதைத் தேடுகின்றன?

ஒன்றே ஒன்றுதான், **அது மகிழ்ச்சி**!.




இந்த மகிழ்ச்சிதான் தேவை என்று மற்ற ஜீவராசிகளுக்கு வேண்டுமானால் தெரியாமல்

இருக்கலாம். காரணம் அவைகளுக்கு அறிவு குறைவு.

ஆனால், பகுத்தறிவு கொண்டவன் மனிதன் என்று மார்தட்டிக் கொள்கின்றவன் கூட இதை அறியாமல் தேடுகின்றான் என்பதில்தான் அதிசயத்தைக் காணமுடிகின்றது.

உலக அதிசயங்களிலேயே இதுதான் மிகப் பெரிய அதிசயம் ஆகும்.

இந்த மகிழ்ச்சி ஒன்றையே தேடுகின்றோம் என்பதை கூட அறியாமல் எதை எதையோ தேடி, தேடியது கிடைத்தவுடன் அதனால் கிடைத்தது மகிழ்ச்சி என்பதே அவனுக்கு இன்னும் விளங்கவில்லை.

உணவைத்தேடி உணவு கிடைத்தால் முடிவு மகிழ்ச்சி.

பணத்தைத் தேடி பணம் கிடைத்தால் முடிவு மகிழ்ச்சி.

அந்த பணத்தைக் கொண்டு எதை வாங்கி அனுபவித்தாலும், அந்த அனுபவம் மகிழ்ச்சி.

உறவைத் தேடி உறவு கிடைத்தால் முடிவு மகிழ்ச்சி.

ஆலயம் சென்று வரிசையில் பலமணி நேரம் காத்துக் கிடந்து கல்லிலே கடவுளைக் கண்டால் மகிழ்ச்சி.

அஷ்டாங்க யோகங்களை அனுதினம் பயின்றாலும் அதன் விளைவு மகிழ்ச்சி.

ஆன்மீக புத்தகங்களையும், சொற்பொழிவுகளை கற்றாலும், கேட்டாலும் மகிழ்ச்சி.

தமிழ் வேதத்தை பயின்றாலும், வடமொழி வேதத்தை பயின்றாலும் கிடைப்பது மகிழ்ச்சி.

பிறந்த நாள் கொண்டாடினாலும், புத்தாடை அணிந்தாலும் மகிழ்ச்சி.

சிலருக்கு எதிரிகளின் இறப்புக்கூட மகிழ்ச்சி.

ஆக, இந்த நிலையான மகிழ்ச்சியை மட்டுமே விரும்புகின்ற அனைவரும், அந்த மகிழ்ச்சி எதில் இருக்கின்றது என்பதை அறியாமலேயே ஓடி, ஓடி, தேடி, தேடி, கிடைத்தது சிறிய மகிழ்ச்சி என்பதினால், மீண்டும், மீண்டும் மிகப்பெரிய மகிழ்ச்சியை அடைய தேடுகின்றார்கள்.

இவர்களை, அறியாமை மனிதர்கள் என்று சாஸ்திரம் அடையாளம் காட்டுகின்றது. அந்த மிகப்பெரிய மகிழ்ச்சியை, நிரந்தரமாக அடைவதற்கான வழியை உபதேசிப்பதே **“சனாதன தர்மம்”** ஆகும்.

இந்த தர்மத்தை அறிய முயற்சிக்கின்ற அனைவராலுமே இதை புரிந்து கொள்ள முடியாது. காரணம் ஒரு வகுப்பறையில் படிக்கின்ற மாணவர்களில், அனைவருமே நன்றாக படித்து புரிந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. ஒரு சிலர் மட்டுமே, முதல் மதிப்பெண்கள் பெற்று நன்றாகப் படிப்பார்கள்.



அதுப்போல, உலகில் தோன்றிய அனைத்து ஜீவர்களுக்கும் அதனதன் அறிவாலும், உடலாலும் மாறுபாடுகளை காணமுடிகின்றது.

உடலால் மாறுபாடுகளைக் கொண்ட உயிரினங்கள் அந்தந்த உடலிற்கு உண்டான அறிவையும், வயிறையும் கொண்டிருப்பதால், எறும்பு உண்ணும் உணவின் அளவும், யானை உண்ணும் உணவின் அளவும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்டு இருக்கும்.

அதுப்போல, எறும்பிடம் இருக்கின்ற அறிவை விட, யானையின் அறிவு, மாறுபட்டுதான் இருக்கும்.

இதன் அடிப்படையில் உண்ணும் உணவும், அறியும் அறிவும் மனிதனுக்கு மனிதன் முற்றிலும் மாறுபட்டுதான் இருக்கும் என்பதும் நியதி.

இதனை வைத்து ஆராய்ந்தால், மனிதன் தான் உண்ணும் உணவிலும், சுவையிலும், உணவின் அளவிலும், ஒருவருக்கு ஒருவர் மாறுபட்டு இருப்பதைப் போன்றே, மனித அறிவு என்பது எந்த அளவிற்கு உயர்ந்த அறிவாக இருக்கின்றதோ,

அதே அளவிற்கு உபயோகிக்கத் தெரியாத அறிவாகவும் சிலரிடம் இருக்கின்றது.

இதை வைத்து பார்க்கும் போது, அதிகமாக உணவை உண்ணும் மனிதன், தன் தேவைக்காக குறைவாக உணவை உண்ணும் மனிதனிடம் இருந்து கேட்டுப் பறிப்பதைப்போல, அறிவால் உயந்த மனிதன், அறிவில் குறைந்த மனிதனை ஆட்டிப்படைக்கின்றான் என்றால் அது மிகையாகாது.

அறிவில் குறைந்த அப்பாவி பாமரர்களை, அறிவால் உயர்ந்த அதிமேதாவிகள் சிலர் ஆட்டிப்படைக்கின்றார்கள் என்பதை, இன்று வரை வரலாற்று உண்மைகளாக நமக்கு இதை நிரூபித்தும் உள்ளன. எனவே ஆதாரங்கள் தேவையில்லை.

இதன் அடிப்படையில், வேதத்தை வேதவாக்காக நம்புகின்றவன் மட்டுமே நம்பிக்கை கொள்ளட்டும், வேதத்தை நம்பாதவன் அவன் மனம் போனபடி வாழ்ந்துவிட்டுப் போகட்டும்.

பிரச்சனை இங்கு அதுவல்ல.

வேதத்தை மொழி பெயர்த்தவர்களும், உரை எழுதிய உரையாசிரியர்களும், வடமொழி உரைகளுக்குள்ளேயும், மற்றும், அவரவர்களது தாய்மொழிகளில் மொழிபெயர்க்கும் போதும் எவ்வளவோ முரண்பாடுகளை கொடுத்துள்ளனர்.

அதைப் போலவே, தமிழில் திருக்குறளுக்கு உரை எழுதிய அன்றைய பரிமேலழகர் முதல் தற்போதைய கலைஞர் கருணாநிதி வரை இவர்களது உரைகளிலும் எவ்வளவோ கருத்து முரண்பாடுகள் காணப்படுகின்றன.

இவர்கள் போதாது என்று வெளி நாட்டினர்களும் தங்கள் பங்கிற்கு நிறைய உலறியுள்ளனர்.

எனவே, மூலத்தை அறிய முடியாத நம்மை, எப்படி அடி முட்டாள்களாக ஆக்கியுள்ளனர் என்பதுதான் விசயம்.

இங்கு நன்றாக ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். அறிவினால் உயந்தவன், அறிவினால் தாழ்ந்தவனை ஆட்சி செய்கின்றான்.

அதுதான் இன்றுவரை நடந்து வந்துள்ளது.

வேதத்தை முழுமையாக அறியாமல், வேதத்தின் பெயரால், வேதம் அறிவித்ததாகக் கூறிக்கொண்டு, பல அப்பாவி ஜனங்களை ஏமாற்றி, பல தீயச் செயல்களை இந்த அவணியில் அதிபுத்திசாலிகள் அரங்கேற்றியுள்ளதை வரலாற்று உண்மைகளாக நாம் அறிய முடிகின்றது.

நம்முடைய பாரத தேசத்தில் மேல் சாதி என்று இந்த நாட்டை ஆண்டவர்கள், கீழ் சாதி என்று சில சமுதாயத்தைச் சேர்ந்தவர்களை, ஆண்டான், அடிமை என்ற முறையில், சாதிகளின் பெயரால் நடத்திய கொடுமைகளை சொல்வதற்கு இந்த புத்தகப்பகுதி போதாது.



மொகலாயர்களும் ஆங்கிலேயர்களும் இந்த நாட்டிற்கு வருவதற்கு முன்பு தமிழகத்தின் பல பகுதிகளில் தீண்டாமைக் கொடுமை தலைவிரித்தாடியது. சேர சோழ பாண்டிய மன்னர்கள் ஒருவரையொருவர் போரிட்டுக் கொண்டு காடு கழனிகளையெல்லாம் போரில் அழித்து வந்தனர். மதத்தின் பெயரால் தீண்டாமை சகல மட்டத்திலும் கடைபிடிக்கப்பட்டது.

மார்புக்கு வரி, மேலாடைக்கு வரி, தொட்டால் தீட்டு, இரட்டைக் குவளை முறை, என்று மக்கள் ஒரு பக்கம் துன்புறுத்தப்பட்டனர். மற்றொரு பக்கம் சைவர்கள் சமணர்களையும், பௌத்தர்களையும் வன்முறையால் மதம் மாற்றிக் கொண்டிருந்தனர்.

இந்த கால கட்டத்தில்தான் மொகலாயர்கள் ஆட்சியை பிடிக்கின்றனர். அகண்ட பாரதத்தை ஆங்கிலேயர்களும், மொகலாயர்களும் ஆண்டதின் காரணமாக மிகப் பெரிய மாற்றங்களை நம்முடைய பாரத தேசம் கண்டது.

இதைப்போலவே, **"தேவதாசி வாழக்கை முறை"** என்ற ஒரு வாழ்வியல் முறையை அன்றைய ஆட்சியாளர்கள் வைத்திருந்தனர்.

அது சிறு வயது பெண்களை தாலி கட்டி கோவிலுக்கு விட்டுவிடுவார்கள்.

அந்த பெண்கள் கோவிலில் நடைபெறும் திருவிழாக் காலங்களில், நடனமாடுதல், சில வழிபாட்டு சடங்குகளுக்கு பயன் படுத்துத்தப்பட்டனர். இவர்கள் மற்றவர்களைப் போன்று உலக வாழ்க்கைக்குள் வரமுடியாது.

ஆனால், தாலி கட்டாத மனைவியைப்போல, கோவிலில் பூசை செய்பவர்கள் முதல் பல பெரிய மிராசுதாரர்கள் வரை அந்த பெண்களை அனுபவித்துக் கொள்ளலாம்.

கோவிலுக்காக அர்பணிக்கப்பட்ட பெண்கள் இதுபோன்ற நயவஞ்சகர்களால் விபசாரிகளாக இவர்களாலேயே மாற்றப்பட்டனர்.

அவற்றில், இந்த தேவதாசி முறை நம் சுதந்திர இந்தியாவில் இன்று வரை நடைமுறையில் உள்ளது.

அது, பூரி ஜெகன்னாதருக்காகக் கதறி அழுது, 10 நாட்கள் விதவையாக வாழும் நாபகலிபார் திருவிழா சடங்கு ஒன்றிற்கு தேவதாசிகள் இன்றும் தேவைப்படுகின்றனர்.

இந்த நூற்றாண்டின் தொடக்கம்வரை தேவதாசிகள் இல்லாத கோவில்களே தென்னிந்தியாவில் இல்லை.

இராசராச சோழன் காலத்தில் தஞ்சை பெரிய கோவிலில் மட்டும் 400 தேவதாசிகள் இருந்ததாக தெரியவருகின்றது.

பல நூறு ஆண்டுகள் வலுவாக நீடித்திருந்த தேவதாசி முறை, தேவதாசி ஒழிப்புச் சட்டம் மூலம் ஏனைய கோவில்களில் ஒழிக்கப்பட்டாலும், பூரியில் மட்டும் இன்று வரை நடைமுறையில் உள்ளது.



அன்றைய பாரதத்தில் தேவதாசிகளாக கோவிலுக்கு நேர்ந்துவிடப்பட்ட அப்பாவிப் பெண்களை, நாளடைவில் விபசாரிகளாக இதே ஆட்சியாளர்களால் மாற்றப்பட்டது.

தற்பொழுது மும்பைப் போன்ற பெரு நகரங்களில் விபசாரங்களுக்கு அங்கீகாரமும், அரசு அனுமதியும் கொடுக்கப்பட்டுள்ளது.

மன்னன் எவ்வழியோ, மக்கள் அவ்வழியே என்பதை தற்போது நடைமுறையில் பார்க்க முடிகின்றது.

இவர்களது, சுய நலத்தினால் தோன்றிய எண்ணற்ற அராஜகங்கள் தவறான மூட நம்பிக்கைகளாக மக்களிடையே இன்றுவரை வேதத்தின் பெயரால் நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது.

உதாரணமாக,

நாம் ஏற்கனவே பார்த்தது போன்று, கணவன் இறந்தவுடன், அவனது மனைவி உடன்கட்டை ஏறுதல்,

உயந்த சாதி, தாழ்ந்த சாதி என்று பிரிவினைகளை உண்டாக்குதல்,

சாதியை காரணம் காட்டி தீண்டாமையை வளர்த்தல்,

கீழ் சாதியினர், மேல் சாதியினர்களுக்கு கட்டுப்பட்டு இருத்தல்,

கீழ் சாதி பெண்கள் தங்களது மார்பகத்தை மறைக்கும் மேலாடைகள் போடக்கூடாது,



கீழ் சாதிப் பெண்கள் அப்படி மார்பை மறைத்து மேல் ஆடைப் போட்டு விட்டால், மார்புக்கு வரி கட்ட வேண்டும்.

இரட்டைக் குவளை முறை என்ற உயர் சாதியினர் தேநீர் அருந்தும் குவளைகளை, கீழ் சாதியினர் பயன் படுத்தக் கூடாது.

இன்றும் சில கிரமங்களில் சில்வர் குவளைகளில் கீழ் சாதியினர்களுக்கு தேநீர் கொடுக்க மாட்டார்கள். அவர்களுக்கு என்று தனிக் கண்ணாடிக் குவளைகள் பயன் படுத்தப்படுகின்றது.

சில கிராமங்களில் இன்றும் தொட்டாங் குச்சியில் தேநீர் அருந்துபவர்களை பார்க்க முடிகின்றது.

இன்றும் ஒரு கிராமத்தில் ஒரு உணவு விடுதி நடத்தி வருபவர் ஆட்கள் பற்றாக்குறையினால், ஒரு கீழ் சாதிப் பெண்ணை பாதிரங்கள் கழுவி வைக்கும் வேலைக்கு அமர்த்தியதை கண்ட அந்த ஊர் பெரிய மனிதர்கள் அந்த உணவு விடுதிக்கு மக்களை செல்ல தடை விதித்தனர்.

இதனால், பாதிக்கப்பட்ட அந்த உணவு விடுதி உரிமையாளர் அந்த கீழ் சாதி பெண்ணை வேலையை விட்டு நிறுத்தியவுடன், மக்கள் அந்த உணவு விடுதிக்கு உணவு உண்ணச் செல்ல அனுமதித்தனர்.

இது இன்றைய நவீன இந்தியாவின் தற்போதைய நிலை.

இவர்களைப் போன்ற சில பெரிய மனிதர்களாலேயே, இன்றும் சில அவர்களுக்கு முக ஸ்துதி செய்து அவர்களை ஒரு வித மயக்கத்தில் வைத்திருந்து, அவர்களிடமிருந்தே பணம் பறிக்கும் கூட்டங்கள் பாமர மக்களைச் சேர்த்துக் கொண்டு, மொழிகளினாலும், கடவுளின் பெயர்களினாலும் கலவரங்களை ஏற்படுத்தி மகிழ்கின்றனர்.

இவர்களைப் போன்றவர்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக சாஸ்திரங்களில் கூறப்பட்டதாகப் போலியாக சில புதுமைகளை இன்று மக்களிடையே புகுத்துகின்றனர்.

அவைகளில் சில...

1. கடவுளைக் காரணம் காட்டி காணிக்கைகளைப் பெறுதல்.

2. பரிகாரங்களின் பெயரில் பணம் பறித்தல்.

3. புதிய, புதிய வழிபாட்டு முறைகளை மக்களுக்கு அறிமுகம் செய்து அதன் வாயிலாக பணம் சம்பாதித்தல்.

4. அம்பாளுக்கு மிளகாய் அரைத்தால், எதிரிகளை அழிக்கலாம்.

5. அம்பாளுக்கு திருமணம் செய்து வைத்தால், உங்களுக்கு திருமணம் ஆகும்.

6. கோவிலுள்ள மரங்களைச் சுற்று வந்து, அந்த மரங்களுக்கு தாலி கட்டினால், உங்களுக்கு தாலி கட்ட ஒருவன் வருவான்.

7. இந்த இந்த ஹோமங்களை செய்தால், இப்படி, இப்படி க்ஷேமமாக வாழலாம். என்று மக்களை முட்டாள்களாக்கி, கோவில்களைக் கட்டுவதின் உண்மை நோக்கத்தை அறியாமல், கோவிலில் உண்டியல்களை பொருத்தி கோடி, கோடியாக பணம் பண்ணுகின்றார்கள்.

இதற்கு அரசால் நியமிக்கப்பட்ட அறநிலையத் துறை என்று ஒரு துறையே உள்ளது.

இது போன்ற எண்ணற்ற அராஜக காரியங்களை இந்த சமுதாயத்தில் புகுத்தி, பாமர மக்களின்

அறியாமையைப் பயன் படுத்தி, இந்த அதிபுத்திசாலிகள் ஆட்சி செய்கின்றனர்.

ஆட்சியாளர்கள் என்பவர்கள் சேவை செய்கின்றவர்களாக இருக்க வேண்டும். சமுதாயத்திற்கு சேவை செய்பவர்கள் சமுதாயத்தின் தேவை என்ன என்று அறிந்து இருக்க வேண்டும். இந்த மனித சமுதாயத்திற்கு அன்றும், இன்றும் தேவை என்பது அமைதி மட்டுமே ஆகும்.



அந்த அமைதியை நோக்கித்தான் அத்தனை மக்களுமே ஓடுகின்றார்கள். அவர்கள் எந்த மதம், மொழி, சாதி என்று இவர்களுக்குள்ளேயே

பிரிவினைகளை வகுத்துக் கொண்டலும், இவர்கள் அனைவருக்குமே அமைதி மட்டுமே தேவை.

ஆம், அந்த அமைதியை நோக்கித்தான் ஆலயத்திற்குச் செல்கின்றனர். ஒரே இடத்தில் அமர்ந்து தியானம் செய்து பார்க்கின்றனர். இவர்கள் எந்த முறையில் வழிபாடு, தொழுகை மற்றும் பஜனை என்று எது செய்தாலும் அதன் ஒரே நோக்கம் மன அமைதி மட்டுமே.

அந்த அமைதி மட்டும் இவர்களுக்கு கிடைத்து விட்டால், ஆனந்தம் தானாகவே வந்து இவர்களிடம் ஒட்டிக்கொள்ளும்.

அதை அறிந்த ஆட்சியாளர்கள் மட்டுமே இந்த சமுதாயத்தை சீறும், சிறப்புமாக ஆட்சி செய்ய முடியும்.

உண்மையில், நம் முன்னோர்கள் முட்டாள்கள் அல்ல. அவர்கள் கோவில்கள், சிலை வழிபாடுகள் கொண்டுவந்ததின் நோக்கம் என்னவெனில், ஒரு பாமர மனிதன் தனக்கு ஏற்படுகின்ற துயரங்களை மனம் விட்டு பகிர்ந்து கொள்ள ஒருவர் தேவை.

ஆனால், அது மனிதனாக இருந்தால், இவனது துயரத்திற்கு நல்ல தீர்வு கொடுப்பார் என்று

எதிர்ப்பார்க்க முடியாது. அவர் இவன் மேல் உள்ள வெறுப்பினால், இவனுக்கு தவறான யோசனைகள் கூட கூறலாம், அல்லது நல்ல யோசனைகள் கூறி விட்டு இவனுக்கு இப்படித்தான் ஆக வேண்டும் என்று மனதிற்குள் நினைக்கலாம். இவனது துயரத்தை எதார்த்தமாக எடுத்துக் கொண்டு அவன் கூறுவதைக் கேட்டு எள்ளி நகையாடலாம். இவர்கள் மூலமாக அவனுக்கு ஒரு அமைதி தீர்வாக கிடைக்காது.

இதை அறியாத மற்ற மதத்தில் உள்ளவர்கள் பாவ மன்னிப்பு என்ற முறையில், ஆலய பூசாரியிடம் சென்று பாவ மன்னிப்பு கேட்டு, மன அமைதி பெற வேண்டும் என்று நினைத்து, தன்னுடைய அந்தரங்கமாக விசயங்களை மனம் விட்டு கூறிவிடுகின்றனர்.

அவ்வாறு மனம் விட்டு கூறுவதினால், தன்னுடைய மன உழைச்சல் தீர்ந்து அமைதி உண்டாகும் என்று நினைக்கின்றனர்.

ஆனால், இவர்களது அந்தரங்கத்தை அறிந்த ஆலய பூசாரியோ, இந்த அப்பாவிகளுக்கு பாவ மன்னிப்பு கொடுப்பதற்கு பதிலாக, அவர்களை மிரட்டி பணம்

பறித்து, மேலும் இவர்களது மன அமைதியைக் குழைக்கின்றனர்.



இந்த அறியாமை ஜனங்கள் பாவ மன்னிப்பை தேக அபிமானம் உள்ள மனிதனிடம் எதிர்ப்பார்த்து ஏமாறுகின்றனர்.

இது இன்றும் நடைமுறை உண்மையாக பல இடங்களில் காணப்படுகின்றது.

இதை அன்றே அறிந்த நம்முடைய மெய்ஞ்ஞானிகள் இதற்கு மாற்று வழி முறையை யோசித்து, ஒரு நல்ல யோசனையைக் கையாண்டார்கள்.

அதாவது, இப்படிப்பட்ட பாமரனுக்கு நிச்சயமாக ஆறுதல் கிடைக்க ஒரு இடம் தேவை.

அது மனிதர்களால் நிச்சயமாக இவனுக்கு ஆறுதல் கொடுக்க முடியாது.

அதற்கு என்று ஒரு கர்த்தர் இருக்கின்றார் அவர் இந்த சிருஷ்டிக்கு காரணமான சிருஷ்டி கர்த்தா ஆவார்.

அவரால் மட்டுமே இவர்களுக்கு தீர்வு கொடுக்க முடியும்.

அதே சமயம் அந்த கர்த்தர், சிருஷ்டி கர்த்தாவாக இருப்பதினால், தன்னை சர்வ இடங்களிலும் வியாபித்து உள்ளார்.

அதனால், அவரது வியாபகம் உன்னுள்ளேயும், என்னுள்ளேயும், ஏன் அத்தனை ஜீவராசிகளினிடத்திலும், அந்தர்யாமியாக நிறைக்கப்பட்டுள்ளது.

அதனால், அவரே இந்த பிரபஞ்சமாக விரிந்துள்ளார்.

இந்த பிரபஞ்சத்தில் இருக்கின்ற அத்தனையும் அவரே என்பதால் “இருப்பதெல்லாம் இறைவனே” என்று எவ்வளவுதான் இவனுக்கு உபதேசம் கூறினாலும், இவனது சிற்றறிவுக்கு ஏறப்போவதில்லை.

எனவே, அவனது மனம் தனக்கு மேலான ஒரு சக்தியை கண், காது, போன்று பார்க்கின்ற, கேட்கின்ற விசயங்களை வைத்து வெளிப் புலன்களின் வாயிலாகவும், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அந்தக்கரணங்களின் வாயிலாகவும் அறிய முயற்சிக்கின்றது.

அது நிச்சயமாக நடவாது என்பதை அறிந்துக் கொண்ட ஞானிகள் இவர்கள் இந்த சாதாரணக் கண்களால் கடவுளைக் காண முயற்சிப்பதையும், காதுகளினால் கேட்டதை வைத்து அவரை அபரிமிதமாக கற்பனைகள் செய்து கொண்டு நம்புவதையும், அப்படி இவர்களால் கற்பிக்கப்பட்ட கற்பனைக் கடவுளுக்கு பயப்படுவதையும் அறிந்தனர்.

எனவே மெய்ஞ்ஞானிகள், ஒரு யுக்தியை கடைப்பிடித்தனர்.

அது, அந்த பாமரனுக்கு ஆறுதல் கொடுக்கும் ஒருவர் இருக்கின்றார். அவர்தான் நீ அறிய விரும்பும் கடவுள்.

நீ அவரை வழிபட்டால், உன்னுடைய துயரத்தை தீர்த்து வைப்பார் என்று அவனுக்கு அறிவுரைகள் கூறி, அவரை நீ நேரில், இந்த ஊனக்கண்களால் காண முடியாது.

ஆகவே அவரை இந்த உருவச் சிலையில் எழுந்தருளும் படி பிரதிஷ்டை செய்கின்றோம்.



நீ உன்னுடைய துயரத்திலிருந்து விடுபட்டு மன அமைதியை பெறுவதற்கு இவரை இந்த உருவத்தில் வழிபட்டு, உன்னுடைய மனக்குறைகளை அவரிடம் கூறி, உனக்கு வேண்டியதை சாதித்துக்கொள், என்று கொண்டு வந்ததுதான் இந்த கோவில்கள், சிலை வழிபாடுகள் போன்றவைகள் ஆகும்.

நம்முடைய பாமர மக்களின் மன நிலையை அன்றைய மெஞ்ஞானிகள் நன்கு அறிந்திருந்தனர்.

இவர்களுக்கு இதுபோன்ற கண்ணுக்கு புலப்படாத சக்திகளின் மீது அதிக நம்பிக்கை வைப்பார்கள், அது, கடவுள் மற்றும் சாத்தான் என்றால் மிகவும் சுவாரஷ்யமாக அதைப் பற்றிக் கேட்பார்கள்.

ஆனால், அதன் உண்மைத் தன்மையை அறிய விரும்ப மாட்டார்கள்.

அதுவே, ஆவி என்றதும் அலறுவார்கள், கடவுள் என்றால் கண் கலங்குவார்கள்.

இது போன்ற மனிதனின் மனோதத்துவங்களை நன்கு அறிந்தவர்கள் நம்முடைய ஞானிகள்.

இதனால், இந்த பாமர ஜனங்கள் எளிதில் ஏற்கக்கூடிய வழிபாட்டு முறைகளை கோவிலின் வாயிலாக புகுத்தினர்.

அதில் வெற்றியும் அடைந்தார்கள்.

கற்சிலைகளை வணங்குவதாக சில அதிமேதாவிகள் விமர்சனம் செய்கின்றார்கள்.

இந்த மேதாவிகளை வணங்கி தீர்வைக் கேட்டால், இவர்களால், அந்த பாமரனின் பிரச்சனைகளை தீர்த்து விட முடியுமா?

அல்லது இந்தமேதாவிதான் அந்த பாமரனின் புலம்பலை காது கொடுத்து கேட்டு விடுவானா?

உணர்ச்சி உள்ள ஒருவனால், மற்றவனின் அதீத உணர்ச்சிகளுக்கு அடிபணிய முடியாது.

அது கோபமாகவோ, கிண்டலாகவோ வெளிப்பட்டு விடும்.

ஆனால், கருணையே வடிவான அந்த கருணாமூர்த்தி கற்சிலையில் இருந்துக்கொண்டு இவனது புலம்பலை சிறிதும் உணர்ச்சிவசப்படாமல், எத்தனை மணி நேரம் அவன் அழுது புலம்பினாலும், திட்டித் தீர்த்தாலும்

அத்தனையையும் அமைதியாக கேட்டுக்கொண்டு அமர்ந்து இருக்க முடியும்.

அப்படி அமைதியாக அந்த கற்சிலைக் கடவுள் கேட்பதினால்தான் இவனும் அந்த சிலையிடம் சென்று கோரிக்கைகளை கொட்டிக் கொண்டிருக்கின்றான்.

ஆனால், அதே கடவுள் இவனுக்கு மறு பேச்சு பேசி விட்டார் என்றால், இவனது அஹங்காரத்தின் முன்னால், அந்த கடவுளையும் தூசியாகக் கருதி, அவரிடம் கோபித்துக் கொண்டு வந்து விடுவான்.

அதனால்தான் இதை அறிந்த ஞானிகள் கடவுளை சற்றும் கரைக்க முடியாத கல்லிலே கொண்டு வந்தனர்.

இதைக் கூட அறிந்துகொள்ள முடியாத மூளையற்ற மூடர்கள், முற்றும் அறிந்த முனிவர்களை முட்டாள்கள் என்கின்றனர்.

இதையும் மனம் கோணாமல் ஏற்கின்ற பக்குவப்பட்ட ஞானிகளுக்கு பயிற்சிக்களம் இந்த சனாதன தர்மம்.

அதிலும், இந்த அப்பாவி பாமரர்கள் அவர்கள் விரும்பும் வகையில் கடவுள் சிலைகளை வடிவமைத்துக் கொள்ளலாம், வழிபாடுகளும் செய்யலாம், அவரவர்களுக்கு ஏற்ற, விரும்பும் கடவுள்களை குலதெய்வங்களாக அமைத்துக் கொள்ளலாம். இந்த வழிபாட்டுச் சுதந்திரம் நம்முடைய சனாதன தர்மத்தில் மட்டுமே உண்டு. மற்ற எந்த மதங்களிலும் கிடையாது.



உதாரணமாக, மது, மாமிசம் உண்பவர்கள் அவர்களுக்கு பிடித்த கருப்பராயன் சுவாமியை வழிபாடு செய்து, அவருக்கு படையலாக மதுவையும், மாமிசத்தையும் படைத்து, அதன் பிறகு பிரசாதமாக அதை இவர்களே உட்கொண்டு

விடலாம். இந்த தாமஸ குணம் கொண்டவர்கள் வழிபடும் கடவுள்களாக கருப்பராயன், மதுரை வீரன், மாசாணியம்மன், இசக்கியம்மன் போன்ற தெய்வங்களை பட்டியலிடலாம்.

அடுத்து, ரஜோ குணம் கொண்ட மனிதர்கள் காளியம்மன், மாரியம்மன், ருத்ரன், பைரவர், துர்க்கை போன்ற எண்ணற்ற கடவுள்களை தாங்கள் விரும்பும் வகையில் வழிபாடு செய்து கொள்ளலாம்.

சத்துவ குணம் கொண்டவர்கள் விஷ்ணு, சிவன், முருகன், கணபதி என்று இவர்கள் பட்டியலிலும் எண்ணற்ற கடவுள்களை வழிபாடு செய்து கொள்ளலாம்.

இந்த கடவுள்களின் பட்டியல் மிக நீண்டதாகும். ஒரே கடவுள்களை பல பெயர்களில் வழிபாடு செய்யப்படுவதால், இந்த பட்டியல் மிக நீண்டதாக காணப்படுகின்றது. ஆகவே, அனைத்தையும் இங்கு கொண்டுவர இந்த புத்தகம் போதாது.

இதையெல்லாம் தெரிந்து கொண்டவன், உண்மையில் எதை அறிய வேண்டுமோ, அதை அறிய முயற்சி செய்வான்.

அப்படி, எதை அறிந்து கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ அவன், உண்மை அறிவை அறிந்த ஞானி ஆகின்றான்.

சாதரண பாமரன் எனக்கு இந்த தெய்வமே போதும், நான் இதையே எனது குலதெய்வமாக வழிபாடு செய்து கொள்கின்றேன் என்று இதில் ஏதாவது ஒரு கடவுளையோ, அல்லது பல கடவுள்களையோ வழிபாடு செய்து, மன ஆறுதலுடன் மகிழ்ச்சியான சிற்றின்பங்களை அடைந்து சிறப்பாக வாழ்கின்றான்.

கடவுளே இல்லை என்பவன் மட்டுமே முடிவில், கட்டுப்பாடற்ற வாழ்க்கை வாழ்ந்து, வாழ்ந்த வாழ் நாட்களில் பெரும்பாலும் பேசியே வீணாக்கி விட்டு, இறுதியில் பேசவே முடியாத மன நோயாளியாக மாறி மருத்துவமனைகளிலேயே வாழ்வை முடிக்கின்றான்.

இதுபோன்ற அறியாமை கொண்ட மக்களை மாற்றவே சனாதன தர்மம் தோன்றியது. அந்த தர்மத்தின் மகத்துவம் அறியாத பாமர மக்களில் சிலர் தமிழ் வேதம் சிறந்ததா?, வடமொழி வேதம் சிறந்ததா? என்று பட்டிமன்றங்களை நடத்தியும், பட்டி, தொட்டிகளில் படிப்பறிவு இல்லாத பாமர

மக்களை தமிழ் மொழி, எங்கள் தாய் மொழி, வட மொழிகள் அன்னிய மொழிகள் அதை கற்காதீர்கள் என்று பிரச்சாரங்களை செய்தும், தங்களது அறியாமையை அறிய மறுக்கின்றனர்.

இவர்களது இயலாமையை அறிந்த அதிபுத்திசாலிகள் இவர்களும் வேறு மொழியைக் கற்று உண்மைகளை அறிந்து கொண்டால், இவர்களால் பிழைப்பு நடத்த முடியாது என்பதினால் இவர்களை ஒரு விதமான இருக்கமான மன நிலையிலேயே இருக்க வைத்து, இறைவனை வழிபட இன்னின்ன கோவில்களுக்கு சென்று வந்தால், இன்னல்கள் தீரும் என்றும், குறிப்பாக திருப்பதி சென்று வந்தால் திருப்பங்கள் உண்டாகும் என்றும் மக்களை திசை திருப்பி, திருப்தியான ஆட்சியை ஆள்கின்றனர்.

இது சனாதன தர்மம் என்ற இன்றைய இந்து மதத்தில் மட்டும் இல்லை. மற்ற கிறிஸ்துவ, இஸ்லாமிய மதங்களிலும் இதே நிலை நீடிக்கின்றது. அது, அவரவர்கள் வகுத்துக்கொண்ட நியதிக்குள் உள்ள வழிப்பாடுகளாக மாறி,

மக்களை ஒரு வித மயக்கத்திலேயே வைத்திருக்கின்றனர் இந்த அதிபுத்திசலிகள்.

உண்மையில் 5000 வருடங்களுக்கு முன்பு தோன்றிய வேதமானாலும் சரி!, அல்லது, இன்று எழுதப்பட்ட வேதமானலும் சரி!, அது, மனிதனை மனிதனாக வாழவும், அவனது அறிவை மேம்படுத்தவும் மட்டுமே சனாதன தர்மம் என்ற முறையில் வேதம் கொடுக்கப்பட்டது.

வேதம் என்றால், **"உயர்ந்தஅறிவு"** என்று பொருள்

மற்ற உயிரினங்களுக்கு நன்மை செய்யும் வகையில் இல்லாமல், அவைகளுக்கு தீமைகளை கொடுக்குமானால், அதை **'தர்மம்'** என்று அழைக்க முடியாது.

அதை **'அதர்மம்'** என்றுதான் கூற முடியும்.

ஆனால், இதுதான் தர்மம் என்று இவர்கள் விரிக்கும் வஞ்சக வலையில், இன்றும் அறியாமையினால் மக்கள் மயங்குவதை பார்க்கின்ற பொழுது, **"எதை அறிந்து கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ"** அதை அறிய நிச்சயமாக இவர்கள் மக்களை விடமாட்டார்கள்.

இன்றைய பாமர மக்களின் பரிதாபகரமான வாழ்க்கையை கவனித்துப் பார்க்கும் பொழுது, ஒரு விசயம் மிக நன்றாகப் புலனாகின்றது. அதாவது, ஐந்தறிவு படைத்த நாய்க்கு ஒரு எலும்பு துண்டு கிடைத்தவுடன், அது அதை மிகவும் விரும்பி சுவைக்கும் பொழுது, அதன் வாயிலிருந்து இரத்தம் வடிகின்றது.

அந்த இரத்தத்தை தன்னுடைய இரத்தம் என்று அந்த நாய்க்கு தெரியாத்தினால்தான், அது அந்த இரத்தம் எலும்பிலிருந்து வருகின்றது என்று நினைத்து மேலும், மேலும் விரும்பி சுவைக்கின்றது.

இதே நிலைதான் இன்று ஆறறிவு படைத்த இந்த பாமர மனிதர்களும், படிப்பறிவு இன்றி, இந்த அதிபுத்திசாலிகளால் கொடுக்கப்படுகின்ற இலவசங்கள், ஓட்டுக்கு பணம் அனைத்தும் இவர்களிடமே இருந்து, விலைவாசி உயர்வு, பஸ் கட்டண உயர்வு, மற்றும் அத்தியாவசியப் பொருட்களில் போடப்பட்ட அதிகப்படியான வரி என்று வசூலிக்கப்படும் அனைத்தும், தன்னுடைய இரத்தத்தை கொடுத்து உழைத்த பணம்தான் என்பதை அறியாமல், அந்த நாய் அந்த

எலும்புத்துண்டிலிருந்து வருகின்ற இரத்தம் என்று நினைப்பதைப் போன்று இவர்களும் நினைத்துக் கொள்கின்றனர்.

இந்த மடமையை நீக்கத்தான் சனாதன தர்மம் **“உன்னை நீ அறிந்தாயானால், உனக்கு ஒரு கேடுமில்லை”** என்று பல நூற்றாண்டுகளாக, பல மஹான்களின் வாயிலாகவும், பல வேத நூல்களின் வாயிலாகவும், வேதம் படித்த ஆச்சாரியர்களின் வாயிலாகவும் உபதேசித்துக் கொண்டே இருக்கின்றது.

ஆனால், இவர்கள் உண்மையாக வேதத்தை அறியவோ, தர்மப்படி வாழவோ யாரும் தயாராக இல்லை.

இந்த வாழ்வியலை போதிக்க பல தலை முறைகளாக எத்தனையோ மஹான்கள் இந்த பூமிக்கு வந்து விட்டு போய் விட்டார்கள்.

ஆனால், இந்த பாமரர்கள் மட்டும் தங்களை மற்றிக்கொள்ளத் தயாராக இல்லவே இல்லை.

பிரபஞ்சத்தின் விரிவு எப்படி எல்லையில்லாமல் எங்கும் பரவிக்கிடக்கின்றதோ, அதுபோல, மனித

மனம் எல்லையில்லா எண்ணங்களின் விரிவு ஆகும்.

இதில், சில எண்ணங்கள் ஆழ்ந்து ஆழ்மனதில் பதிந்து விட்டால், அந்த பதிவு சித்தத்தில் சேமிக்கப்பட்டுவிடும். அதன் பிறகு, அதை மாற்றுவது என்பது அறிவின் தலையீடு இன்றி மாற்ற முடியாது.

இதை அறிந்த நம் மெய்ஞானிகள் இந்த பாமர மக்களின் மனதில் கூடுமானவரை தவறான எண்ணங்களை உண்டாக்காமல் தடுக்கும் முயற்சியாக உயந்த அறிவைக் கொடுக்கும் கல்வி முறையைக் கடைப்பிடித்தனர்.

பாரதத்தில் இந்த கல்வி குருகுலக் கல்வி, அல்லது வேதக் கல்வி என்று அன்றைய காலங்களில் நடைமுறையில் இருந்தது. இந்தக் கல்வி முறையின் முக்கிய அம்சமே “**சேவை**” என்ற மனப்பான்மையை வளர்க்கும் விதத்தில் குருவுக்கு மாணவன் சேவை செய்து, கல்வியை அவரிடமிருந்து இவன் பெற்றுக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு இந்த மாணவர்களால் பெறப்பட்ட கல்வியின் பயன், ஒருவருக்கு ஒருவர் சேவை செய்து, திருப்தியான மன நிலை எங்கும், எல்லோரிடத்திலும் நிறைந்திருந்தது.

இந்த திருப்தியான மன நிலையின் காரணமாக மக்கள் அனைவருமே சந்தோஷமாக இருந்தனர்.



இதனால், குரு - சிஷ்யன், பெற்றோர்கள் - பிள்ளைகள், இறைவன் - பக்தர்கள் என்ற இந்த உறவு முறையில் ஒரு இணக்கம் இருந்தது.

இந்த இணக்கத்தை விரும்பாத சில அன்னிய சக்திகள் நம்மை பிரித்தாலும் சூழ்ச்சியாக இந்த குருகுலக் கல்வி முறையை தகர்த்தது.

அதன்பிறகு, அவர்களது திட்டத்தை நடைமுறைப் படுத்த எண்ணி, நம்மிடையே சில தவறான எண்ணங்களை புதிய கல்வித்துறையின் வாயிலாக விதைத்தது. அந்த விதை நம்மிடையே ஆழ்மனதில் பதிந்து விட்டதால், அதிலிருந்து நம்மால் மாற முடியாமல் இன்று வரை சிக்கிக் கொண்டு, வெளிவர தெரியாமல் தவிக்கின்றோம்.

இன்று, கல்வி, மருத்துவம், ஆன்மீகம் மற்றும் அரசியல் போன்ற இவைகளின் வாயிலாக வெளிப்படும் இன்றைய இத்தனைப் பிரச்சனைகளுக்கும் காரணம் என்னவெனில், மனிதன் தன்னை அறியாமல் இருப்பது ஒன்று மட்டும்தான் ஆகும்.

அந்த ஒன்றை அவன் அறிந்துவிட்டால், அனைத்து பிரச்சனைகளுக்கும் தீர்வு காணலாம்.

**"தன்னை அறிந்த தத்துவ ஞானிகள்**
**முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்**
**பின்னை வினையை பிடித்து பிசைவர்**
**சென்னியில் வைத்த சிவனருளாலே". –** திருமூலர்

தன்னை அறிவது என்பது ஒருவன் தன் சுய நலத்திலிருந்து, தன் சுய அறிவிற்கு வரவேண்டும்.

அதாவது, தன்னிடம் உள்ள அறிவின் அவசியத்தை அறிவது ஆகும். அது எப்படியெனில், தன்னைத்தானே சுய பரிசோதனைகளுக்கு உட்படுத்திக் கொள்வது என்பதாகும்.

அதாவது, **"நான்"** என்று இந்த ஸ்தூல உடலின் வாயிலாக தன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பது அஹங்காரம்.

இந்த அஹங்காரம் என்பது மனோவிஹாரம். மனோவிஹாரம் என்றால், மனதின் திரிபு, அறிவின் திரிகை. என்று எப்படி வேண்டுமனாலும் பொருள் கொள்ளலாம்.

இதிலிருந்து மாறுபட்டு, **"நான்"** என்று தன் இருப்பாக சூக்ஷுமத்தை மட்டுமே அறிந்து கொண்டிருப்பது ஆத்மா.

**"நான்"** - என்பது தன்னுடைய ஸ்தூல உடல் என்ற அஹங்காரத்தை கொண்டவனை, **"நான்"** - என்பது தன்னுடைய சூக்ஷும ஆத்மா என்று, அறிந்து கொண்டு, தன்னுடைய அஹங்காரத்தை கொன்றவனே, தன்னை அறிந்தவன் ஆகின்றான்.

**தன்னை அறியத் தனக்கொரு கேடில்லை தன்னை அறியாமல் தானே கெடுகின்றான் தன்னை அறியும் அறிவை அறிந்தபின் தன்னையே அற்சிக்கத் தானிருந்தானே.** - திருமூலர்.

அதாவது, தன் அறிவினால் ஆத்மாவை அறிந்தவன் அனைத்தையும் அறிந்தவன் ஆகின்றான். அவனே "**ஞானி**" என்று அழைக்கப்படுகின்றான்.

இருப்பது ஒன்று, அந்த ஒன்று மட்டுமே தமிழில் கூறினால் "**உண்மை**", வட மொழியில் கூறினால் "**சத்தியம்**" என்பதாகும்.

அந்த "**சத்**" என்ற ஒன்று "**சித்**" என்ற அறிவைக் கொண்டு "**ஆனந்தம்**" அனுபவிக்க விரும்பியது.

(அதுவே, சத் சித் ஆனந்தம் என்பதாகும்,)

அதன் விளைவாக, அந்த ஒன்று பலவாக மாறியது. பல உயிர்களாக மாறி, பல உடல்களை எடுத்துக் கொண்டு, அந்தந்த உடலின் வாயிலாக பலவிதமான அனுபவங்களை அடைந்து, அந்த அனுபவத்தில் கிடைத்த நன்மை, தீமைகளை ஆராய்ந்து ஒரு முடிவிற்கு வந்தது.

அந்த முடிவு, என்றும் அழியாத, எப்பொழுதும் இருக்கின்ற பரமா(ஆ)த்மாவாகிய தன்னுடைய செயல் என்ற உண்மையை உணர்கின்ற ஜீவர்கள், உயர்ந்த அறிவையும், ஆனந்தத்தையும் அடையட்டும்.

இந்த அழியும் தேகத்தை உண்மையென்று கருதி, அனைத்தும் தன்னுடைய செயல் என்ற உண்மையை உணராத அஹங்காரம் கொண்ட ஜீவர்கள் அறியாமையையும், துயரத்தையும் அடையட்டும் என்று முடிவு செய்தது.

இந்த முடிவின் வெளிப்பாடாக, வெளிப்பட்ட ஜீவர்கள் அவரவர்களின் அறிவையும், அறியாமையையும் கொண்டு இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவித்து வருகின்றனர்.

இதில் எந்த ஜீவன் இன்பத்தை மட்டுமே அனுபவிக்க வேண்டும் என்று விரும்புகின்றதோ, அந்த ஜீவன் தனக்கு கொடுக்கப்பட்ட அறிவைச் சரியான முறையில் பயன் படுத்தினால் அந்த பேரறிவுடன் இணைந்து இன்பத்தை அனுபவித்துக் கொள்ளலாம்.

துன்பத்தை மட்டுமே அனுபவிக்க விரும்பும் ஜீவன், தன்னிடம் உள்ள அறிவினை அறியாமல், மனம் போனபடி போய்க்கொண்டு, பொய்யான வாழ்வைத்தேடி அலைந்து, துன்பத்தை அனுபவித்துக் கொள்ளலாம்.

இதில் எதுவேண்டும் என்பதை, அந்தந்த ஜீவர்கள் அவரவர்களிடம் உள்ள சுய அறிவைக் கொண்டு தீர்மானித்துக் கொள்ளட்டும்.

சரி! எனக்கு அறிவு குறைவாக இருக்கின்றதினால், என்னால் இதுபோன்று நடைமுறைப் படுத்துவதில் சிக்கல் உள்ளது. ஆனால் என் மனம் நன்மையை விரும்புகின்றது என்றால், உடனடியாக முதலில் அமுல்படுத்த வேண்டியது என்னவெனில், ஒரு உண்மைச் சாதுவின் சத்சங்கத்தை நாடவேண்டும்.

சத்சங்கம் என்றவுடன் சிறுமதியால், ஏதோ ஆன்மீக சொற்பொழிவு என்று நினைத்து விடக்கூடாது.

சத்சங்கம் என்றால் இங்கு உண்மை அறிவு பெற்றவர்களின் தொடர்பு என்று பொருள். ஆகவே ஒரு மெய் அறிவு பெற்ற மெய்ஞ்ஞானிகளின் தொடர்பை உண்டாக்கிக் கொள்ளவேண்டும்.



சரி!, மெய்ஞ் ஞானிகளை எப்படி அடையாளம் காண்பது எனில், "தனக்கு எது எல்லாம் நன்மை பயக்கும் என்று கருதுகின்றோமோ, அதைப் போலவே மற்ற உயிர்களுக்கும் நன்மை உண்டாக வேண்டும்" என்று நினைப்பவர்கள் அனைவருமே உண்மையில் ஞானிகள் ஆவார்கள்.

இவர்கள் பொய்க் கூற மாட்டார்கள், அனைத்து உயிர்களையும் நேசிப்பார்கள், அனைத்து உயிர்களிலும் இ(றை)வனையே காண்பதினால், மற்ற உயிர்களை துன்புறுத்த விரும்பாமல், புலால் உண்ணமாட்டார்கள், வீண் பேச்சுக்களில் ஈடுபடமாட்டார்கள், அரசியலைத் தவிர்ப்பார்கள், ஆலயங்களுக்கு செல்லமாட்டார்கள், மொத்தத்தில் தன்னை வெளிப்படுத்திக்கொள்ள மாட்டார்கள்.

இவர்களை அடையாளம் கண்டு இவர்களிடத்தில் சென்று “**வேதம்**” என்ற “**சனாதன தர்மம்**” என்ன கூறுகின்றது என்று வினவினால், அவர்களே அந்த சத்திய வஸ்துவாக இருப்பதினால், இவர்கள் வாயிலிருந்து வெளிவரும் வார்த்தைகள் அனைத்தும் சத்தியமே ஆகும்.

நிர்க்குணமான எங்கும் வியாபித்திருக்கும் பரப்பிரம்மத்திலிருந்து பிரம்மா, விஷ்ணு, சிவன், சூரியன், சக்தி, விநாயகர், காளி போன்ற எத்தனை தெய்வங்கள்!

இந்த தெய்வங்களை வழிபடத்தான் எத்தனை சமயச் சடங்குகள், சாஸ்திரங்கள், சித்தாந்தங்கள், ஆகமவிதிகள், சிலைகள், கோவில்கள், என்று பல சாதனங்களாக இவைகள் அமைகின்றன.

சாதனமின்றி ஒன்றை சாதிப்பார் உலகில் இல்லை. என்று கருதிய நம் முன்னோர்களின் விவேகத்தினால் தோன்றி வானுயர்ந்து ஓங்கி வளர்ந்து, நிரந்தரமாக நிற்கும் தர்மமே இந்த சனாதன தர்மம் என்ற இந்து மதம்.

இதில், இந்த தர்மத்தின் பாதைகளாக கர்மயோகம், பக்தியோகம், வழிபாடு, மனக்கட்டுப்பாடு, தத்துவ

விசாரம், ஞானம் என்று பல வழிகளில் பயணம் மேற்கொண்டு இறுதியில் "**முக்தி**" என்ற இலக்கை அடையவே ஒவ்வொருவரும் விரும்புகின்றார்கள்.

அப்படிப்பட்ட ஒவ்வொரு ஜீவான்மாவிலும் தெய்விகத் தன்மை மறைந்திருக்கிறது. அதன் வெளியேயும் உள்ளேயும் இருக்கும் மகா சக்தியை அறிந்து, தன் உள்ளே குடிகொண்டுள்ள இந்தத் தெய்விகத் தன்மையை "**பக்தி**" என்ற சாதனத்தினால், "**முக்தி**" என்ற சாதனையை பெற வேண்டும் என்பது தான் மிகவும் முக்கியம்.

ஆனால், இன்றைய மக்கள் பக்திக்கும், முக்திக்கும் விளக்கம் அறியாமலையே ஆலய வழிபாட்டில் மிக ஆர்வமாக ஈடுபடுகின்றனர்.

எதற்காக, கோவிலுக்குச் செல்கிறோம் என்ற உண்மை நிலை மாறி, கோவிலுக்கு செல்வதே ஒரு சடங்கு போல மாறி வருகின்றது.

பக்தி என்பது கோவிலுக்குச் செல்வதும், திருவிழாக்களை நடத்துவதும், ஆடுகள், மாடுகள் பலியிடுவதும், விபூதி பட்டை, உத்திராட்ச கொட்டைகள் கொண்ட மாலை அணிந்து கொள்வதும், யாக, யக்ஞங்கள் செய்வதும்,

மந்திரங்களை கூறுவதும், மந்திரித்து தாயத்து கட்டுவதும், அபிஷேகங்கள், ஆராதனைகள் செய்வதும், பல புகழ்பெற்ற கடவுள் ஸ்தலங்களுக்கு தீர்த்த யாத்திரை மேற்கொள்வதும் பக்தி என்று கருதுகின்றார்கள்.



“ஊமை மனிதன் இனிப்பைச் சுவைத்து உணரும் அனுபவம் போன்றது பக்தி” என நாரத பக்தி சூத்திரம் பக்திக்கு விளக்கம் தருகிறது.

அதாவது, வாய்பேச முடியாத ஒரு ஊமை இனிப்பான ஜிலேபியைச் சுவைத்து சாப்பிட்டு விட்டு, அதன் அபரிமிதமான சுவையை எப்படி மற்றவர்களுக்கு வெளிப்படுத்த முடியாதோ, அதைப் போன்று, இறை சைதன்யத்தை தன் உள்ளத்தில் உணர்ந்தவன், அதை மற்றவர்களுக்கு

வெளிச்சம் போட்டு காட்ட முடியாது என்கின்றது சாஸ்திரம்.

ஆனால், இன்று பக்தி என்ற போர்வையில் பக்தர்கள் என்று கூறிக்கொண்டு இவர்கள் செய்யும் அராஜகச் செயலினால் நம் தர்மம் தலைக் குனிவைச் சந்திக்கும் சூழல்கள் உண்டாகி வருகின்றது.

இந்த நிலை மாற மூட பக்திகள் ஒழிக்கப்பட வேண்டும். மூட பழக்கவழக்கங்கள் மாற்றப்பட வேண்டும். அறிவை அறிந்து, எதையும் புரிந்து செயல்புரிய வேண்டும். மற்றவர்கள் செய்கின்றார்கள் என்று தானும் அது என்னவென்று அறியாமல் அப்படியே செய்வதை விட வேண்டும். அதன் உண்மைத் தன்மையை அறிய முயற்சிக்க வேண்டும். குருட்டு பக்தி கடவுளிடம் கொண்டு சேர்ப்பதற்கு பதிலாக, சடங்கு, சம்பிரதாயங்களிலேயே மூழ்கடித்து காலத்தை முடித்து விடும்.

விழித்துக் கொள்ளுங்கள்!, எது சரி!, எது தவறு! என்று அறிய முயற்சி செய்யுங்கள். அறியாமையை நீக்கி அறிவு பெறுங்கள் என்று சாஸ்திரம் வலியுறுத்துகின்றது.

சனாதன தர்மம் போதிக்கும் தர்ம, அர்த்த, காம, மோக்ஷ என்ற நான்கு நிலைகளை ஒவ்வொரு மனிதனும் அறிந்து அதன் இறுதி நிலையான மிக உன்னதமான ஆத்மானுபவ ஆனந்த நிலையை அடைந்து அனுபூதி பெற்று, அதன் வாயிலாக “**முக்தி**” என்ற மோக்ஷத்தை அடைய வேண்டும் என்று வலியுறுத்துகின்றது.

அதாவது, அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வாழ்வியல் நிலைகளில் இறுதி நிலையான வீடுபேறு என்ற இந்த பிறவித் தளைகளில் இருந்து விடுதலை அடையும் வழி முறையான ஆத்ம ஞானத்தை அறிவிக்கின்றது.

ஆனால், இந்த அஞ்ஞானிகள் தனக்கு சாதகமாக பொருளையும், இன்பத்தையும் மட்டும் தர்மத்தின் வழி என்று வகுத்துக் கொண்டு, பொருள் ஈட்டுவதையும், அந்த பொருளின் மூலமாக இன்பத்தை அடைய முடியும் என்றும் கருதி, அனுதினமும் அலைகின்றனர்.

அந்தப் பொருள் பற்றின் காரணமாக அதை அடையும் வழிகளில், இந்த இறை வழிபாட்டையும் இணைத்துக் கொண்டு தனக்கு

அது வேண்டும், இது வேண்டும் என்று இறைவனிடம் முறையிடுகின்றனர்.

இதனால், தனக்கு மேலான சக்தி படைத்த இறைவன் மீது அளவு கடந்த பக்தி செலுத்துகின்றேன் என்று, எது "பக்தி" என்று அறியாமலேயே அளவற்ற அதர்ம காரியங்களைச் செய்கின்றனர்.

இந்த அதர்ம காரியங்களினால் உண்டாகும் துன்பத்தை துடைக்க மீண்டும் அதே இறைவனை தஞ்சம் அடைந்து, தங்களது மனக்குறைகளை கொண்டு சென்று கொட்டும் இடமாக கோவில்களையும், சிலை வழிபாடுகளையும் வைத்திருக்கின்றனர்.

இதில், அவர்களுக்கு தேவையான மன அமைதியை மற்றவர்களால் கொடுக்க முடியாது.

காரணம் இவர்கள் எதை அறிய வேண்டுமோ, அதை அறிய ஆர்வமில்லாமல், மனம் போன போக்கில் வாழ்க்கையை வாழ்ந்து கொண்டு, அதில் வரும் துன்பங்களின் துயர் தீர்க்கும் இடமாக இறைவனையும் கோவில்களையும் கருதுகின்றனர்.

இதை அறிந்த நம் முன்னோர்கள் இத்தகையவர்களை மாற்றுதல் அரிது, அதனால், இவர்கள் ஆலயங்களின் வாயிலாக அமைதியை அடையட்டும் என்று கொண்டு வந்த வழிமுறைகளில் இந்த சிலை வழிபாடும், கோவில்களும் அகும்.



இந்த பாமரர்கள் தங்களது துயர் துடைக்க கோவிலுக்கு இறைவனைக் காணச் செல்லும் போது, இரண்டு வாழைப்பழங்கள், ஒரு தேங்காய் கொண்டு சென்று வழிபாடு செய்து, தங்கள் மனக்குறைகளை கூறி அழுது விட்டு, மனபாரம் இறங்கியவுடன் மன அமைதியுடன், தாங்கள் கொண்டு சென்ற அதே தேங்காய் மூடி, மற்றும்

வாழைப் பழத்தை பிரசாதமாகத் திரும்ப வாங்கிக் கொண்டு வந்து விடுகின்றனர்.

ஒரு செலவும் இவர்களுக்கு இல்லை. இறைவனும் இவர்களிடம் எதிர்ப்பார்ப்பதும் இல்லை.

ஆனால், அவ்வாறு கோவிலுக்கு போகாதவர்கள், கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள் தங்கள் மனக்குறைகளை கொண்டு சென்று, இறைவனிடம் அழுது புலம்பும் வாய்ப்பு இல்லாததால், மனநல மருத்துவரிடம் அழுது கொட்டுகின்றனர்.

விளைவு, இரண்டயிரம் ரூபாய் மருத்துவ ஆலோசனைக் கட்டணம் பெற்றுக் கொண்டு, இரண்டாயிரம் ரூபாய்க்கு மருந்து, மாத்திரைகளும் அந்த மருத்துவர் கொடுத்தனுப்புகின்றார்.

இதனால், இவர்கள் மனக்குறை தீர்ந்தது என்றால், இல்லை, மேலும், பணவிரயத்துடன் கூடிய, பெரிய மனக்குறையாக மாறி, இன்று மனநல மருத்துவமனைகள் அனைத்திலும் கூட்டம் அலைமோதுகின்றது.

இந்த நிலை வரக்கூடாது என்று நம்முடைய சனாதன தர்மத்தில் வாழ்ந்த முன்னோர்கள் கருதியதின் விளைவே இன்று இத்தனை கோவில்களும், வழிபாடுகளும், திருவிழாக்களும், தேரோட்டங்களும் ஆகும்.

இதனால், மனநல மருத்துவரின் வேலையை கோவில்களும், கோவில் பூசாரிகளும் செய்து கொண்டுள்ளனர். இதுதான் சனாதன தர்மத்தின் தோன்றிய ஞானிகளின் உயர்ந்த அறிவின் வெளிப்பாடு ஆகும்.

இதை அறியாத அதிபுத்திசாலிகள்

“கடவுளை வழிபடுபவன் காட்டுமிராண்டி”

என்றும்,

சிலைகளை வணங்குபவன் முட்டாள்

என்றும் கூறிக்கொண்டு,

இவர்கள் அதிபுத்திசாலிகள் என்று அறிவித்துக்கொண்டு அடி முட்டாள்களாக இருக்கின்றனர்.

பொதுவாக அறியாமை கொண்ட மனிதர்கள் ஒரு இனம் புரியாத பயமும், அதிருஷ்டத்தின் மீது அதிக நம்பிக்கையும் கொண்டிருக்கின்றனர்.

அதனால்தான் கண்ணிற்கு புலப்படாத கடவுள், பரிசுத்த ஆவி என்று எதையாவது ஒன்றை தலைவனாக வைத்துக்கொள்ள விரும்புகின்றனர்.



அவர்களுக்கு “ஜே” கோஷம் போடுவதற்கு ஏதாவது அல்லது யாரையாவது தலைவனாக ஏற்றுக்கொள்ளவும் வேண்டும்.

இதில் இறைவனை தலைவனாக இவர்கள் ஏற்றுக் கொண்டால், மனதில் அமைதி, பயம் கலந்த பக்தி, பாவ, புண்ணியங்களுக்கு பயந்து நல்லவனாக வாழ வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும்.

இதனால் இந்த சமுதாயம் அமைதியுடன் ஆனந்தமாக வாழும் என்று நம் முன்னோர்கள் கருதியதின் விளைவே இந்த சிலை வழிபாடுகளும், கோவில்களும் ஆகும்.

அதுவே, கடவுள் இல்லையென்றும், சிலைகள் வழிபாடு தேவை இல்லை என்றும் கூறிவிட்டாலோ, இந்த பாமரர்களின் நிலை மிக மோசமாக மாறி, கடைசியில் கடவுள் இல்லை என்று கூறுபவர்களையே கடவுள்களாக ஆக்கி, அவர்களது சிலைகளை வைத்து வழிபட ஆரம்பித்து விடுவார்கள்.

இந்த அவல நிலை உண்டாகி விடக்கூடாது என்று நம் முன்னோர்கள் கருதி, கடவுள் சிலைகளை கோவில்களில் பிரதிஷ்டை செய்து வந்தார்கள்.

இது என்றுமே இந்த மனித சமுதாயத்திற்குத் தேவை.

இல்லையென்றால், இந்த பாமர மனிதன் பாதை மாறி போய் விடுவான்.

எனவே, நம் முன்னோர்களான ரிஷிகள் அப்படிப்பட்ட இறைவனை இந்த சாதரண புலன்களினால் காண முடியாது என்றும், அவனை

அறிவினால் அறிந்து கொள்ள வேண்டும் என்ற முறையில் சாஸ்திரங்களை எழுதி, அந்த சாஸ்திரங்களை போதிக்கும் ஆச்சாரியர்களையும், கோவில் வழிபாடுகளுக்கு குருக்களையும் உருவாக்கி, நம்முடைய தர்மத்தைக் கட்டிக் காத்து வந்தனர்.

இந்த மகான்கள் இவ்வாறு இதை கொண்டு வந்ததினால்தான், நம்முடைய பாரதம் ஆயிரம் ஆண்டுகள் அடிமைத்தனத்தில் அன்னியர்களிடம் அகப்பட்டு இருந்தும், அந்த தர்மம் இன்று வரை மாறாமல் நம் தர்மத்தை அறிந்தவர்களால் காப்பாற்றப்பட்டு வருகின்றது.

இந்த கோவில்கள், சிலை வழிபாடுகள் எல்லாம் ஆன்மீகத்தின் முதல் படி நிலை என்று அறிந்திருந்தும், நம் முன்னோர்கள் இதை ஆதரித்ததின் நோக்கம், ஒரு ஜீவன் உயர் நிலைக்கு வருவதற்கு இந்த படி நிலைகள் தேவை என்பதினால்தான் ஆகும்.

ஒரு மாணவன் படித்து முடித்து, பட்டம் வாங்கி விட்டான் என்றால், அவன் ஆரம்ப பாடங்கள் தேவையில்லை என்று கூற முடியாது.

ஏனெனில், அவன் பட்டம் வாங்க, முதன் முதலாக எழுத்துக்களை பயின்ற இடம் இந்த ஆரம்ப வகுப்பு என்பதை அவன் மறுக்க முடியாது.



அதுப்போல, ஆன்மீகத்தில் மேல் நிலை பெற்று இந்த ஆத்ம ஞானத்தை அடைந்த ஞானிகள் கூட, ஆரம்ப நிலையான சிலை வழிபாட்டையும், கோவில் திருவிழாக்களையும், பூசைகளையும் மறுக்க மாட்டார்கள்.

அதில் உண்மை இருக்க வேண்டும் என்று மட்டும் எதிர்பார்ப்பார்கள்.

எனவே உண்மையான புரிதலுடன் இறைவழிபாடு செய்யுங்கள், கோவிலுக்கும் செல்லுங்கள்.

கடவுள், கோவில்களைக் காரணமாக வைத்து பிரச்சனைகளை மக்களிடையே உருவாக்காதீர்கள்

என்பதே அறிவினால் உயர்ந்த ஆன்றோர்களின் விருப்பம்.

அடுத்து, சாஸ்திரம் பக்தி செய்யும் பக்தர்களையும், முக்தி அடைய விரும்பும் முக்தர்களையும் நமக்கு எப்படி இருப்பார்கள் என்று அடையாளம் காட்டுகின்றது.

இறைவனை வழிபடும் பக்தர்களில் ஆர்த்த பக்தன், ஜிக் ஞாஸு பக்தன், அர்த்தார்த்தீ பக்தன் ஆகிய மூன்று வகை பக்தர்களின் தனித் தனி இயல்புகளை இங்கு காணலாம்.

**ஆர்தபக்தன்:**

ஆபத்து, வியாதி போன்ற தன் கஷ்டங்களையும் பாவங்களையும் அழிக்க வேண்டும் என்ற ஒரே லட்சியத்துடன் பகவானை தொழுது பஜனை செய்வது கோவில் திருப்பணிகளை செய்வது ஆகிய வழிகளால் இறைவனை ஆராதிப்பவன் **"ஆர்தபக்தன்"** ஆகின்றான்.

**ஜிக்ஞாஸு பக்தன்:**

பகவான் என்றால் அவருடைய ஆற்றல் என்ன ? பகவானை தத்துவார்த்தமாக எப்படி அறிய முடியும்

எங்கும் நிறைந்த ஈசன் எப்படி அருள் பாலிக்கிறார்? என்று பகவானை பற்றி நன்கு அறிய விரும்பும் வேட்கை கொண்டவன் தன் அரிய பிரேமை பக்தியால் உபாசனை செய்து நெருங்குகிறவன் "**ஜிக்ஞாஸு பக்தன்**" ஆகின்றான்.

<u>**அர்த்தார்த்தீ பக்தன்:**</u>

இவன் புராண காலத்து அசுரர்கள் போல தவமிருந்து நாம ஜபம், தியானம் செய்து வரங்களை கேட்பான். மேன்மையான வாழ்வு, பெயர், புகழ், செல்வம் எல்லாம் பகவானிடம் விரும்புவான்.

உலகத்தின் நிலையில்லா, அற்ப சுகங்களுக்கும், சந்தோசங்களுக்கும், பகவானிடம் கையேந்துவது எப்படி இருக்கிறதென்றால், பொன்னும், பொருளும், ரத்தினங்களும் வழங்கும் பெரும் செல்வந்தனிடம் போய் எனக்குத் தவிடு வேண்டும் என்று கேட்பது போல உள்ளது.

உண்மையில் செல்வத்தினுள் பெரும் செல்வம் இறைவன் அல்லவா? அந்த செல்வத்தை அடைந்த பின் வேறு எந்த செல்வம் பெரிதானது?

அல்லது வேறு செல்வதை எதற்காக விரும்ப வேண்டும்?

அதுபோல ஆர்த்த பக்தி, அர்த்தார்த்த பக்தி, ஜிக்ஞாஸு பக்தி ஆகியவற்றில் **ஜிக்ஞாஸு பக்தியே** சிறந்ததாக முதலிடம் பெறுகிறது.

அடுத்து, இறைவனை அறிய பக்தி வழி, முக்திப் பாதைகள் நான்கு உள்ளன. ஞானவழி முக்திப் பாதைகள் மூன்று உள்ளன.

இறைவனை பக்தி செய்து முக்தி அடைய, **சரியை, கிரியை, யோகம், ஞானம்** என்னும் நான்கு முக்தி நிலைகள் கூறப்படுகின்றது.

தமிழில் இவற்றை ஒழுக்கம், செயல், தவம், மெய்யுணர்தல் எனலாம்.

**சரியை**

ஒருவன் அதிகாலைப் பொழுதில், சூரிய உதயத்திற்கு முன்பு எழுந்து, குளித்து தூய உடை அணிந்து, இறைவனை **உருவ** வழிபாடு செய்து, **“பக்தன்”** என்ற நிலையில் தொண்டு புரிந்து, இறைவனை அடையும் பாதையான “**தாச மார்க்கம்**” மேற்கொண்டு “**சாலோகம்**” என்ற நிலையை அடைவது.

## கிரியை

ஒருவன் இறைவனை **உருவமும், அருவமும்** கலந்த நிலையில் வழிபட, வழிபட மக்கள் தொண்டே மகேஷன் தொண்டு என்ற நிலை உருவாகி, மற்றவர்களுக்கு பல நற்செயல்களைச் செய்து, "**கர்மவான்**" என்ற நிலையில் "**கடவுளை தந்தையாகவும், தன்னை கடவுளின் புத்ரனாகவும்**" அனுஷ்டித்து அடையும் பாதையான "**சத்புத்ர மார்க்கம்**" மேற்கொண்டு "**சாமீபம்**" என்ற நிலையை அடைவது.

## யோகம்

ஒருவன் இறைவனை **அருவமாக** வழிபட ஆரம்பித்து, பிராணாயாமம், ஆசனம் போன்ற அஷ்டாங்க முறையில் பயிற்சிகள் மேற்கொண்டு, இறைவனை நண்பன் போல பாவித்து, "**யோகி**" என்ற நிலையில் அவனை அடையும் பாதையான "**சகமார்க்கம்**" மேற்கொண்டு "**சாரூபம்**" என்ற நிலையை அடைவது.

இப்படி **மேற்சொன்ன மூன்று பாதைகளில்** இறைவனை அடைய விரும்புபவர்கள் பெறுவது "**பதமுக்தி**" ஆகும்.

**ஞானம்**

ஒருவன் மனக்கண்ணால் தான் இன்னது என்று அறிந்து அம்மயமாகி, மஹாவாக்யத்தின் பொருளுணர்ந்து, பரம தாத்பர்யத்தை ஆராய்ந்து, பிரபஞ்சம், ஜீவன், ஈஸ்வரன் இவற்றின் மூல தத்துவத்தை அறிந்து, காண்பவன், காட்சி, காணப்படும் பொருள் இந்த மூன்றும் ஒன்றேயான அந்த பரப்பிரம்மம் என்று அறிந்தவன் "**ஞானி**" என்ற நிலையில் "**சன்மார்க்கம்**" மேற்கொண்டு "**சாயுஜ்யம்**" என்ற நிலையை அடைவது.

இது "**பரமுக்தி**" என்ற பரமானந்த நிலையாகும்.

இதில் சன்மார்க்க நிலையான "**பரமுக்தி**" பெற்றவன், மறுபிறவி இல்லாததால் மீண்டும் பிறக்காமல், இறைவனுடன் இரண்டறக் கலந்து விடுவான்.

இந்த நான்கு பாதைகளின் வழியாக பயணத்தை மேற்கொள்ளும் எவரும் அந்த பரமபதத்தை அடைய முடியும்.

அடுத்து, ஞானத்தின் வழி நின்று முக்தி பெறுவது.

இது  ஜீவன் முக்தி, கிரம முக்தி, விதேக முக்தி என்று மூன்று வகைகள் உள்ளன.

## ஜீவன் முக்தி

ஒரு ஜீவன் உயிருடன் இருக்கும் பொழுதே தன்னை அறிந்து, தன்னிடம் உள்ள குறைகளைக் கலைந்து சோகம், நிறைவின்மை, ஆழ்மனக்குறைகள், பொறாமை, மற்றும் மரண பயம் போன்ற அனைத்திலிருந்தும் விடுதலை அடையும் திருப்தி நிலையை “**ஜீவன் முக்தி**” என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

இந்த ஜீவன் முக்தர்கள் வாழும் பொழுதே, தன்னை அறிந்த தத்துவ ஞானிகளாக இருப்பார்கள். இவர்கள் இறை தியானத்தில் சதா அந்த அந்தர்யாமியான பகவானுடன் இணைந்து மகிழ்ந்து இருப்பார்கள். இவர்கள் மற்ற மக்களுடன் ஒட்ட மாட்டார்கள். தன்னை நாடி வருகின்ற அடியார்களுக்கு அறிவுரை வழங்குவார்கள். அவர்களது அறியாமையை நீக்கி, அனைத்தையும் அறியும் அறிவைக் காட்டிக் கொடுப்பார்கள். இவர்கள் தங்களது உடல் இன்பங்களுக்கோ, உடல் அழிவதைப் பற்றியோ கவலைப் பட மாட்டார்கள். இவர்களைப் பொருத்தவரை இந்த தேகம் நிலையற்றது என்றும்,

நிலையான சைதன்யமே “**நான்**” என்ற ஆத்மாவின் புரிதலும் இருக்கும்.

**<u>கிரம முக்தி</u>**

ஒருவன் இந்த பிறவியில் இறைத் தேடுதலில் ஈடுபட்டு, சாஸ்திரங்களை அறிந்தும், முழு பிரம்ம ஞானத்தை அடைய இயலா விட்டாலும், தான் செய்த புண்ணியத்தின் காரணமாக, பிரம்ம லோகத்தை அடைந்து, அங்கு முழு பிரம்ம ஞானம் அடைந்து முக்தி பெறுகிறான். இவ்வாறு கிரம முக்தி பெற்றவன் மறுபிறவி எடுப்பதில்லை. எதை அடைந்தால் மறுபிறவி இல்லையோ, அதுவே பிரம்மத்தின் இருப்பிடம்.

**<u>விதேக முக்தி</u>**

அழியாத சைதன்யம் மட்டுமே “நான்” என்று ஆத்மாவை அறிந்த மன நிலையில் இனி பிறப்பு, இறப்பு சக்கரத்தில் சிக்காத சூழலான ஞானம் என்ற ஒன்றை அடைந்ததன் வாயிலாக, வாழும் காலத்திலேயே “**ஜீவன் முக்தன்**” என்றும், இவன் தன்னுடைய தேகத்தை விட்டவுடன் அனைத்து கர்ம வினைகளும் நீங்கப்பெற்ற நிலையில் அடைகின்ற

முக்திக்கு “**விதேக முக்தி**” என்றும் சாஸ்திரம் அழைக்கின்றது.

விதேக முக்தி என்றால் “**பிறவாமை**” என்று பொருள்.

ஒருவன் கங்கா சாகரத்திற்குப் புனிதப் பயணம் மேற்கொள்ளலாம், விரதங்களைக் கடைப் பிடிக்கலாம். விழாக்களை அனுசரிக்கலாம், தான தர்மங்கள் செய்யலாம். ஆனால் உண்மையான சத்துவ குணத்துடன் கூடிய ஜிக்ஞாஸு பக்தியின்றி, இறைவனை அறிய முடியாது, அவ்வாறு, இறைவனையும், இந்த ஜகத்தையும், தன்னையும் அறிந்த ஞானத்தை பெறாமல் நூறு பிறவிகளானாலும் “**விதேகமுக்தி**” பெற முடியாது என்ற சத்தியத்தை நம்முடைய சனாதன தர்மம் போதிக்கின்றது.

இந்த சத்தியத்தை அறிய விரும்புகின்ற, ஒவ்வொரு ஜீவனுக்கும் மூன்று உடல்கள் உள்ளன. அவைகள், ஸ்தூல உடல், சூக்ஷும உடல், காரண உடல் என்பவை ஆகும்.

இதில், இந்த ஸ்தூல உடல் கிடைக்க, அந்த ஜீவன் முற்பிறவிகளில் செய்த பாவ, புண்ணியங்களை

கொண்டு, அதன் பலன்களாக பாவத்திற்கு துன்பத்தையும், புண்ணியத்திற்கு இன்பத்தையும் அனுபவிக்க உடல் கிடைக்கின்றது.

இந்த ஸ்தூல உடல் தனக்கு கொடுக்கப்பட்ட ஐந்து புலன்களான கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தோல் என்று இவைகளைக் கொண்டு இன்ப, துன்பங்களை அனுபவப்படுகின்றது.

இந்த ஸ்தூல உடல் பெறுகின்ற அனுபவத்தை, மனம், புத்தி, சித்தம் மற்றும் அஹங்காரம் என்ற கண்ணிற்குத் தெரியாத அந்தக்கரணங்களை கொண்ட சூக்ஷும தேகம் அனுபவிக்கின்றது.

**(குறிப்பு:-** உண்மையில் இந்த ஸ்தூல தேகம் எதையும் அனுபவிப்பதில்லை. சூக்ஷும தேகத்தின் வாயிலாகவே அனைத்தையும் அனுபவிக்கின்றது.

இது எப்படியென்றால், இறந்த உடலும் ஸ்தூல தேகம்தான், அதனிடமும் கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தோல் இருக்கின்றது. ஆனால், அதனால் எதையும் அனுபவிக்க முடியவில்லை என்பதிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும், அத்தனை அனுபவங்களும் கண்ணிற்குத் தெரியாத

சூக்ஷும தேகத்தின் வாயிலாக மட்டுமே நடைபெறுகின்றது).

இந்த சூக்ஷும தேகம் அனுபவிக்கும் இன்ப, துன்பங்களுக்கு காரணமாக அமைவது, காரண தேகம் என்ற ஒன்றாகும்.

இந்த காரண தேகமே, அந்த ஜீவனின், பாவ, புண்ணியங்களை வைத்துக் கொண்டிருக்கின்ற ஒரு சேமிப்புக் கிடங்கு போல ஆகும்.

அதனால்தான், இந்த காரண உடலானது, தன்னிடம் வைத்துக் கொண்டுள்ள அந்த ஜீவனின் பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப உடல் கொடுக்க முடிவு செய்து, அந்த ஜீவன் ஸ்தூல உடல் எடுக்க முதலில் சூக்ஷும உடலை வடிவமைத்து, அதன் பிறகு இந்த பரு உடலான ஸ்தூல தேகத்தை கொடுக்கின்றது.

இவ்வாறு உடல் பெற்ற ஜீவன்கள் அந்த காரண தேகமான சேமிப்புக் கிடங்கிலிருந்து கொண்டுவந்த சிறிது பாவ, புண்ணியங்களுக்குத் தக்க உடலைக் கொண்டு, அதன் வாயிலாக இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவிக்கின்றது.

இந்த காரண உடலுக்கு உண்டான பாவ, புண்ணியங்களை அந்த சர்வேஸ்வரன் தன்

அதிகாரத்தின் கீழ் அந்த ஜீவனிடத்திலேயே வைத்திருக்கின்றார்.

அதனால்தான், ஜீவர்கள் எங்கிருந்து என்ன செயல் செய்தாலும், அதை அந்த சர்வேஸ்வரன் அறிவார்.

இதை இன்றைய நவீன தொழில் நுட்ப விஞ்ஞான அறிவைக் கொண்டு அறிய முற்படலாம்.




செல்போன்களான ஜீவர்களுக்கு விதவிதமான உடல் கிடைத்திருக்கின்றது. இந்த கண்ணுக்கு தெரியும் ஸ்தூல “செல்போன்” உடல் செயல்பட, கண்ணுக்குத் தெரியாத **“சிக்னல்”** என்ற சூக்ஷ்ம உடல் தேவைப்படுகின்றது. இந்த கண்ணுக்குத் தெரியாத சூக்ஷ்ம உடலான சிக்னல் செயல்பட, காரணமான

காரணத் தேகமாக செல்போன் “**சிக்னல் டவர்**” அவசியமாகின்றது.



இந்த ஸ்தூல, சூக்ஷும உடல்களான, செல்போனும், சிக்னலும் செயல்படக் காரணமான, காரண உடலைக் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும் “**சர்வர்**” (Server) என்ற சர்வேஸ்வரன் தேவை.

அதனால்தான் செல்போன் எங்கிருந்து என்ன பேசிக்கொண்டாலும் அனைத்தையும் அந்த சர்வர் அறிய முடிகின்றது.

இப்பொழுது புரியும், இந்த ஒவ்வொரு ஜீவர்களுக்கும், உடலாக ஸ்தூல, சூக்ஷும, காரண தேகம் இருப்பதின் அவசியம்.

இந்த காரண தேகம் இறைவனின் கட்டுப்பாட்டில் இருக்கும். அதனால்தான், ஜீவர்களின் ஒவ்வொரு செயலுக்கும் உண்டான நன்மை, தீமைகளை அந்த இறைவன் அறிந்து, அதனதன் வினைகளுக்கு ஏற்ப பாவ, புண்ணியங்களை, அவை அவைகளுக்கு அனுபவிக்கக் கொடுக்கின்றான்.

இந்த சிக்னல் இல்லையென்றால், செல்போனுக்கு ஒரு செயல்பாடும் இல்லை அல்லவா, அதுப்போல, இந்த சூக்ஷும தேகம் இல்லையென்றால், இந்த ஸ்தூல தேகம் செயல்படாது.

செல்போன் அலைவரிசை சிக்னல் டவர் இல்லையென்றால், சிக்னலினால் ஒரு பயனுமில்லை என்பது போன்றே, காரண தேகம் இல்லையென்றால், இந்த ஸ்தூல, சூக்ஷும தேகம் இருக்காது.

இந்த சிக்னல்டவரைக் கட்டுப்படுத்தும் கட்டுப்பாட்டு அறையான சர்வர் இல்லையென்றால், சிக்னல்டவர், சிக்னல், மற்றும் செல்போன் இருந்தும் பயனில்லை.

அதுபோல, அந்த சர்வேஸ்வரன் இல்லையென்றால், இந்த ஸ்தூல, சூக்ஷும, காரண உடல்களைக் கொண்ட ஜீவன் இல்லை.

இந்த மூன்று தேகங்களின் செயல்பாட்டை அனைவரும் புரிந்து கொள்வதற்கு எளிதான உதாரணமாக, இந்த நவீன தொழில் நுட்பத்துடன் ஒப்பீடு செய்யப்பட்டுள்ளது.

ஒரு ஜீவன் தன்னை அறிந்து பிறவாமை என்ற பெரு நிலைக்கு செல்ல வேண்டுமானால், பாவம், புண்ணியம் என்ற இரண்டும் கொண்ட காரணத் தேகம் அழிக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் ஜீவனுக்கு ஸ்தூல, சூக்ஷும தேகம் உண்டாகாமல் தடுக்கப்படும்.

இதற்கு அந்த ஜீவன் என்ன செய்ய வேண்டும் என்றால், தன்னை முதலில் அறிந்து கொண்ட பிறகு, தன்னுடைய இந்தப் பிறவிக்கு வந்த ஸ்தூல தேகத்தை பிராரப்த கர்மா கழியும் வரை வைத்துக் கொண்டுதான் இருக்க முடியும். தன்னை அறிந்த ஞானம் வந்தாலும் இந்த ஸ்தூல உடலோடு அனைத்து செயல்களும் செய்யத்தான் வேண்டும்.

ஆனால், என்ன வித்தியாசம் என்றால், தன்னை பூரணமானவன் என்ற சொரூப ஞானத்தை அடைந்த ஞானி, எத்தனை எண்ணங்களை எண்ணினாலும், எத்தனை காரியங்கள் செய்தாலும், துக்கத்திலிருந்து விழித்தெழுந்தவனுக்கு அவன் கண்ட கனவு அத்தனையும் பொய் என்று அறிவதுப் போல, இவன் அறிவான்.

இப்படிப்பட்ட இந்த ஸ்தூல உடலைக் கொண்டு இந்த ஞானி செய்யும் செயலுக்கு ஆகாமிய கர்மாவும் இருக்காது. அதனால், இவனிடம் இருக்கின்ற ஒரே கர்மாவான "**சஞ்சித கர்மா**" என்ற மொத்த கர்மாக்களின் தொகுப்பை தன்னிடம் கொண்ட காரணத் தேகத்திடம் வைத்திருப்பான்.

இதை இந்த ஸ்தூல தேகம் கொண்ட ஞானியினால் தன்னுடைய காரண தேகத்தை ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், இவனது ஞானத்தின் காரணமாக இவன் சாட்சாத் அந்த சர்வேஸ்வரனாகவே சொருபத்தில் இணைந்து விடுவதால், சுத்த பிரம்மம் என்ற நியதிப்படி, இவனது காரண தேகத்தை தன் கட்டுப்பாடில் வைத்திருக்கும் அந்த சர்வேஸ்வரன் அதில் உள்ள

பாவ, புண்ணியங்களை இந்த ஞானியை வழிபடும் அடியார்களுக்கு புண்ணிய பலன்களையும், இந்த ஞானியை தூற்றும், துன்புறுத்தும் அஞ்ஞானிகளுக்கு பாவ பலன்களையும் பகிர்ந்தளித்து, ஞானியின் காரண தேகத்தை அழித்து விடுகின்றான்.

இதனால், வாழும் போதே ஜீவன் முக்தனாக வாழ்ந்த இந்த ஞானி, இந்த ஸ்தூல தேகத்தை விட்டு விட்டு செல்லும் போது, விதேக முக்தியை அடைகின்றான். அதாவது, தேகமற்ற நிர்குண பிரம்மத்தில் இரண்டறக் கலந்து விடுகின்றான்.

அதாவது, வி + தேகம் = தேகங்கள் அற்ற நிலை என்று பொருள்.

அடுத்து, மன அமைதிப் பெற கோவிலுக்கு போகின்றேன் என்று கூறிக் கொண்டு, ஞாயிறுக்கிழமை சூரியனை வழிபடவும், திங்கட்கிழமை சிவனை வழிபடவும், செவ்வாய் கிழமை முருகனை வழிபடவும், புதன் கிழமை ஐயப்பனை வழிபடவும், வியாழக்கிழமை குருவை வழிபடவும், (இதில் நவக்கிரக குருவிற்கும், தட்சிணாமூர்த்தி குருவிற்கும் வித்தியாசம் தெரியாமல் வழிபடுவது), வெளிக்கிழமை

அம்பாளை வழிபடவும், சனிக்கிழமை பெருமாளை வழிபடவும் என தினம் ஒரு கோவில் என்று பட்டியல் போட்டு போகின்ற இவர்களைப் பார்த்து திருமூலர் கூறுகின்றார்.

இந்த மனித உடலைக் கொண்டு கோவிலுக்கு சென்று, கோபுர நுழைவாயில் வாசலைக் கடந்து, ஆலயத்தின் உள்ளே சென்று தீபமேற்றி, உடம்பினை அந்த கூட்ட நெரிசலில் ஒடுக்கி சிவலிங்கத்தை வழிபடும் மனிதா, புற வழிபாட்டிற்காக தோற்றுவிக்கப்பட்ட கோயில்கள் அனைத்திலும் மட்டுமே உன்னுடைய மனதை செலுத்திக் கொண்டே இருந்தால், அகத்தே சொல்லப்பட்ட இந்த கோயிலின் ரகசியங்களை என்றுதான் அறிவது?

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே.**

**– திருமூலர்.**

இந்த உடல் சிதையாமல் இருக்கும் பொருட்டு, இதனையே நுழைவாயிலாகக் கொண்ட பிராணன் என்ற வள்ளல், எப்பொழுதும் உள்ளும், புறமும்

வற்றாத மூச்சுக்காற்றாக சென்று, இந்த ஊன் என்ற சதையால் ஆக்கப்பட்ட இந்த உடம்பினைப் பயன்படுத்தி, கள்ளப் புலன்களின் பிடியில் சிக்காமல், அந்த புலன்கள் ஐந்தையும், ஐந்து தீபங்களாக தெள்ளத் தெளிந்த அறிவினைக் கொண்டு பற்ற வைத்த வெளிச்சத்தைக் கொண்டு உள்ளம் என்ற பெருங்கோவிலுக்குள்ளே பார்த்தால், சீவனே சிவமாக ஒடுங்கி இருப்பது தெரியும் என்கின்றார் திருமூலர் தான் எழுதிய திருமந்திரத்தில்.

**எல்லை யில்லா ஆனந்தம் அளித்(து)**
**அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்**
**சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்**
**சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி**
**அணுவிற்(கு) அணுவாய் அப்பாலுக்(கு)**
**அப்பாலாய் …**

என்ற விநாயகர் அகவலின் வாயிலாக
ஔவையாரும் அருந்தமிழால் பாடியுள்ளார்.

அப்படி, உன்னுள் இருக்கும் அந்த இறைவனை அறியாமல், இந்த பிரபஞ்சத்தில் வெளியே தேடினால், திருமாலும், நான்முகனும் காண முடியாமல் திரும்பி வந்த, கதையல்லவா உன்னுடைய வாழ்க்கையிலும் நடக்கின்றது

என்று அறிவால் உயர்ந்த ஆன்றோர்கள் பாமரனுக்கு அறிவை புகட்ட முயற்சிக்கின்றார்கள்.

இந்த மனிதனுடைய **“உள்ளம்”** மட்டுமே இறைவன் குடி இருக்கின்ற லோகம் என்ற மகத்தான இரகசியத்தை வெளிப்படுத்துகின்றது சனாதன தர்மம்.

அடுத்து, இறைவழிபாட்டில், கோவில்களையும் சிலைகளையும், மட்டுமே பிடித்துக் கொண்டு, மனம் உண்டாக்குகின்ற துஷ்டமதி மயக்கத்தில் சிக்கிக் கொண்ட சிறை வாழ்க்கையிலிருந்து விடுதலைக் கொடுக்கும் உயர்ந்த **”முக்தி”** நிலைகளுக்கு போக விரும்பாமல், சாதாரணமான வாழ்க்கை வாழ்ந்து, அஞ்ஞானத்தில் உலக இன்பங்களையே பெரிதென விரும்பி, வெட்டிக்கதைளைப் பேசி, மற்றவர்களின் கேளிக்கைகளுக்கு ஆளாகி, கிழப்பருவம் எய்தியும், அறிவு வளராமல், வீண் பொழுதைப் போக்கி, தன் வாழ் நாட்களை முடித்து, உயிரை விட்ட ஜீவன்கள் மீண்டும் பிறவிக்கு வருகின்றன என்று சாஸ்திரம் கூறுகின்றது.

மறுபிறவி நம்பிக்கையைப் பற்றி நம் “**சனாதன தர்மம்**” என்ன கூற வருகின்றது என்றால், ஒரு

ஜீவன் மீண்டும் பிறப்பதற்கு, அவனது பாவ, புண்ணியங்கள் என்ற முன்வினையே காரணம் ஆகும்.

ஒருவன் செய்த பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப, அவன் இந்த பிறவியில் இன்ப, துன்பங்களை அனுபவித்து வாழ்ந்து முடித்து, உடலை விட்டு விட்டு, இறந்து போன பிறகு, இந்தப் பிறவியின் வாயிலாக செய்த பாவ, புண்ணியங்களையும் கொண்டு சென்று, தன்னுடைய ஒட்டு மொத்த சேகரிப்பான “சஞ்சித கர்மா” என்ற மொத்தக் கர்ம குவியலில் கொண்டு போய் சேர்த்துக் கொள்கின்றது.

அப்படி சேர்த்துக் கொண்ட மொத்த குவியலான சஞ்சித கர்மா குவியலில் இருந்து, மீதமுள்ள பாவ, புண்ணியங்களில் சிறிதை எடுத்துக் கொண்டு, அவைகளை அனுபவிக்க, மற்றொரு உடல் எடுத்து வருகின்றது.

இந்த பாவ, புண்ணியங்களின் பலன்களை அந்த ஜீவன் அனுபவிக்க வேண்டி அதை மூன்றாக சாஸ்திரம் வகுக்கின்றது.

அவைகள்,

பிராரப்த கர்மா, ஆகாமிய கர்மா, சஞ்சித கர்மா எனப்படும்.




இதில், ஒரு ஜீவன் பல பிறவிகளில் தான் செய்த பாவ, புண்ணியங்களின் ஒட்டுமொத்த தொகுப்பை சேகரித்து வைத்துக் கொண்டுள்ள இடம் தன்னுடைய காரணத்தேகம் என்றும், அந்த பாவ, புண்ணிய ஒட்டு மொத்த குவியலுக்கு **“சஞ்சித கர்மா”** என்றும் அழைக்கின்றது.

இந்த சஞ்சித கர்மா குவியலில் இருந்து தற்போதைய பிறவிக்கு உடல் எடுத்து வருகின்ற ஜீவன், சிறிது பாவமும், சிறிது புண்ணியமும் கொண்டு வந்து அவைகளை இன்ப, துன்பங்களாக

அனுபவித்து வருவதை “**பிராரப்த கர்மா**” என்று அழைக்கின்றது.

அப்படி கொண்டு வந்த பிராரப்த கர்மா பாவ, புண்ணியங்களை இந்தப் பிறவியின் வாயிலாக அனுபவித்து தீர்க்க முயலும் போதே, புதியதாக இந்தப் பிறவியின் வாயிலாக சில புதிய, பாவ, புண்ணியங்களை உண்டாக்கிக் கொள்கின்றன. அந்த புதிய பாவ, புண்ணியங்களை “**ஆகாமிய கர்மா**” என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

இப்படி வந்த ஜீவன் தன்னுடைய பிராரப்த கர்மா வை அனுபவித்து முடித்து விட்டு, இந்த பரு உடலை விட்டு, விட்டு செல்லும் போது, புதியதாக சேர்த்துக் கொண்ட பாவ, புண்ணியங்களாக ஆகாமிய கர்மாவை கொண்டு சென்று மீண்டும், மீண்டும் காரண தேகமான சஞ்சித கர்மாவில் சேர்த்து, உடல் கிடைக்க காரணமான, காரணத்தேகத்தை இன்னும் பெரிதாக்கிக் கொள்கின்றது.

சாஸ்திரத்தின் வாயிலாக சனாதன தர்மம் என்ன கூற வருகின்றது என்று, அறிந்து கொள்ளாத அஞ்ஞானிகளின் மறுபிறவிக்கு இந்த காரண தேகமே காரணமாக அமைகின்றது.

இப்படி மீண்டும், மீண்டும் பிறந்து, இறந்தவர்கள் மறு பிறவி எடுத்து, பூமிக்கு வராமல், சொர்கப்பதவி அடைந்தார்கள், வைகுண்ட பதவி அடைந்தார்கள் என்று கூறுகின்றார்களே அது உண்மையா? என்றால்,

இந்த ஜீவர்கள் தாங்கள் செய்த பாவ, புண்ணியங்களின் குவியலான ஒட்டு மொத்த சஞ்சித கர்மா குவியலில் இருந்து அதிகப்படியான புண்ணியங்களை மட்டும் எடுத்துக் கொண்டு சொர்கத்திற்கும், அதிகப்படியான பாவத்தை மட்டும் எடுத்துக் கொண்டு நரகத்திற்கும் செல்கின்றன என்று சாஸ்திரம் கூறுகின்றது.

மேலும் சாஸ்திரம் இத்தகைய ஜீவர்கள் வாழுகின்ற லோகங்களை, ஈரேலு பதினான்கு லோகங்கள் உள்ளன என்றும், அதில் நாம் வசிக்கும் இந்த பூமியும் ஒன்று என்றும் கூறுகின்றது.

இந்த லோகங்களில் சில நாம் வசிக்கும், பூமியைப் போன்று ஸ்தூலமாகவும், சில கண்ணிற்கு புலப்படாத சூக்ஷும லோகங்களாகவும் இருக்கும் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

இவர்கள் சாஸ்திரம் கூறுவதை மனதினால் கற்பனை செய்து கொண்டு, சொர்கம் என்பது மகிழ்ச்சியை அனுபவிக்கும் இடமாகவும், நரகம் என்பது துயரத்தை அனுபவிக்கும் இடமாகவும் கொண்டு, அந்த ஜீவன் சொர்கம் சென்று, ஆடிப்பாடி, ஆனந்தத்தை அடையலாம் என்றும், நரகம் சென்று பெரும் துயரங்களை அடையவேண்டும் என்றும் இவர்கள் நினைத்துக் கொள்கின்றனர்.

ஆனால், இந்த சொர்கமும், நரகமும், ஒவ்வொருவரின் மனதைச் சார்ந்தது என்பதை இவர்கள் கொடுக்கப்பட்ட பகுத்தறிவைக் கொண்டு அறிய முயற்சி செய்ய வேண்டும்.

இந்த பகுத்தறிவைக் கொண்டு கடவுள், இல்லை, இருக்கின்றார் என்று சண்டையிடாமல், அறிவைக்கொண்டு விசாரம் செய்து, உண்மை என்ன என்பதை அறியவேண்டும்.

அதன் அடிப்படையில், இந்த ஐந்து புலன்களின் வாயிலாக, புலன் இன்பங்களை அனுபவிக்க விரும்பும் ஒருவன் சூக்ஷும உடலான மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும தேகத்தை எடுத்துக்கொண்டு

மட்டுமே, மற்ற லோகங்களான சொர்கத்திற்கோ, நரகத்திற்கோ செல்ல முடியும். அங்கு, இந்த பூமியில் உள்ளது போன்ற பூதஉடல் என்ற ஸ்தூல உடல் கிடையாது.

இதில் சொர்க்கம் என்பது மனதிற்கு இன்பத்தை அனுபவிக்கும் இடம், நரகம் என்பது மனதிற்கு துன்பத்தை அனுபவிக்கும் இடம் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

இது பஞ்ச பூதங்களால் ஆன, இந்த ஸ்தூல உடல் சுகத்தை அனுபவிப்பதாகவே பலரும் கருதுகின்றனர். அதனால்தான் பிறப்பிற்கு அவசியமான காம இச்சை முதல் கொண்டு, அனைத்து சுக, துக்கங்களையும் அனுபவிக்க இந்த உடல் தேவை என்று கடைசியில் கல்லறைக்கு போகின்றவரை சிலர் நினைக்கின்றனர். அவர்களது அறிவில் இந்த உடலைக் கொண்டு இன்பம் அனுபவிப்பதாக நினைக்கின்றனர்.

அதனால்தான் இதுபோன்ற சிலர், இங்கு பூலோகத்தில் இந்த ஸ்தூல உடலைக் கொண்டு அனுபவிக்கும் சுகம் போன்றே, சொர்க லோகத்தில் ரம்பா, ஊர்வசி நாட்டியத்தைக் காண

சொர்கம் செல்ல வேண்டும் என்று ஆசைப்படுகின்றனர்.




இவர்களது அறியாமையைப் பார்த்து பரிதாபம் அடைய வேண்டுமே ஒழிய, இவர்கள் அறிவாளிகளாக மாற இன்னும் பல பிறவிகள் இந்த பூமிக்கு வந்து இங்குள்ள நடிகைகளான ரம்பா, ஊர்வசியின் நடனங்களைப் பார்க்க அனுமதிக்க வேண்டும்.

இது இந்த ஸ்தூல தேகத்தின் புலன்களான கண், காது, நாக்கு, முக்கு போன்றவைகளினால் விளைந்த ஆசைகள்.

உண்மையில், ஒருவன் இறந்தவுடன் அவன் அனுபவிக்க, ஸ்தூல உடல் இல்லாததினால், அந்த ஜீவன் சூக்ஷ்ம உடல் புலன்களான மனம், புத்தி, சித்தம், மற்றும் அஹங்காரம் என்ற கண்ணிற்கு தெரியாத உடலைக் கொண்டே இனி சுக, துக்கங்களை அனுபவிக்க முடியும்.

**(குறிப்பு:-** உண்மையில் இந்த ஸ்தூல தேகம் எதையும் அனுபவிப்பதில்லை. சூக்ஷ்ம தேகத்தின் வாயிலாகவே அனைத்தையும் அனுபவிக்கின்றது.

இது எப்படியென்றால், இறந்த உடலும் ஸ்தூல தேகம்தான், அதனிடமும் கண், காது, மூக்கு, நாக்கு மற்றும் தோல் அப்படியே இருக்கின்றது. ஆனால், அதனால் எதையும் அனுபவிக்க முடிவதில்லை என்பதிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும், அத்தனை அனுபவங்களும் கண்ணிற்குத் தெரியாத சூக்ஷ்ம தேகத்தின் வாயிலாக மட்டுமே நடைபெறுகின்றது).

உண்மையில் நாம் நினைத்துக் கொண்டிருப்பதுப் போல, இந்த பரு உடலில் எந்த இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவிக்க முடியாது. கண்ணுக்கு புலனாகாத மனதின் மூலமாக மட்டுமே சுக, துக்கங்களை அனுபவிக்க முடியும்.

(மற்றொரு உதாரணத்தைக் கொண்டு புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும். அதாவது, ஒருவன் ஆழ்ந்த யோசனையில் நடந்து சென்று கொண்டே இருக்கும் பொழுது, ஒரு ஆணியோ, அல்லது கம்பியோ காலில் குத்தி இரத்தம் வந்தாலும், அதை இந்த ஸ்தூல உடல் அறிய முடியாமல், அவனது அந்த யோசனைகளையே மனம் ஆராய்ந்துக் கொண்டிருப்பதால், அவனுக்கு இரத்தம் வருவதும், வலி உண்டாவதும் தெரிவதில்லை. அதுவே, அவன் அந்த யோசனைகளை ஒரு முடிவுக்கு கொண்டு வந்தவுடன்தான், அவனது மனம் ஸ்தூல உடலின் வழியை உணர ஆரம்பிக்கின்றது. அதன் பிறகுதான் அவனது காயத்தையே அவன் கவனிப்பான்.)

இதை அறிந்து, சொர்கத்திலும், நரகத்திலும் இது போன்று சூக்ஷும உடலின் வாயிலாக சுக,

துக்கங்களை அனுபவிக்க விரும்பும் ஒரு ஜீவன், அங்கும் அவைகளின் மனம் சார்ந்த ஏற்றத் தாழ்வுகளின் காரணமாக, இன்பத்தையோ, துன்பத்தையோ அனுபவிக்கும்.

அது எப்படியெனில், சொர்கத்தில் உள்ள இந்திரனது உயர்ந்த பதவி மற்ற ஜீவர்களுக்கு பொறாமையை கொடுக்கும். நரகத்தில் உள்ள எமனுடைய பதவி மற்ற ஜீவர்களுக்கு பயத்தைக் கொடுக்கும்.

அங்கும், இந்த ஜீவர்கள் அவரவர்களிடம் வளர்த்துக்கொண்ட நல்ல மனம், கெட்ட மனம் என்ற அடிப்படையில், சுகமாகவும், துக்கமாகவும், மற்ற ஜீவன்களைப் பார்த்து, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற ஏற்றத்தாழ்வுகளையும் அனுபவிக்கின்றனர்.

இங்கு பூலோகத்தில், பிரதம மந்திரி, முதலமைச்சர், எம்.எல் ஏ. கவுன்சிலர், வார்டு, வட்டம், என்ற பதவி வேறுபாடுகளினால், இவனை விட, அவன் உயந்தவன் என்ற மனக்குறை இருப்பது போன்றே, அங்கும் இந்திரன், அவனுக்கு கீழ் உள்ள சில உயர் பதவி

வகிப்பவர்களைக் கண்டு அங்கும் இதுபோன்ற மனக்குறைகளை காண வேண்டியது இருக்கும்.

ஆனால், இதுபோன்ற நிலையில் இந்திரன் முதற்கொண்டு அனைத்து தேவர்களும் சூக்ஷும தேகத்தில்தான் (கண்ணிற்குத் தெரியாமல்) இருப்பார்கள். பூமியில் உள்ளது போன்று இந்த ஸ்தூல தேகத்தில் இருந்து புலன் இன்பங்களை அனுபவிப்பார்கள் என்று எதிர் பார்ப்பது இந்த மனித மனத்திற்கே உண்டான அறியாமையாகும்.

இவ்வாறு இந்த ஜீவர்கள் தங்களது சூக்ஷும உடலின் மூலமாக மட்டுமே இந்த பூலோகம், சொர்க்கலோகம், நரகலோகம் போன்றவற்றில் அனுபவிக்கும் இன்ப துன்பங்களையே "**சொர்கம்**", "**நரகம்**" என்று அழைக்கின்றது சாஸ்திரம்.

அதுப்போலவே, ஒரு ஜீவன் ஸ்தூல உடல் கிடைத்து இந்த பூமிக்கு பிறவிக்கு வரும் காலம் வரை மற்ற லோகங்களிலும், லோகங்களே இல்லாமல் வெட்ட வெளியிலும் சுற்றி, சுற்றி அலைந்துக் கொண்டிருக்கும்.

பொதுவாக, இந்த ஸ்தூல தேகத்தை இந்த பூமியிலேயே அழித்து விட்டுப் போகின்ற ஒரு

ஜீவன், தான் இறக்கும் தருவாயில் மிகுந்த கோபமும், அதிக ஆசைகளும் கொண்ட மனதுடன், இந்த ஸ்தூல உடலை விட்டவுடன், சூக்ஷும உடலான மனம் பற்றியிருக்கின்ற விசயங்களான வாசனைகளின் மூலமாக, தன்னுடைய மறு பிறவிக்கு உண்டான ஸ்தூல தேகம் கிடைக்கும் வரை, அதனிடம் உள்ள ஆசையையும், கோபத்தையும் கொண்டு மிகுந்த துயரத்தை அனுபவிக்கும் சூழ்நிலையையே சாஸ்திரம் "**நரகம்**" என்று கூறுகின்றது.

அதுவே, ஒரு ஜீவன் அன்பும், கருணையும் கொண்ட மகிழ்ச்சி நிலையில் இந்த ஸ்தூல உடலை இந்த பூமியிலே விட்டு விட்டு, சூக்ஷும தேகமான மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அந்தக்கரணங்களைக் கொண்டு வெளிப்படும் பொழுது, அது மகிழ்ச்சியான மன நிலையில் இருந்ததினால், அந்த ஜீவன் ஆனந்தமாக அடுத்த ஸ்தூல உடல் கிடைக்கும் காலம் வரை, அதனிடம் உள்ள நல்ல மனப்பதிவுகளான வாசனைகளின் மூலமாக இன்பத்தை அடைவதையே "**சொர்கம்**" என்றும் கூறுகின்றது.

ஆதாலால்தான், இறக்கும் மன நிலையைப் பற்றி மிக முக்கியமாக நம் சாஸ்திரம் எச்சரிக்கை செய்து, இறக்கும் போது நற்காரியங்களை செய்து மனதை நல்ல வழிக்கு மாற்ற முயற்சித்தால் நடக்காது என்றும், எப்பொழுதுமே நல்ல காரியங்களை செய்து வந்தால் இந்த மனம் அதற்குப் பழகி இறக்கும் தருவாயில் இன்பமுடன் காணப்படும் என்றும் அறிவுறுத்துகின்றது.

எனவே, சாஸ்திரத்தின் மீது நம்பிக்கைக் கொண்ட ஒருவன், தான் வாழும் இந்த வாழ் நாட்களில் யாருக்கும், எந்த உயிர்களுக்கும் தீங்கு செய்யாத மன நிலையில், அனைத்து உயிர்களையும், அனைத்து சக மனிதர்களையும் நேசித்து, உதவி புரிந்து, தானும், மகிழ்ச்சி அடைந்து, மற்றவர்களையும் மகிழ்ச்சிப்படுத்தி, தன் வாழ் நாட்களை ஆனந்தமாக வாழ்ந்து இறந்த பிறகும் என்றும் இன்பத்தை அனுபவிக்க முடியும்.

மறு பிறவியும், நல்ல தேகம், நல்ல மனம் கொண்ட பிறவியாக அமையும்.

சாஸ்திரத்தை நம்பாத ஒரு சிலர் சாஸ்திரத்திற்கு முரண்பாடாக மறு பிறவி கிடையாது என்று கூறி, அராஜகமான முறையில் வாழ்ந்து, இங்கும் இந்த

பூலோகத்தில் சந்தோசம் இன்றி, இந்த உடலை விட்ட பிறகும், வேறு லோகங்களிலும் சந்தோசம் இன்றி இருப்பார்கள்.

இப்படிப்பட்ட இறைவன் கொடுத்த இந்த மனித உடலைக் கொண்டும், ஆறாவது அறிவைக் கொண்டும், தர்மத்தை அறியாமல், மறு பிறவி என்பதை ஏற்காமல், அதர்ம வழியில் வாழ்கின்றவர்கள் மீண்டும், மீண்டும் இந்த பிறவிச் சுழற்சியில் சிக்குகின்றார்கள்.

இந்த பிறப்பு, இறப்பு, சக்கரத்தில் சுற்றிக்கொண்டிருக்கின்ற ஜீவன்கள் பிறக்கின்ற உடல்களாலும், மனதினாலும், அறிவினாலும் மாறுபட்டு காணப்படுவதை வைத்தும், அவைகள் அடைகின்ற சுக, துக்கங்களினால் மாறுபட்டு வாழ்வதை வைத்தும் காணும் போது, மறு பிறவி உள்ளது என்பதை அவசியம் ஏற்க வேண்டும்.

அடுத்து, இந்த ஸ்தூல உடலை விட்ட பிறகு, சூக்ஷும உடலான மனதின் மூலமாக ஒரு ஜீவன் எப்படி நல்லது, கெட்டதை அனுபவிக்கின்றது? என்றால், ஒரு ஜீவன் இந்த பரு உடலை விட்டு இறக்கும் பொழுது, அதன் மனம் எந்த எண்ணங்களைப் பற்றிக் கொண்டிருக்கின்றதோ,

அதுவே அந்த ஜீவனின் வாசனைகளாக மாறி, சம்ஸ்காரமாக சித்தத்தில் சேர்ந்து, மனதின் வாயிலாக வெளிப்படுகின்றது என்று பார்த்தோம்.

ஆனால், இந்த பூத உடலை விட்டு விட்ட அந்த ஜீவன், சூக்ஷும உடல், மற்றும் காரண உடல் இரண்டையும் வைத்துக்கொண்டு அடுத்த பிறவிக்கு தாயராக வேண்டும்.

எப்படித் தயாராவது என்றால், ஸ்தூல உடலை விட்ட இந்த ஜீவன் தன்னுடைய கண்ணிற்கு தெரியாத சூக்ஷும தேகத்தை எடுத்துக் கொண்டு அண்ட வெளியில் அலைய ஆரம்பிக்கும்.

(**குறிப்பு**:- மனம், புத்தி, சித்தம், மற்றும் அஹங்காரம் என்ற இந்த நான்கும் சேர்ந்த அந்தக்கரணமே சூக்ஷும தேகம் என்று ஏற்கனவே பார்த்துள்ளோம்.)

இவ்வாறு, அங்கும், இங்கும் அலையும் போது, அந்த ஜீவன், இந்தப் பிறவியில் புதியதாக சேர்த்துக் கொண்ட பாவ, புண்ணியங்களான ஆகாமிய கர்மாவை தன்னுடைய சித்தத்தின் வாயிலாகக் கொண்டு சென்று, ஏற்கனவே அந்த ஜீவனிடத்தில் உள்ள பாவ, புண்ணியங்களின்

மொத்தக் குவியலான சஞ்சித கர்மா என்ற காரண தேகத்துடன் இணைத்துக் கொள்ளும்.

இதனால், அந்த ஜீவனின் சஞ்சித கர்மா குவியல் இப்பொழுது மிகப் பெரியதாக மாறியிருக்கும்.

இந்த காரண தேகம் என்பது, இந்த ஜீவன் எடுத்த, இனி எடுக்கப்போகின்ற சூக்ஷும, ஸ்தூல உடலுக்குக் காரணமாக இருக்கின்றது.

இப்பொழுது, அந்த ஜீவனின் சூக்ஷும உடலான மனமுடன் கூடிய அந்தக்கரணமும், காரண தேகமும் கொண்ட அந்த ஜீவன் தன்னுடைய ஒட்டுமொத்த காரணத் தேகத்தைக் கொண்டு, தன்னிடம் உள்ள மொத்த கர்மாக்களில், எத்தனை விதமான நல்ல விஷயங்கள், எத்தனை விதமான கெட்ட விசயங்கள் பதிக்கப்பட்டுள்ளது என்று, தன்னிடம் உள்ள காரணத் தேகத்தைக் கொண்டு அறிய முடியும்.

இதில் அதிகமான கெட்ட பலன்கள் இருந்தால், அதற்கேற்றபடி, அந்த கெட்டதை அனுபவிக்க அதற்கேற்ற உடலை தேர்ந்தெடுக்கும், நல்ல பலன்கள் அதிகமாக இருந்தால் அதற்கேற்றபடி

அந்த நல்லதை அனுபவிக்க, அதற்கேற்ற உடலைத் தேர்ந்தெடுக்கும்.

சரிசமமான பலன்களாக நல்லதும், கெட்டதும் கலந்து இருந்தால் அதற்கேற்றபடி, உடலைத் தேர்ந்தெடுக்கும்.



இதையே சாஸ்திரம் அதிக பாவப்பலன்களைக் கொண்டவன் கீழான மிருகங்களாகவும், அதிக புண்ணிய பலன்களை உடையவன் மேலான தேவர்களாகவும், பாவமும், புண்ணியமும் சரி பாதி கொண்டுள்ளவன் அதற்கேற்ற மனித உடலையும் கொண்டு பிறக்கின்றான் என்கின்றது.

அதனால்தான் கர்மபல தாதாவான ஈஸ்வரன் இவ்வாறு ஒவ்வொரு ஜீவனுக்கும், அதனதன் பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப, சுக, துக்கங்களும், அந்த சுக, துக்கங்களை அனுபவிக்கக்கூடிய உடலையும் தேர்ந்தெடுத்து கொடுக்கின்றான்.

இதை எப்படி ஈஸ்வரனால் அறிய முடிகின்றது என்றால்,

அதாவது, ஒரு ஆலமரத்தின் விதையினுள், அதன் இலைகள், கிளைகள், பூக்கள், மற்றும் காய்கள் என அனைத்தும் நிர்விகல்பமாக வேற்றுமையின்றி சூக்ஷுமமாக மறைந்து இருக்கின்றதே, அப்படிப்பட்ட அந்த பிரம்மாண்டமான மரத்தின் இருப்புத் தன்மையை அந்த சிறிய விதையினுள் காட்ட முடியுமா?

முடியாது அல்லவா?

அதுவே, அந்த ஆலமரத்தின் விதை விதைக்கப்பட்டு, அது வளர்ந்து மரமான பிறகு தான் அந்த ஆலமரத்தின் மிகப் பெரிய அளவை ஸ்தூலமாக கண்ணால் பார்க்க முடிகின்றது அல்லவா?

அதுப்போல,

இந்த ஸ்தூல, சூக்ஷும சரீரங்கள் தோன்றுவதற்கு முன்பு இருக்கின்ற அதன் இருப்புத் தன்மை ஒரு பெரிய ஆலமரமே கடுகு அளவு உள்ள அதன் விதையில் ஒளிந்து கொண்டு இருக்கும் போது, இந்த ஸ்தூல உடலும், சூக்ஷும உடலும், நிர்விகல்பமாக வேற்றுமையின்றி சூக்ஷுமமாக, காரண ஸரீரத்தில் ஒளிந்துக் கொண்டிருப்பதால், இந்த காரண ஸரீரம் கால தேசத்திற்கு அப்பாற்பட்டது.

காலமும், தேசமும் அனுபவத்திற்கு உட்பட்டது. எனவே, இரண்டு அனுபவத்திற்கும் இடையில் உண்டாகும் இடைவெளியைக் "**காலம்**" என்றும், இவ்வளவு நேரம் இந்த அனுபவம் உண்டானது என்று அனுபவத்தை அறியும் இடமாக மனம் என்ற தேசமும் தேவை.

இங்கு காரண ஸரீரத்தில் மனம் வெளிப்படுவது இல்லை. மனம் இல்லாவிடில் அனுபவத்தைப் பற்றி பேச முடியாது. ஆக, "**காரண ஸரீரம்**" எப்பொழுது தோன்றியது என்பதை விளக்கவே முடியாது.

உதாரணமாக, நம்முடைய ஆழ்ந்த உறக்கத்தில் இவ்வளவு நேரம் நான் தூங்கினேன் என்ற காலம்

எவ்வாறு தெரிவதில்லையோ, அவ்வாறே, காரண ஸரீரத்தின் காலமும் தெரிவதில்லை.

ஆழ்ந்த உறக்கத்தில் நமக்கு எப்படி எந்தவித அனுபவங்களும் இல்லையோ, அதுபோலவே, காரண ஸரீரத்திற்கும் எந்தவித அனுபவம் இல்லாததனால், நம்முடைய மனம் வெளிப்படுவதில்லை. எனவே, அனுபவம், மனம், மற்றும் காலம் இல்லாததினால் இதை அறிந்து கொள்ள முடியாது.

**முக்கிய குறிப்பு:-**

(இதனால்தான், இந்த பிறவியில் இந்த உடலை விட்டு விட்டு, சூக்ஷும தேகத்துடன் விண்ணிற்கு சென்று விட்டால், மீண்டும் உடல் கிடைத்து இந்த பூமிக்கு வர எத்தனை நூறு ஆண்டுகள் ஆகின்றது என்பதை உறுதியாகக் கூற முடியாது.

அல்லது வேறு லோகத்திற்கு சென்று விட்டாலோ அங்கு உள்ள காலத்திற்கு ஏற்ப பல யுகங்கள் கழித்துக் கூட, இந்த பூமிக்கு உடல் எடுத்து வர வேண்டியது இருக்கும்.

இன்றைய நவீன அறிவியலும் இதனை ஒப்புக்கொள்கின்றது.

**ஜாக்கிரதை!!!**

அதுவும், மனித உடல் கிடைக்கும் என்ற உத்திரவாதம் இல்லை.

ஆகவே, முடிந்தவரை “**பிறவாமை**” என்பதை அடைய முயற்சி செய்ய வேண்டும் என்பதே ஆன்றோர்களின் விருப்பம்.)

உதாரணமாக, இந்த பூலோகத்தில் உடல் இருக்கின்ற ஒருவன் இங்கு இந்தியாவில் இருந்து மற்ற நாடுகளுக்கு செல்லும் போது கால, தேசத்தின் மாறுபாடுகளினால், நேரம் மாறி விடுகின்றது. அதுபோல, ராக்கெட், விண்கலம் ஏவும் போதும் இதே நிலை நீடிக்கின்றது.




அதனால்தான், சூக்ஷுமத்தில் ஜீவன் பயணம் செய்யும் கால, தேசம் மாறுதலுக்குட்பட்டது. இது பூமியின் கால, தேசத்துடன் ஒப்பிடும் போது மட்டும் இவ்வாறு தெரிகின்றது. உண்மையில் காலமும், தேசமும் நிர்ணயம் செய்ய முடியாதது.

ஏனெனில், பிரபஞ்சத்தின் விரிவும் எல்லையில்லாமல் இன்றுவரையும் விரிந்தவாறு உள்ளது.

அதனால், சாஸ்திரம் இதை "**அனாதி**" அல்லது "**அநிர்வசனீயம்**" என்று அழைக்கின்றது. "அநிர்வசனீயம்" என்றால் சரியாக நிருபிக்க முடியாது என்று பொருள்.

இதை எப்படி சாஸ்திரம் கையாளுகின்றது என்று கவனித்தோமானால், கயிற்றின் மீது ஏற்றிப் பார்த்த பாம்பைப் போல, அதாவது காரண ஸரீரம் பாம்பு போல, கயிறு எப்பொழுதும் போல இருப்பதால் அந்த கயிறு ஆத்மா போல. ஆகவே காரண ஸரீரம் ஆத்மாவின் மீது ஏற்றிப் பார்க்கப்படுகின்றது என்பதே உண்மை.

காரணத்தின் குணம், காரியத்தில் இருக்க வேண்டும் என்பது நியதி. அதாவது களிமண் என்ற காரணத்தை வைத்து பானைகள் செய்தால், அந்த பானையிலும் களிமண் நிச்சயமாக இருக்கும். தங்கத்தை வைத்து நகைகள் செய்தால், அந்த நகைகளிலும் தங்கம் இருக்கும்.

இதுபோல, நாம் காணும் இந்த சூக்ஷும ஸரீரத்தின் காரியத்தை, அதற்கு காரணமான காரண ஸரீரத்திடம் காணலாம். அதுபோல, நம்முடைய மனதிடம் என்ன என்ன குணங்கள் இருக்கின்றதோ, அது நிச்சயமாக காரண ஸரீரத்திடமும் இருக்கும்.

மனதிடம் மூன்று குணங்கள் உள்ளன.

அவைகள், தாமச குணம், ராஜஸ குணம் மற்றும் சத்துவ குணம் என்பதாகும்.

அன்பு, கருணை, பணிவு, ஒழுக்கம், சந்தோஷம் எதற்கும் பதற்றப்படாமல், சாந்தமான மன நிலையில் அனைவரின் மீதும் பிரியமாக எப்பொழுதும் இருந்து கொண்டே, நல்ல சிந்தனா சக்தியுடனும், கிரியா சக்தியுடனும் இருப்பதைத்தான் “**சத்வ குணம்**” என்ற சாத்விகம் கொண்ட மனம் எனப்படும்.

எப்பொழுதும் ஒரே பதற்றம், ஆசை, கோபம், விருப்பு, வெறுப்பு மற்றும் உணர்ச்சி வசப்படுவது, இவை எல்லாம் ரஜஸ் என்ற “**ரஜோ குணம்**” அல்லது ராஜஸ குணம் பெற்ற மனம் எனப்படும்.

ஒரே கருமித்தனம், சோம்பேறித்தனம் மந்தத் தன்மையுடன் இருப்பது, எதிலும் ஆர்வமில்லாமல் காணப்படுவது, அடிக்கடி தூங்கி வழிவது போன்றவைகள் “**தாமஸ குணம்**” கொண்ட மனம் எனப்படும்.

இந்த மனம் எப்படி இருக்கின்றதோ, அதுப்போலவே, அந்த ஜீவனின் செயல்பாடுகள் காணப்படும். அந்த செயல்களின் வெளிப்பாடாக ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கை முறையைப் பார்த்து அறிய முடியும்.

இவ்வாறு செயல் செய்யும் மனிதன் தன்னுடைய செயல்களை சாஸ்திரம் சார்ந்து செய்தால், அந்த செயல்களின் வெளிப்பாடு நன்றாகவும், மற்றவர்களுக்கும் நன்மை பயக்கும் விதமாகவும் வாழ முடியும் என்று அறிந்த ஆன்றோர்கள் இந்த செயல்களை நெறிப்படுத்தினார்கள்.

அவைகளை, ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வின் வழிபாடாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்று ஐந்து வழிபடும் முறைகளை அறிமுகப்படுத்துகின்றார்கள்.

அவைகளை , சனாதன தர்மம் வழி வந்தவர்களும் சரி, இனி சனாதன தர்மம் கூறும் வழியில் வாழ விரும்புபவர்களும் சரி! அவர்கள் தங்களுடைய வாழ் நாட்களில் இந்த வழிபாட்டை ஐந்து யக்ஞங்களாக கடைபிடிக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகின்றது.

அந்த யக்ஞங்கள் வேள்வி குண்டம் அமைத்து யாக பூசை செய்வதல்ல, ஒவ்வொருவனும் தன்னுடைய கடனாகவும், கடமையாகவும் அதை செயல்படுத்த வேண்டும் என்கின்றது.

இந்த அறச் செயல்களினால் மட்டுமே மனித தேகம் எடுத்து வருகின்ற ஒவ்வொரு ஜீவனும் இந்த பிறவியை சரியானபடி முடித்து, அந்த பராபரன் பதம் அடைய முடியும் என்கின்றது.

இல்லற வாழ்வில் ஈடுபடுபவன் அறவழியில் பணம் ஈட்டி, இல்லறத்தை நல்லறமாக நடத்தி, செய்ய வேண்டிய காரியங்கள் ஐந்து வகைப்படும் என்று சாஸ்திரம் வலியுறுத்துகின்றது.

அவைகள்,

1. தேவ யக்ஞும்

2. ரிஷி யக்ஞும்

3. பித்ரு யக்ஞும்

4. மனுஸ்ய ( நர) யக்ஞும்

5. பூத யக்ஞும்

என்ற ஐந்து யக்ஞுங்களை கூறுகின்றது.



வழிபடுதல் என்ற பொருள் உடைய யஜ் என்ற தாதுவிலிருந்து தோன்றி வினைச்சொல் “யஜ்ஞும்” அல்லது “யக்ஞும்” என்று அழைக்கப்படுகின்றது.

**“யக்ஞும்”** என்றால் வழிபாடு என்று பொருள்.

அந்த வகையில், தேவ யக்ஞும் என்றால், நமக்கு விருப்பமான தேவதையை வழிபடுதல், அதாவது, கடவுளை பூசை, ஹோமங்கள் செய்து வழிபடுவது ஆகும்.

ரிஷி யக்ஞும் என்பது, ரிஷிகளினால் போதிக்கப்பட்ட வேத சாஸ்திரங்களை கடைப்பிடித்து, அதன்படி வாழ்ந்து, எதிர்கால சந்ததியர்களுக்கும் அந்த சாஸ்திரத்தின் உண்மைத் தத்துவத்தை கொண்டு சேர்ப்பது. இதனால், நம் முன்னோர்களான ரிஷிகளை வழிபடுவதற்கு ஒப்பாகும். அவர்களும் இதனால் மகிழ்ச்சியடைவார்கள்.

அடுத்து, பித்ரு யக்ஞும் என்பது, நம்முடைய பெற்றோர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளை சரியாகச் செய்து, அவர்களை மகிழ்வித்து, அவர்கள் இறந்த பிறகும், அவர்களை நினைவு கூர்ந்து, அவர்கள் சார்பாக மற்றவர்களுக்கு தான

தர்மங்கள் செய்வது ஆகும். இதனால், பித்ருக்களை வழிபடுவதற்கு இது ஒப்பாகும். இதனால், பித்ருக்களும் மகிழ்ச்சி அடைவார்கள்.

மனுஸ்ய அல்லது நர யக்ஞம் என்றால், நாம் பிறக்கும் பொழுது, நம்முடன் உடன் பிறந்தவர்கள் மற்றும் நம் பெற்றோர்கள் மூலமாக வருகின்ற சொந்த, பந்தங்கள் போன்ற உற்றார் உறவினர்களை மகிழ்விக்கும் பொருட்டு, அவர்களை நம் விருந்தினர்களாக உபசரித்து, விருந்து கொடுத்து, ஆடை, அணிகலன்கள் கொடுத்து அவர்களது சந்தோசத்தை கண்டு நாம் மகிழ்ச்சி அடைவதை கூறுகின்றது.

இது ஒருவகையில் ஒருவரை ஒருவர் நேசித்து நமஸ்கரித்து வழிபாடு செய்வது போன்றதாகும்.

பூத யக்ஞம் என்பது, நம்முடைய பிறவிக்கு உடல் கிடைக்க காரணமாக இருந்த நீர், நிலம், காற்று, மற்றும் நெருப்பு, ஆகாயம் போன்றவைகளை மாசு படுத்தாமல், அவைகளின் தேவை கருதியும், நம்முடைய பிற்கால சந்ததிகள் அனுபவிக்க அவைகளை சீர் கெடுக்காமல், பாதுகாத்து, இந்த பூமியில் நம்மைப் போன்றே இந்த பஞ்ச பூதங்களினால் உடல் கிடைத்த மற்ற மிருகங்கள்,

பறவைகள் என மற்ற ஜீவர்களையும் நேசித்து, அவைகளுக்கும் உணவு கொடுத்து மகிழ்வது, அந்த பஞ்ச பூதங்களையும் வழிபடுவதற்குச் சமம்.

இது போன்று அனைத்து ஜீவராசிகளும் மகிழ்ச்சியுடன் வாழ்கின்ற வாழ்க்கை முறைகளை நம் சனாதன தர்மம் போதிக்கின்றது.

இதனால், நாம் இந்த இயற்கையின் வாயிலாக மற்ற அனைவரிடமும் இருந்து ஒவ்வொன்றையும் பெற்று, அதனை அனுபவிக்கின்றோம்.

அதற்கு கைமாறாக நன்றிக்கடனை திருப்பிச் செய்கின்றோம்.

இவ்வாறு ஒருவருக்கு ஒருவர் நன்றி விசுவாசத்துடன் வாழும் வாழ்க்கை முறையை சனாதன தர்மம் போதிக்கின்றது.

ஆனால், அந்த தர்மத்தை அறியாத இன்றைய மனிதன் தன் சுய நலத்தினால், நீரையும், நிலத்தையும், காற்றையும் பல இராசயண கழிவுகளாலும், பெட்ரோல், ஆயில், டீசல் போன்ற எரியூட்டும் புகைகளினாலும் இயற்கையை மாசுபடுத்தி, எதிர்கால சந்ததிகளுக்கு கேடு விளைவிக்கின்றான்.

மேலும், இவனே இனி இந்த உடலை விட்டு இறந்து, அடுத்த உடல் எடுத்து இந்த பூமிக்கு வந்தாலும் வாழ முடியாத அளவிற்கு சுற்றுப்புறச் சூழ்நிலைகளை மாசு படுத்தி வருகின்றான்.

இந்த நிலை மாற தர்மப்படி வாழ்ந்து, நல்ல செயல்களைச் செய்ய அவசியம் நம் சாஸ்திரம் போதிக்கும் உண்மையை அறிய வேண்டும்.



அடுத்து, பித்ரு யக்ஞம் என்ற இந்த வழிபாடு, அனைவராலும், மிகுந்த ஈடுபாட்டுடன் செய்யப்படுகின்றது. இந்த, சிரார்த்தம் (திதி), மற்றும் தர்பணத்தை ஒவ்வொரு குடும்பத்தாரும் செய்ய விரும்புவது அவர்களது பெற்றோர்கள் நற்கதியை அடைய வேண்டும், அவர்களது

ஆசிர்வாதம் இவர்களுக்கு கிடைக்க வேண்டும் என்ற சுய நலமும் காரணம் ஆகும். இருப்பினும், இந்த சுய நலத்தின் வாயிலாக, பித்ருக்களுக்கு படையல் போட்டு வழிபட்ட உணவை, காகம், பசு போன்றவைகளுக்கு கொடுப்பதின் மூலமாக, அது பொது நலமாக மாறியும் விடுகின்றது.

பித்ருக்கள் என்றால் நம் முன்னோர்கள் என்று பொருள். அவர்கள் இந்த உடலை விட்டு இறந்து இறைவனடி சேராதவர்கள் ஆகின்றார்கள். ஆம்!. ஒரு ஜீவன் இறைவனடி சேர்ந்து விட்டால், அது மீண்டும் பிறப்பிற்கு வராது.

இந்த பித்ருக்களான நம் முன்னோர்கள் பித்ரு லோகத்திலோ, அல்லது வேறு லோகங்களிலோ விடுதலை அடைய முடியாமல் தவித்துக் கொண்டிருப்பார்கள். இவர்கள் தங்களுக்கு கிடைத்த அரிதான மானிடப் பிறவியை சரியாகப் பயன் படுத்தி பரமா(ஆ)த்மாவை அறியாமல், தேகத்தை விட்டவர்கள் ஆவார்கள்.

அவர்கள் தெய்வங்கள் என்று நம்மால் அழைக்கப்பட்டாலும், உண்மையில் அவர்கள் தெய்வமாக ஆகிவிடவில்லை. அவர்கள் தெற்கிலே உள்ள பித்ரு லோகத்தில் இருந்து, வடக்கே

உள்ள பிரம்ம லோகத்திற்கு கொண்டுவந்து அங்கு கிரம முக்தியை அடைய வைக்கும் முயற்சிதான் நாம் அவர்களுக்கு செய்கின்ற தர்பணம், சிரார்த்தம் மற்றும் திதி போன்றவைகளாகும்.

இந்த முன்னோர்களின் பித்ருக்கடன் என்ற காரியத்தின் மூலமாக, நாம் அவர்களுக்கு நன்றிக் கடனை திருப்பி செலுத்துகின்றோம். எப்படியென்றால், உடல் கிடைக்க காரணமான தந்தையிடமிருந்து அணுவாக வெளிப்பட்டு, அந்த உடலை பாதுகாப்பாக, பேணிக்காத்து வெளியே கொண்டு வரும் வரை, நாம் தாயின் வயிற்றில் இருந்து கொண்டு, அவர்கள் உண்ணும் உணவு, நீர், காற்று என்று அனைத்திலும் அவருடன் பங்கிட்டு இந்த உடலை 10 மாதங்கள் பாதுகாப்பாக தாயிடமிருந்து வெளியே கொண்டு வந்து இருக்கின்றோம்.

இவ்வாறு உடல் எடுத்து இந்த பூமிக்கு வர பெற்றோர் உதவி புரிந்துள்ளனர். அதனால்தான் நாம் பிறக்க முடிந்தது. இவ்வாறு அவர்களுக்கு கடன் பட்டுள்ளோம். அதனால் அவர்கள் உயிருடன் இருக்கும் வரை அவர்களை நாம் பேணிக்காத்து, பாதுகாப்பாக, அவர்கள் நம்மை

அரவணைத்து வளர்த்தது போன்றே, நாமும் அவர்களை அரவணைத்து, ஆதரித்து, அவர்கள் இந்த உடலை விட்டு விட்டு சென்ற பிறகும் நன்றிக்கடன் பட்டவர்களாகவே இல்லறத்தானின் கடமைகளில் ஒன்றாக இந்த “**பித்ருக்கடன்**” செய்கின்றோம்.

பித்ருக்கள் வழிபாடு என்பது, அவர்களை நினைத்து அடையாளப்படுத்தும் வகையில், அவர் பெயரால், மற்ற ஜீவராசிகளுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் சிறந்த உணவும், புத்தாடையும் கொடுத்து உதவுதல் ஆகும். இதனையே சாஸ்திரம் “**அறம்**” என்று கூறுகின்றது.

இந்த அறச்செயல்கள் இன்றும் நம் பெரும்பாலனவர்களின் இல்லங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகள்தாம். தென்புலத்தார் நம்மை விட்டுப் பிரிந்தாலும் அவர்களின் அருள்பார்வை நம்மை வாழவைக்கும், அவர்களையும் வீடுபேறு அடைய வழிவகுக்கும் என்பதும் உண்மை.

நாம், நம்முடைய வாழ்க்கை முறையில் நம்முடைய முன்னோர்களை என்றும்

மறப்பதில்லை. எனவேதான் வள்ளுவரும் தென்புலத்தாரை முதலில் வைத்துப் பாடினார்.

**“தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்**
**தானென்றாங்கு ஐம்புலத்தாறு ஓம்பல் தலை”.**

– திருக்குறள்..



இந்த குறளின் வாயிலாக திருவள்ளுவரும் 2000 ஆண்டுகளுக்கு முன்னரே சாஸ்திரத்தின் உண்மைத் தன்மையை அறிந்து, பித்ரு, ரிஷி,

தேவ, நர, பூத, என்ற ஐந்து வழிபடும் முறைகளை தனது குறட்பாவின் வாயிலாக இந்த பாமர மக்களுக்காக வெளிப்படுத்தியிருக்கின்றார்.

தங்களுடைய குடும்பத்தில் இறந்தவர்களுக்கும், குலதெய்வத்திற்கும், ரிஷிகளுக்கும், உற்றார், உறவினர்களுக்கும் தனக்கும் என இந்த ஐந்து இடங்களிலும் செய்யப்படும், நெறிச் செயல்களைப் போற்றுதல், சிறப்பான இல்வாழ்க்கையாகும் என்பது இக்குறளின் கருத்து.

நம்மிடையே வாழ்ந்து மறைந்தோரை, குறிப்பாக, நமக்கு மிகவும் நெருங்கியவர்களும், அன்பிற்குரியவர்களும், இறந்த நாளில் அவர்களை நினைந்து வழிபடுதலாகும். இது தென்புலத்தார்க்குச் செய்யும் அறவினையாகும்.

இந்த அறச்செயல்களின் வாயிலாகவே, அந்த பரம் பொருளை அறிந்து, இன்பத்துடன் என்றும் நிலைத்திருக்க **“பிறவாமை”** என்ற வீடுபேறு கிடைக்கின்றது.

இதனை, **அறம், பொருள், இன்பம், வீடு** என்ற முறையில் மனிதனின் இலட்சியம் (புருஷார்த்தம்) என்கின்றது சாஸ்திரம்.

இந்த பித்ருக்களுக்கு செய்கின்ற கடனை, இல்லறத்தான் கடன் பட்டு செய்ய வேண்டிய அவசியம் இல்லை, இதனால், மேலும், இல்லறத்தானில் இன்னல்கள் அதிகமாகிவிடும் என்ற கோணத்தில் ஆரிய சமாஜத்தை தோற்றுவித்த சுவாமி தயானந்த சரஸ்வதி குறிப்பிடுகின்றார்.

இறந்த மனிதன் அல்லது மிருகம் தன்னுடைய பரு உடலில் அனுபவிக்கும் புலன் இன்பங்களான உணவு உண்பது, தூங்குவது, மல, ஜலம் கழிப்பது, புணர்ச்சியில் ஈடுபடுவது போன்ற அனைத்து செயல் இன்பங்களையும், அந்த மனிதன் இறந்த பிறகு அவனுக்கு ஸ்தூல உடல் இல்லாத காரணத்தினால் அனுபவம் பெற முடியாது.

அப்படி ஸ்தூல உடல் அற்ற, இறந்த ஒருவனுக்கு என்னதான் படையல் போட்டு, வகை வகையான வடை, பாயாசங்களோடு, பதார்த்தங்களை செய்து படத்தின் முன்போ, சிலைகளின் முன்போ படைக்கப்பட்டால் அவைகளுக்கு ஸ்தூல உடல் இல்லாததினால் இவைகளை ஏற்க முடியாது என்பதை அறிந்து, உயிருடன் இருக்கின்ற

பொழுதே அவர்களை நன்றாக கவனித்துக் கொள்வது சிறப்பு.

இறந்த பின்பு அவரது நினைவாக மற்றவர்களுக்கு உணவு, உடைகளை தானமாக கொடுக்கின்ற அறச்செயல்களினால், அந்த இறந்தவர்களின் ஆத்மாவிற்கு சாந்தியையும், சந்தோசத்தையும் கொடுத்து, இந்த புண்ணிய பலன்களை அவர்களுக்கு எள்ளு நீரினால் தாரை வார்த்து கொடுத்து, அவர்களை வீடுபேறு பெறும் நிமித்தம், பிரம்ம லோகத்திற்கோ, அல்லது இந்த பூலோகத்தில், மீண்டும் மனிதப் பிறவி கிடைத்து, அறிவை அறிந்து தப்பித்துக்கொள்ளச் செய்வதற்கோ, உண்டான ஒரு வழிமுறை என்பது மட்டுமே உண்மை.

அதை விடுத்து, இறந்து போன பித்ருக்கள் திதி அன்று வந்து, உணவு உண்பார்கள் என்று எதிர்பார்த்து, இந்த தர்பணத்தைச் செய்கின்றேன் எனக் கூறிக்கொண்டு, படத்தின் முன்பு படையலைப் போட்டு, அத்தனை உணவு வகைளையும் தங்கள் குடும்பத்தாருடன் உட்கார்ந்து, தாங்களே ஒரு பிடி பிடித்து,

அனைத்தையும் உண்டு விடுவதல்ல இந்த பித்ருக்கடன் என்பது.

பெற்றோர்கள் உயிருடன் இருக்கின்ற பொழுது உண்ண உணவும், உடுக்க உடையும் கொடுத்து, அவர்கள் மனம் கோணாமல் பார்த்துக் கொண்டால் மட்டுமே, அவர்கள் இறந்த பிறகு, அதன் பயனாக, இவர்கள் சந்தோஷத்தை அனுபவிக்க முடியும். அவர்களின் ஆசிர்வாதமும் இவர்களுக்கு கிடைக்கும்.

வழிபாட்டின் நோக்கத்தை, நன்றாக புரிந்து கொண்டு, நல் வாழ்க்கை வாழ முற்படவேண்டும். சடங்குகள், சம்பிரதாயங்கள் என்று வகுத்துக் கொண்டு, அதன் பிடியில், அதன் உண்மைத் தன்மை தெரியாமல், குருட்டுத் தனமாக செய்வது என்பது பலனற்ற செயலாக முடியும்.



உதாரணமாக, ஒரு யானையால் உண்ணும் உணவின் அளவிற்கு, ஒரு எறும்பினால் உண்ண வயிறு கிடையாது, அதுப்போல, உடலே இல்லாத நம் தாத்தா, பாட்டிகள் திதி தினத்தன்று எப்படி வந்து இவர்கள் படைக்கும் படையல் உணவை உண்ண முடியும்?.

சிலர் "**காகா**" வடிவில் வந்து உணவை எடுத்துச் செல்கின்றனர் என்று கூறுவது, நாம் நம் முன்னோர்களை, சிறு மதி படைத்த பறவையுடன் ஒப்பிடுவதற்குச் சமம். அதனால், நம் வீட்டுப் பெரியவர்களான முன்னோர்களை, சாதாரண பறவையாக, அதுவும் காகாவாக பாவித்து, அவர்களை அவமதிப்பதாகும்.

ஆனால், இந்த காகா, குருவி, நாய், பூனை, பசு போன்ற மற்ற ஜீவன்களுக்கு இந்த மனிதன் கொடுக்கின்ற உணவுகளினால், அவைகள் பசியாறி, திருப்தியடைந்து, தன்னுடைய அன்பை இவனிடம் வெளிக்காட்டும்.

இந்த அன்பின் வெளிப்பாடே, "**அன்பேசிவம்**" என்ற தகுதிக்கு அவனை உயர்த்தி, அனைத்து உயிர்களிலும் இறைவனைக் காணும் மனம் உண்டாகி, அந்த தெள்ளத் தெளிந்த மனதைக்

கொண்டு, அவனது உள்ளத்தில் “சீவன் சிவலிங்கம்” என்று இறைவனைக் காணும் உயர்ந்த நிலை உண்டாகும்.

இது போன்ற அறச் செயல்களினால், இந்த பாமர மனிதனிடம் அன்பு எதிர்பார்த்த அளவிற்கு உயர்வடையவில்லை என்றாலும், இவன் செய்த, இந்த நற்செயலினால், புண்ணிய பலன்கள் உண்டாகி, இவனது முன்னோர்களுக்கும், இவனுக்கும் அமைதியும், ஆனந்தமும் உண்டாகும்.

இந்த அமைதியும், ஆனந்தமும் வேண்டித்தானே அத்தனை ஜீவர்களும் எதை எதையோ இறைவனிடம் வேண்டிக் கொண்டு அலைந்துக் கொண்டிருக்கின்றார்கள்.

சனாதன தர்மத்தில் ஹிந்து மதமானது, வேதத்தை அடிப்படையாக கொண்டு, அந்த உயர்ந்த அறிவை விளக்க எண்ணிலடங்கா நூல்களை நம் பாரத பூமியில் பிறந்த மகான்களும், ரிஷிகளும், ஞானிகளும் வகுத்தளித்துள்ளனர்.

இவற்றில் முக்கியமானது ஆறு தரிசனங்கள் எனப்படுவதாகும்.

அந்த ஆறு தரிசனங்கள் என்னென்ன வென்று காண்போம்.

1. நியாயம்.
2. வைசேஷிகம்.
3. சாமக்யம்.
4. யோகம்.
5. மீமாம்ஸம்.
6. வேதாந்தம்.

இவ்வாறும் சேர்ந்து, ஆறு தரிசனங்கள் அல்லது "**ஷட்தர்ஷனங்கள்**" என்று கூறப்படுகிறது.

"**தரிசனம்**" என்றால் '**பார்வை**' என்று பொருள். ஆறு பார்வைகள் அல்லது ஆறு தத்துவங்கள் எனவும் எடுத்துக்கொள்ளலாம்.

இந்த ஆறு பார்வைகளில் முதன்மையான தரிசனம் "**நியாயம்**" என்ற தர்க்க சாஸ்திரமாகும்.

இரண்டாவதான, "**வைசேஷிகம்**" என்பது உலகத்தின், பிரபஞ்சத்தின் அணுவியல் பார்வையாகும்.

மூன்றாவதான, “**சாமக்ய**” பார்வை ஞானத்தை ஆதாரத்தின் மூலமே அறிவது என்ற பார்வையை உடையது.

நான்காவதான, “**யோகம்**” எனப்படுவது உடல், மனம் மற்றும் ஆன்மீக பயிற்சி / அனுஷ்டானத்தின் மூலம் ஞானம் அடைவதாகும்.

ஐந்தாவதான, “**மீமாம்சம்**” தீர ஆய்விற்கு பிறகே ஞானம் அடைய இயலும் எனும் பார்வையாகும்.

கடைசியானது, “**வேதாந்தம்**” என்பதாகும். இது வேதம் + அந்தம் எனும் இரு வார்த்தைகளின் கூட்டாகும்.

அந்தம் என்றால் முடிவு என்றும் பொருள்படும். வேதாந்தம் என்பது வேதத்தின் இறுதிப்பகுதி என்று பொருள் கொள்ளலாம்.

ஆக, பிரபஞ்சத்தை பார்க்கும் பார்வை முறையில் இது கடைசி முறையாகும்.

இதில், ஒவ்வொரு தரிசனத்திற்கும் பல்வேறு விஷயங்கள் நிறைந்துள்ளது.

இதில் ”**நியாயம்**” என்ற கோட்பாட்டின் மூலம் ஓர் விஷயத்திற்கு ஓர் முறையான அணுகுமுறை வளர்ந்தது என்பது மறுப்பதற்கியலாத ஒன்றாகும்.

இந்த கோட்பாட்டின் ஆணிவேராவது அறிவுப்பூர்வமான தர்க்கவியல், பகுத்தறிவான முறை மற்றும் மனித அறிவு சார்ந்த தத்துவவியலாகும்.

நியாய தரிசனத்தில் ஞானத்தை அறிய ஆறு பிரமாணங்களில் நான்கு பிரமாணங்களை ஏற்கிறது. முதலில் இந்த ஆறு பிரமாணங்கள் என்னென்ன என்று பார்ப்போம்.

1. ப்ரத்யக்ஷம்
2. அனுமானம்
3. உபமானம்
4. அர்த்தாபத்தி
5. அனுபலப்தி / அபாவ
6. ஷப்தம்

இந்த ஆறு பிரமாணங்களில் - ப்ரத்யக்ஷம், அனுமானம், உபமானம், ஷப்தம் - ஆகிய நான்கு

ப்ரமாணங்கள் மூலமே நாம் ஞானத்தை அடைய இயலும் என்ற கோட்பாடே "**நியாய**" மாகும்.

நியாய தரிசனத்தின் நிலைப்பாடே, வாழ்வில் தவறுகளும், துன்பங்களும் நிகழ்வதற்கு காரணம் பூரண ஞானம் இல்லாததாகும்.




சரியான ஞானமே மோக்ஷத்தின் திறவு கோலாகும்.

ஆக, சரியான ஞானம் மோக்ஷத்தையும், தவறான ஞானம் மாயையையும் அளிக்கவல்லது.

நியாய கோட்பாடு ரிக் வேதத்தில் உள்ள நாசதீய சூக்தத்திலேயே கோடிடப்படுகிறது. இதில் பார்த்தோமென்றால், முதலில் வினா எழுப்பி, அதன்பின் விடைதேட முயற்சிக்கும், நியாய கோட்பாட்டின் சாயல் தெரியும்.

அது மட்டுமின்றி இங்கே கடவுள் ஆணா, பெண்ணா என்றும் குறிப்பிடவில்லை மேலும் விஞ்ஞானம் பிரபஞ்சத்தின் ஆரம்பத்தைக்குறித்த **“பெரு வெடிப்பு நிகழ்வு”** ("BIG BANG THEORY") எனும் கோட்பாடுடன் மிக நெருக்கமாக வேதம் பயணிப்பதாக கூறுகின்றது.



மாபெரும் வெடிப்பு என்பதை இறைவனின் தவ வலிமையில் பிறந்த இச்சை - காமம் - விருப்பம் - ஆசை என்று அற்புதமாக வருணிக்கிறார் வேத காலத்து ரிஷி.

அந்த ரிஷி கவிஞருக்கே உரித்தான பாணியில், சந்தேகக் கேள்விகளை எழுப்பி – அதாவது தடை எழுப்பி விடை காண்கின்றார்.

இப்படிப்பட்ட ரிஷியின் சிந்தனை நாம் அன்றே நாகரீகத்தின் உச்ச நிலையில் வாழ்ந்ததை பறைசாற்றுகின்றது.

இந்த நாஸதீய சூக்தத்தில் காணப்பட்ட கவிதைகளுக்கு விளக்கமளிக்க முயன்ற விஞ்ஞானிகள் இந்த பெரு வெடிப்புக்கு காரணமே தெரியாது என்று சொன்ன இடத்தில், அன்றைய மெய்ஞ்ஞானிகளான ரிஷிகள் கடவுள் என்பவர் ஒருவர் இருக்கின்றார் என்றும், அவரது விருப்பத்தினால் இந்த பிரபஞ்சம் தோன்றியது என்றும் கூறியதை இன்றைய ஆக்கப்பூர்வ காரியங்களில் ஈடுபடுகின்ற விஞ்ஞானிகள் அடைந்த ஆச்சரியம் என்னவென்றால், 7000 ஆண்டுகளுக்கு முன்னர், ஒரு வேத கால பாரத ரிஷிக்கு, எவ்வாறு இத்தகைய ஒரு அபூர்வ, அதிசய, அற்புத சிந்தனை பிறந்தது? என்றும், அவர்கள் நாகரீகத்தின் சிகரத்தில் அல்லவா அன்று வாழ்ந்திருக்க வேண்டும்? என்றும் ஆச்சரியம் அடைந்தார்கள்.

சில வெளிநாட்டு அரை வேக்காடுகள் - 'கடவுளரே படைப்புக்குப் பின்னர் தோன்றியதாக' வரும் வரியை எடுத்துக் கொண்டு - படைப்புக்குக்

கடவுள் காரணம் அல்ல - என்று தங்களுடைய அறியாமையை வெளிப்படுத்துகின்றனர்.

வேறு எந்த மதத்திலும் பிரபஞ்சத்தின் ஆரம்பம், மெய்ஞ்ஞானம் கலந்த, விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட, ஒரு ஆன்மீக அறிவியலாக இருப்பதைக் காணமுடியாது.

அதனால், தரிசனங்களை தெளிவாகக் கற்ற பிறகே, ஒருவர் வேதங்களைப் புரிந்துகொள்ள முடியும் என்று பண்டைய மரபு வலியுறுத்தியது.

பிற்கால வேதாந்த மரபுகள் கூட, ஆறு தரிசனங்களையும் கற்க வேண்டியதன் அவசியத்தைப் பெரிதும் வலியுறுத்தியுள்ளன.

இதுபோன்று, மற்ற மரபுகளை கற்று அறிவதினால், மனிதனின் அறிவில் ஒரு புரிதலும், தெளிவும் உண்டாகி, உயர் ஞானத்திற்கு வழிவகுக்கும்.

இப்படிப்பட்ட மேன்மை தருகின்ற சாஸ்திரத்தின் உண்மைப் பொருள் அறிய விரும்பாத சிலர், இந்த சாஸ்திரங்களையும், கடவுளர்களையும், கடவுளை வழிபடுபவர்களையும், குறைக் கூறிக்கொண்டு, ஜீவர்களின் ஸ்தூல உடல் குறைபாடுகளுக்கும்,

அவர்கள் அடையும் இன்ப, துன்பங்களுக்கும் கடவுளைக் காரணம் காட்டி, அவனைக் கருணை இல்லாதவன் என்றும், கண் இல்லாதவன் என்றும் திட்டுகின்றனர்.

மற்றொரு சாரர், கடவுளே இல்லை, கடவுளை நம்புபவன் காட்டிமிராண்டி என்று நையாண்டி செய்கின்றனர்.

இவர்கள், இப்படிப்பட்ட முரண்பாடான இரு வேறு கருத்துக்கள் கூறுவதற்கு முக்கிய காரணமே, இவர்களது அறியாமையே ஆகும்.

எப்படியெனில், கருணையே வடிவான இறைவன், படைக்கின்ற பொழுதே ஒருவனை ஊனமாகவும், மற்றொருவனை நன்றாகவும் படைக்க வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை.

மேலும், ஒருவனை, சந்தோசமாகவும், மற்றொருவனை துயரத்திலும் வைத்திருக்க வேண்டிய, அவசியமும் இறைவனுக்கு கிடையாது.

அவனவன், செய்கின்ற தீய செயல்களை மற்றவர்கள் மீது போடுவதும், நற் செயல்களுக்கு தானே காரணம் என்று தற்பெருமைக்

கொள்வதும், மனித மனதினிடம் உள்ள குறைபாடாகும்.

இந்த குறைப்பாட்டை அறிந்து,

“தீதும் நன்றும் பிறர்தர வாரா!“

என்பதற்கு ஏற்ப, தன்னை அறிந்துக் கொண்டு, அதர்ம காரியங்களை செய்யாமல் தவிர்த்து, தர்ம காரியங்களைச் செய்து, தன்னுடைய செயலுக்கு உண்டான நன்மையையும், தீமையையும், புரிந்து, பாவ, புண்ணியங்களுக்கு பயந்து, என்றும் நல்லவனாக வாழ வேண்டும் என்று சாஸ்திரம் வலியுறுத்துகின்றது.

இதில் இறைவனின் செயல் ஒன்றுமில்லை.

அவனவன் செய்கின்ற நல்ல, தீய செயல்களுக்கு உண்டான பலன்களாக இந்த பாவ, புண்ணியங்களை சேர்த்துக் கொண்டு, இந்த ஸ்தூல உடலை விட்டு, ஜீவன் சூக்ஷும தேகத்தில் வெளிப்பட்டு, தெற்கே உள்ள காலதேவனை அடைந்து, தன் கணக்கை கொடுக்கும் போது,

**“அவனவன் வினைவழி அவனவன் அனுபவம்”**

என்பதற்கு ஏற்ப பலன்களை பகிர்ந்தளிக்கும் **“கர்மபல தாதா”** - வாக மட்டுமே இறைவன் இருக்கின்றார்.

மற்றபடி, இவர்கள் அறியாமையினால், இறைவனிடம் சென்று, கோரிக்கைகள், வேண்டுதல்கள் என்று எதை வைத்து, தனக்கு நன்மை வேண்டும் என்று வேண்டிக் கொண்டாலும், அந்த இறைவன் அவன் ஏற்கனவே சேர்த்து வைத்துள்ள கர்ம பலன்களுக்கு உண்டான பலன்களை மட்டுமே அது நல்லதோ, தீயதோ, அதற்கேற்ப கொடுப்பார்.

இவன் நினைப்பது போன்று, கோவிலுக்கு சென்று, கோரிக்கைகள் வைத்து, வேண்டிக் கொண்டவுடன், இறைவன் இவனுக்கு உடனடியாக நன்மைகளை அள்ளி வழங்கி விடுவார் என்ற அறியாமையும், சுய நலமும் இன்றைய வழிபாடுகளில் காணப்படுகின்றது.

இந்த உண்மையை தர்மம் ஆணித்தரமாக போதிக்கின்ற பொழுதும், மீண்டும், மீண்டும் அறியாமையினால் ஆயிரமாயிரம் சந்தேகங்களை பாமரன் கேட்டாலும், அத்தனைக்கும் அறிவுப்பூர்வமான விளக்கத்தை **“உயர்ந்த அறிவு”**

என்ற சனாதன தர்மம் கொடுத்துக் கொண்டுதான் இன்று வரை இருக்கின்றது.

ஆனால், இந்த உண்மையை அறிகின்ற அளவிற்கு இவனுக்கு அறிவு போதவில்லை என்பது, இவனது குற்றம் மட்டுமே என்று ஒப்புக்கொள்வதைத் தவிர, மற்றவர்களை குற்றம், குறை கூறுவது எந்த வகையில் நியாயமாகும்?.

ஆகவே, இத்துடன் இந்த வேதத்தை ஆராய்வது என்பது, விட்டில் பூச்சி விளக்கின் பிரகாசத்தைக் கண்டு, அதன் உண்மைத் தன்மையை அறியாமல், அதில் விழுந்து மடிவதைப் போன்று, நாமும் வேதத்தின் பிரகாசம் கண்டு, இதன் உண்மை நிலை அறியாமல், வேதத்தைப் பற்றி மற்றவர்கள் கூறுவதையே கேட்டும், ஆராய்ந்தும், வீணாக காலத்தை போக்கி, கற்ற கல்வியானால் பயனின்றி, கடைசி மூச்சு இருக்கின்றவரை கடவுளை ஆராய்வதிலேயே ஆயுள் முடிவடைந்து விடும்.

எனவே, வேதம் 5000 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாக இருக்கட்டும், அல்லது 500 ஆண்டுகள் மட்டுமே பழமை வாய்ந்ததாக இருக்கட்டும்.

நமக்குத்தேவை, அந்த வேதம் உண்மையிலேயே எதைப்பற்றி என்ன கூற வருகின்றது?

இதை மட்டுமே அறிய வேண்டுமே தவிர, மற்றபடி கடந்த காலங்களில் பல ஆராய்ச்சியாளர்கள் அவரவர்களின் அறிவிக்கும், சிந்தனைக்கும் ஏற்றவாறு, இந்த வேதத்தைப் பற்றி எதைக்கூறியிருந்தாலும், இனி என்ன கூறுவதாயிருந்தாலும் அது, அவர்களின் விஞ்ஞான அறிவுக்கு எட்டியதை அவர்கள் கூறுகின்றார்கள் என்று ஒதுக்கி, இதற்குண்டான தீர்வு ஒன்றும் கிடைக்கப்போவதில்லை என்பதை அறிந்து, மெய்ஞ்ஞானத்தினால் அறிந்த ஞானிகளின் வாயிலாக உண்மையை அறிய முயற்சிப்பதே நமக்கு அறிவுப்பூர்வமான செயலாகும்.

இந்த வேதத்தில் கூறியுள்ள பாடல்களுக்கு விஞ்ஞான அறிவைக் கொண்டு பொருள் கூற நினைப்பது, புதியதாய் பாடம் படிக்க பள்ளிக்கு வந்த மாணவன், ஆசிரியரைப் பார்த்து நானும் இவரைப் போல, பாடம் எடுக்க வேண்டும் என்று அடம்பிடிப்பதற்குச் சமம்.

படித்த அறிவைக் கொண்டு இந்த வேதத்திற்கு பொருள் கூற நினைப்பது, ஏற்கனவே நன்கு சமைக்கப்பட்ட உணவை மீண்டும் சூடு செய்து உண்டு, அந்த உணவை செரிக்க முடியாமல், வாந்தி எடுப்பதற்குச் சமம்.

எனவே, மெய்ஞ்ஞானத்தில் தோன்றிய மெய்யறிவான வேதத்தைப் பற்றி, மற்றொரு உயர்ந்த அறிவு பெற்ற, மெய்ஞ்ஞானியினால் மட்டுமே உண்மைப் பொருள் அறிந்து கூற முடியும்.

“**புலமிக் கவரைப் புலமை தெரிதல்**
**புலமிக் கவர்க்கே புலனாம் - நலமிக்க**
**பூம்புனல் ஊர பொதுமக்கட்(கு) ஆகாதே**
**பாம்பறியும் பாம்பின கால்**“

என்ற பாடலுக்கு விளக்கம் கூறும்போது

“நன்மை மிகுந்த அழகிய நீர்வளம் நிரம்பிய குளத்தில் பாம்பு சொல்லும் வழியை மற்றொரு பாம்பே அறியும், அதாவது, பாம்பினுடைய கால்களைத் தன்னுடைய இனமாகிய பாம்புகளே அறியுந் தன்மையுடையன.

அதுபோல, அறிவிற் சிறந்தவர்களை அறிவினால் தெரிந்துகொள்ளும் திறம், அவர்களைப் போன்று அறிவிற் சிறந்தவர்களுக்கே விளங்கும். ஏனைய கல்வியறிவு இல்லாதவர்களுக்கு அது விளங்காது“ என்று பொருள் கூறுகின்றனர்.

**“பாம்பின் கால் பாம்பறியும்”** என்பது நம் முன்னோர் மொழி.

இதைப்போன்றே, தாமரை மலரில் இருக்கின்ற தேனை, தேனீக்கள் எங்கிருந்தாலும் அறிந்துக் கோண்டு வந்து அந்த தேனைக் குடித்து இன்புறும். ஆனால், அதற்கு பக்கத்தில் குதித்து விளையாடிக் கொண்டிருக்கின்ற தவளைக்கு அந்த தாமரை மலரில் தேன் இருப்பதை அறியாது.

அதுப்போல, ஞானிகளை ஞானிகள் மட்டுமே அறிவர். மற்றவர்களால் அவரை ஞானி என்று அறிந்து கொள்ள முடியாது.

இதைப் போன்றே, ஆத்ம ஞானத்தை அறியாத அஞ்ஞானிகள் வேதத்திற்கு விளக்கம் அளிக்கின்றோம் என்று, அவரவர்களுக்குத் தெரிந்த ஆயிரமாயிரம் புதுக்கதைகளை மிகவும் சுவாரசியமாக புகுத்தி, அனைவரும் இரசிக்கும்படி,

அவரவர்களுக்கு உண்டான சிற்றறிவைக் கொண்டு, கூற வருகின்ற விசயங்களுக்கு மெருகூட்டி, பொலிவு படுத்தி, மக்களிடையே கொண்டு சென்று, அவர்களையும், இவர்களைப் போன்றே அஞ்ஞானிகளாக ஆக்கி விடுகின்றனர்.

இது போன்ற ஒன்றுக்கும் உதவாத விசய ஞானங்களை, வீணாக இந்த விஞ்ஞானிகள், மக்களின் மனதில் விதைத்து வருகின்றார்கள்.

இதுபோன்றே, இந்திய வரலாற்று உண்மைகளும் மாணவர்களது பாடத்திட்டங்களில், ”புதிய பாடத்திட்டம்” என்ற பெயரில் திட்டமிட்டே மாற்றி அமைத்திருக்கின்றார்கள்.

இது இன்றைய கல்வி முறையின் மிகப் பெரிய சூழ்ச்சி மற்றும் கேடு ஆகும்.

இதை அறியாமல், இவர்களையே அறிவாளிகள் என்று நம்புகின்ற, அறியாமை கொண்ட ஜனங்களைப் பார்த்து பரிதாபப்படுவதைத் தவிற வேறு வழியே இல்லை.

கசாப்புக்கு வெட்டப்படுவதற்காக, வளர்க்கப்படுகின்ற அந்த ஆடு, மேய்ப்பவனையே கடைசிவரை நம்பி, கடைசியில் அவன்

கையினாலேயே வெட்டுண்டு மடிவதைப் போல, இந்த அறியாமை ஜனங்களும் ஒரு நாள், இவர்களின் கையாலேயே மடியப்போகின்றனர் என்பதை நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.



கல்வி கற்றலின் முக்கிய நோக்கமே, அறிவை விரிவு படுத்தி, அந்த பேரறிவை அறியும் முயற்சியாக அமைதல் ஆகும்.

**கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்.** – திருக்குறள்.

கல்வி கற்பது அறிவு பெறுவதற்காக மட்டுமே. நாம் எவ்வளவு கல்வி கற்றாலும் அதிலிருந்து அறிந்து கொண்ட அறிவுக்கு மேல், இன்னும் அறியவேண்டிய அறிவு இருந்து கொண்டே இருக்கிறது. அந்த அறிவின் எல்லை எங்கே முடிகின்றது என்று

நாடுகின்ற போது, அது நாமறிந்த இந்த சிறிய அறிவுக்கு எட்டாததாக இருக்கிறது.

ஆகவே, நாம் அறிந்து கொள்ள முடியாத அறிவு இருந்து கொண்டே இருப்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகின்றது. நம் அறிவுக்கு எட்டாத அந்த அறிவின் பூரணத்தைத்தான் '**வாலறிவன்**' என்றும் '**பகவன்**' என்றும் அழைக்கிறோம்.

அந்தப் பகவான் என்ற பூரண அறிவிற்கு மிகவும் குறைந்தது தான், நம்முடைய அறிவு என்பதை ஒப்புக் கொள்ளுகின்ற வகையிலேயே, நாம் கற்ற கல்வியினால் வெளிப்படுகின்ற அறிவைக் காண முடிகின்றது. ஆகவே ஒப்புக் கொண்டால் அதற்கு நிச்சயம் தலை வணங்கியே தீர வேண்டும் என்பது புரியும்.

புரியாதவர்கள், எத்தனைதான் கற்றாலும், அதில் இன்பம் அடையாமல், அதில் குறைகளைக் காண்பர். அதற்குக் காரணம், ஒரு ஆணியை எடுத்து கடும் பாறையில் அடிக்க முற்பட்டால், அந்த ஆணிதான் வளையுமே தவிர, ஆணி அந்த பாறையினுள் நுழையாது.

அதைபோல, எவ்வளவுதான் சாஸ்திர விஷயங்களை ஆணித்தரமாக அடித்து மற்றவர்களுக்கு புகுத்த முயன்றாலும் கடின மனம் கொண்டவர்கள் இதை ஏற்க மாட்டார்கள்.

அதுவே, அந்த ஆணியை ஒரு மண் பாறையில் அடிக்க முயன்றால், அந்த ஆணி மிக எளிதாக உள்ளே நுழைந்து விடும்.

அதைப்போலவே, ஒரு சில இளகிய மனம் கொண்டவர்கள் இந்த சாஸ்திர விஷயங்களை ஆர்வத்துடன் ஆராய்ந்து, புரிந்து ஏற்றுக்கொள்வர்.




இந்த சாஸ்திரத்தை அறிந்து, உயர்ந்த அறிவு பெற்று, உண்மையை உணர்ந்த மெய்ஞானிகளோ,

இந்த பிரபஞ்சம் “**பெரு வெடிப்பு**” என்ற நிகழ்வினால் உருவாகவில்லை, இது ஒரு பேரறிவின் “**பெரு ஒழுங்கு**” விதிக்கு உட்பட்டது என்று உறுதிப்படுத்துகின்றார்கள்.

இந்த பிரபஞ்சம் பேரறிவின் “**பெரு ஒழுங்கு**” விதிப்படி உருவாகியதை எப்படி இவ்வாறு உறுதிப்பட இவர்களால் கூறமுடிகின்றது என்றால்,

ஒரு தினசரி நாளிதழை தினம், தினம் அச்சடித்து வெளிவிடும் ஒரு அச்சுக்கூடம், பெரும் குண்டு வெடிப்பினால், வெடித்துச் சிதறிய, சில காலங்களுக்குப் பிறகு, பருவ மாறுதல்களினால் மெல்ல, மெல்ல அந்த அச்சுக்கூடம், தன்னை மெதுவாகப் புதுப்பித்துக்கொண்டு, தானாகவே எழுத்துக்கள் அடங்கிய அச்சுக்களை, அச்சு இயந்திரத்தில் பொருத்திக்கொண்டு, வெள்ளைத் தாள்களை தானாகவே, இயந்திரத்தினுள் நுழைத்துக்கொண்டு, எழுத்துக்களை அச்சடித்து தினசரி நாளிதழ்களாக உரு மாற்ற முடியும் என்பதை நீங்கள் நம்பத் தயாராயிருந்தால்,

இந்த பிரபஞ்சமும், தன்னைத்தானே பெரு வெடிப்புக்கு பிறகு, இந்த சூரியக் கோள்களையும்,

விண்மீன்களையும், பஞ்ச பூதங்களான நீர், நிலம், நெருப்பு, காற்று, மற்றும் எல்லையற்ற ஆகாயத்தை உண்டாக்கிக்கொண்டு, இன்று வரை விரிந்துக் கொண்டே, அதில் ஒரு ஒழுங்கை வகுத்துக் கொண்டு, அதில் ஓர் அறிவு முதற்கொண்டு, ஆறு அறிவு படைத்த மனிதன் வரை பல உயிர்களையும் படைத்து, இந்த படைப்பின் மிகப்பெரிய அறிவாளிகளான இந்த விஞ்ஞானிகளையும், பேரறிவின் வெளிப்பாடான மெய்ஞ்ஞானிகளையும், கொண்ட இன்றைய இந்த ஒழுங்கு உலகத்தை உருவாக்கி ஒரு நியதிப்படி இயங்கிக் கொண்டிருப்பதை, விஞ்ஞானிகள் கூற்றுப்படி, பெரு வெடிப்புதான் காரணம் என்றும் நம்பலாம்.

கொடுக்கப்பட்ட அறிவைக் கொண்டும், நற் சிந்தனைகளைக் கொண்டும், இந்த சிறு மதியில் சிந்தித்துப் பாருங்கள், எப்படிப்பட்ட அழகான நந்தவனம் இந்த உலகம், இந்த உலகத்தில் உள்ள உயிர்களிடத்திலே எத்தனை, எத்தனை விதமான அழகான தோற்றங்கள், அதை பார்த்து ரசிக்கின்ற அழகான கண்கள், சிறு பறவைகளின் கூக்குரல் ஓசைகளை கேட்கின்ற காதுகள், மலர்களின் இருந்து வருகின்ற வித, விதமான

நறுமணங்களை நுகரும் மூக்கு, பலவகையான சுவைகளில் பழங்களின் சுவைக்கும் நாக்கு என்று எத்தனை, எத்தனை விதமான அதிசயங்களைக் காண முடிகின்றது இந்த மனித தேகத்தில், இந்த தேகத்தைக் கொண்டு வாழுகின்ற இந்த பூமிக்குத்தான் எப்படிப்பட்ட இயற்கை அழகு.

இவைகள் அனைத்தும் நாம் ஒப்பிட்டுப் பார்க்கின்ற பார்வையைப் பொருத்தே காணப்படுகின்றது.

உதாரணமாக, ஒரு சிகப்பு வர்ண கண் கண்ணாடியை அணிந்துக் கொண்டு இந்த உலகத்தைப் பார்த்தால், இந்த உலகம் முழுவதுமே சிகப்பு வர்ணத்தில் தெரியும்.

ஒருவன் சிகப்பு வர்ண கண் கண்ணாடியை அணிந்துக் கொண்டு இந்த உலகத்தைப் பார்த்து விட்டு, இந்த உலகம் முழுவதும், சிகப்பு நிறத்தில் காணப்படுகின்றது என்று கூறுவதை மற்றவர்கள் ஏற்கமுடியுமா?

அதைபோலத்தான், இந்த விஞ்ஞான கண்டுபிடிப்புகள் அனைத்தும் காணப்படுகின்றன.

மெய்ஞ்ஞானிகள் இந்த உலகத்தை, அவர்களிடம் இருந்த மெய்யான கண்ணைக் கொண்டு பார்த்ததினால், அவர்கள் பார்வையில், இந்த உலகம் எப்படித் தெரிகின்றது எனப் பாருங்கள்.

**காக்கைச் சிறகினிலே நந்த லாலா! நின்தன்**
**கரியநிறந் தோன்று தையே நந்த லாலா!**

**பார்க்கும் மரங்க ளெல்லாம் நந்த லாலா! நின்தன்**
**பச்சை நிறந் தோன்று தையே நந்த லாலா!**

**கேட்கு மொலியி லெல்லாம் நந்த லாலா!**
**நின்தன் கீத மிசக்குதடா நந்த லாலா!**

**தீக்குள் விரலை வைத்தால் நந்த லாலா!**
**நின்னைத் தீண்டு மின்பந் தோன்று தடா நந்த**
**லாலா! –** சுப்ரமணிய பாரதி.



உண்மை அறிவு கொண்டவன் இந்த உதவாக்கரை விஞ்ஞானிகள் உலறுவதை ஏற்கமாட்டான். அறிவியலின் வளர்ச்சி அனைத்தும், இந்த சிற்றறிவிற்கு வேண்டுமானாலும் புதுமையாய் இருக்கலாமே தவிர, அணுவையே முழுமையாய் அறியா முடியாத இவர்கள், **“கடவுள் துகள்”** என்று ஒன்றை கண்டறிந்து விட்டதாகவும், அதனால், இவர்கள் கடவுளை அறிந்து விட்டதாகவும், எதேதோ புதுபுதுக்கதைகளை மக்களிடையே புகுத்தி வருவதையும் காணும் போது, உண்மையிலேயே, இவர்களுக்கு, அறிவிற்கும், அறியாமைக்கும் கூட வித்தியாசம் தெரியவில்லை என்பது நன்கு புலனாகின்றது.

உண்மையில் தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகளினால் மட்டுமே, அந்த தன்னிகரில்லா தலைவனை அறிந்து, அவனது பேரறிவின் வித்தாய் வெளிப்பட்ட வெளிப்பாடுதான் இந்த பிரபஞ்சம், என்பதை எவன் ஒருவனால் அறிய முடியுமோ, அவனே உண்மையை அறிந்த **“உத்தமன்”** ஆகின்றான்.

பொதுவாக, இந்த பிரபஞ்சத்தின் இயக்கத்தில் ஒரு ஒழுங்குமுறை காணப்படுவதை யாரும் மறுக்க முடியாது.

உதாரணமாக, சூரியக் கோள்களின் ஒழுங்கான வட்டப் பாதைகள், அவைகள், சுற்றும் சுற்றுக்களில் கால, தேசத்தின் அளவுகள், இந்த கோள்கள் தன்னைத்தானே சுற்றுவதினால் உண்டாகும் பருவ நிலை மாறுதல்கள், பஞ்ச பூதங்களின் வாயிலாக உயிர்களின் தோற்றங்கள், தோன்றிய உயிர்களின் உணவுச் சக்கர ஒழுங்கு விதிகள், உண்ட உணவைக் கொண்டு இந்த பரு உடலில் உண்டாகும் மாறுதல்கள், இந்த உடலுக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியின் இயக்கங்கள் போன்ற எண்ணற்ற விசயங்கள் ஒரு ஒழுங்கு நியதிக்குள் இருப்பதைக் காணமுடிகின்றது.

வெடித்துச் சிதறுவதுப் போல ஒரு ஒழுங்கற்ற செயலை இந்தப் பிரபஞ்சம் செய்ய முடியுமானால், தன்னைத்தானே சுற்றுகின்ற பூமி, திடீரென எதிர் திசையில் சுற்ற ஆரம்பித்தி விடும், திடீரென ஈர்ப்பு விதி தன்னுடைய விதியை தளர்த்திக் கொண்டு சிறிது மாறுதலுக்கு தள்ளுதலுக்கு உட்படலாம்.

யோசித்துப் பார்க்க வேண்டும்!

இந்த பிரபஞ்சம் முழுக்க முழுக்க ஒரு ஒழுங்கு நியதிக்கு கட்டுப்பட்டு செயல்படுகின்றது என்பதே உண்மை.

விஞ்ஞானிகளின் கூற்றுப்படியே ஏற்கலாம் என்றால், வெடிக்கப்பட்ட ஒரு பொருள் எப்படித் தன்னைத்தானே ஒரு ஒழுங்கு நியதிக்குள் கொண்டு வர முடியும் என்பதை அவரகள் அறியவில்லை போலும்.



வெடித்துச் சிதறிய எந்தப்பொருளும் தாறுமாறாகச் சிதறி பயனற்று போகத்தான் முடியுமே ஒழிய ஒரு ஒழுங்கு பயன்பாட்டிற்கு வரவே வராது.

ஆகவேதான் இந்த விஞ்ஞான முன்னேற்றம் என்பது ஒரு கண்துடைப்புச் சமாச்சாரம். இவர்கள் இன்று ஒன்றைக் கூறுவார்கள், நாளை ஒன்றைக் கூறுவார்கள். ஒரு விஞ்ஞானியின் கூற்றை மற்றொரு விஞ்ஞானி ஏற்க மாட்டார். இவரது கண்டுபிடிப்பில் பிழை இருக்கின்றது, என்னுடைய கண்டுபிடிப்பை அறிவியல் ரீதியாக நிருபிக்கின்றேன் என்று புதிதாக வந்த விஞ்ஞானி நோபல் பரிசு கூட வாங்கிக் கொள்வார். காரணம் நோபல் பரிசு கொடுத்தவருக்கே இந்த உண்மைகள் எதுவும் விளங்காது.

இவர்களுக்குள் ஒரு தற்புகழ்ச்சிக்காகவும், தன்னுடைய நாட்டின் பெருமைக்காகவும் இவ்வாறு எதையாவது அறிக்கை வெளியிட்டுக் கொண்டிருப்பார்களே தவிர உண்மை என்னவென்று அறியாதவர்கள் இவர்கள்.

பாவம் இவர்களைக் குறைக்கூற என்ன இருக்கின்றது, அஞ்ஞானத்தின் இருப்பவர்கள் அப்படித்தான் இருப்பார்கள், இருந்தாக வேண்டும். இதுவே அறியாமையின் பிரபஞ்ச நியதி.

ஆனால், அறிவுள்ளவர்கள் இந்த இடத்தில் சற்று நின்று, நிதானமாக யோசித்து, இந்த வேதத்தின்

உண்மைப் பொருளை அறிய முயற்சி செய்ய வேண்டும்.

அப்படி, ஆர்வமுடன், தன் சுய அறிவைக் கொண்டு, அறிய விரும்புகின்றவர்களுக்கு உண்மையில் அறியப்படும் பொருள், அந்தப் **“பரம்பொருள்”** மட்டுமே. அவரைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்?

பண்டைய கால ரிஷிகள் தாங்கள் அடைந்த மெய்ஞ்ஞானத்தை, எளிதாக பாமரனும் படித்து பயனடையும் பொருட்டு, எளிமைப்படுத்தி உபநிஷத்துக்களாக நமக்கு அளித்துள்ளார்கள்.

ரிக் வேதத்தில் உள்ள நாசதீய சூக்தத்தின் துதியில் “அந்த ஒன்று” உயிர்த்துடிப்புடன் இருந்தது. அது தவத்தினால் (தவம் = வெப்பம்), இச்சையினால் இதைத் தோற்றுவித்தது – என்பதை பெருவெடிப்பின் வாயிலாக இந்த பிரபஞ்சம் தோன்றியுள்ளது என்று வேதம் படித்த அறிஞர்களும் கூறுகின்றார்கள் என்றால் அவர்களிடம் இந்த வேதத்தின் சாரமாக எடுக்கப்பட்ட கடைசிப் பகுதிகளான உபநிஷத்துக்களை அறியவில்லை என்பதே ஆகும்.

அதாவது, அந்த ஒன்று உயிர்துடிப்புடன், தவத்தின் (வெப்பத்தின்) இச்சையினால் வெளிப்பட்டது என்பதை, நாம் ஏன் பெரு வெடிப்பினால் இந்த பிரபஞ்சம் வெளிப்பட்டது என்ற விஞ்ஞானப் பார்வையில் பார்க்க வேண்டும்.

அதுவே, உள்ள ஒன்று உயிர்துடிப்புடன் வெப்பத்தின் இச்சையினால் வெளிப்பட்டது என்றால், அது வெப்பத்தில் வெளிப்பட்ட வித்துவைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும் என்ற மெய்ஞ்ஞானப் பார்வையில் இதைப் பார்க்க வேண்டும்.

விதைக்கின்றவன் விதையை விதைக்காமல், விளைச்சலை எதிர்ப்பார்ப்பது எப்படி மடமையோ, அதுப்போல, விதையையும், விதைத்தவனையும் அறியாமல், விளைச்சலின் வெளிப்பாடாய் வெடிப்பு நிகழ்ந்தது என்றும், அந்த வெடிப்பினால் பிரபஞ்சம் தோன்றியது என்றும் கூறுவது மடமையிலும் மடமை அன்றோ!.

இங்கு, வேதம் (எந்த மொழியில் வேண்டுமானாலும் கூறட்டும்) கூற வருகின்ற உண்மை என்னவென்றால், விதையும், விதைப்பவனும் இன்றி, விளைச்சலை எதிர் பார்க்க முடியாது.

அதுப்போல, களிமண்ணும், குயவனும் இன்றி பானையைப் பார்க்க முடியாது.

தங்கமும், நகை செய்யும் ஆசாரியும் இன்றி மோதிரம், வளையல்களை பார்க்க முடியாது.

அதுப்போல, மூலக்கரு ஒன்று முளைப்பதற்கு முத்தாய்ப்பாய் மூன்று முக்கிய விசயங்கள் தேவையன்றோ, அவைகள் விதைப்பவன், விதை, விதைத்ததினால் விளைந்த விளைச்சல்.

குயவன், களிமண் மற்றும் பானை.

அல்லது, ஆசாரி, தங்கம் மற்றும் நகைகள்.



இந்த அடிப்படை மூலகங்கள் மூன்றும் இன்றி ஒரு அணுகூட (எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான்) இயங்க முடியாது, என்பதை முட்டாள்கள்கூட அறிந்து இருக்கின்ற பொழுது, முற்றும் அறிந்த முனிவனுக்கு, மூடர்கள் விஞ்ஞானம் என்ற வீண் விசயங்களை விளக்கிக் கொண்டிருக்கின்றார்கள்.

ஆகவே, இந்த மூன்றும் சேர்ந்தால்தான் எதுவும் உருவாகவும், செயல்படவும் முடியும்.

இங்கு இந்த மூன்றும் ஸ்தூல தேகத்தினால்தான் ஒன்று சேரும் என்று எதிர்பார்க்கக்கூடாது.

உதாரணமாக தலையில் தோன்றும் பேனுக்கு அம்மா, அப்பா பேன் எப்படி வந்தது?

என்று கேட்கக் கூடாது.

ஏனெனில், தலையின் வெப்பச் சலனத்தால் வெளிப்பட்ட வித்தான வியர்வைத்துளியில் வெளி வந்த அழுக்கு போன்ற அணு, இந்த பஞ்சபூதங்களுடன் இணையும் பொழுது அங்கு பேன் என்ற ஒரு உயிர், உடல் பெற்று உருவாகின்றது.

இங்கு விதை வியர்வைத்துளியில் வெளிவந்த அணு, அதை உடல் வெப்பத்தால் விதைத்தவன்

பஞ்சபூதங்களால் ஆன மனிதன், விளைச்சலின் பயன் பேன் என்ற ஒரு உயிர்.

இதற்கு விஞ்ஞான அறிவு தேவையில்லை, மெய்ஞ்ஞானம் இருந்தால் மட்டும் போதும்.

அதுப்போல, இந்த பூவுலகில் பல உயிர்கள் தோன்றுகின்றன.

உதாரணமாக, மழைக்காலங்களில் தோன்றும் ஈசல்கள், தும்பி, காளான் என்று ஒரு நாள் தோன்றி மறு நாள் இல்லாமல் போகின்ற இயற்கையின் உணவுப் படைப்பிற்கு யாரால் விடைக் காண முடியும்.

இந்த உயிர்களின் உடல் மாறுபாடுகளுக்கு காரணம், பஞ்ச பூதங்களின் சேர்க்கை ஆகும்.

பஞ்சபூதங்களின் சேர்க்கையின் மூலம் இந்த உடல் உண்டாகும், மாறுபாடுகளுக்கு காரணம் படைப்பவன் ஆவான்.

படைப்பவன் பானை, தட்டு, டம்ளர் என்று, அவன் தன் விருப்பப்படி படைக்கின்றானா என்றால், இல்லை, பயன் படுத்துபவர்களின் தேவைக்கு ஏற்ப படைக்கின்றான்.

(அதாவது, ஜீவன்கள் செய்த வினைகளுக்கு ஏற்ப, அவைகளை, பாவ, புண்ணியங்களாக அனுபவித்து தீர்க்க ஏற்றவாறு உடல்கள் பலவாறாக படைக்கப்படுகின்றது).



மேலும், மற்றொரு முக்கியமான விஷயம்.***

இங்கு படைக்கப்பட்டவைகள் உள்ளன.

படைப்பவன் இருக்கின்றான் என்றால், படைப்பதற்குத் தேவையான மூலப்பொருள் (விதை) எங்கிருந்து வந்தது?

என்ற கேள்வி வருகின்றது.

அப்படி படைப்பவனுக்கே (இறைவனுக்கே) மூலப்பொருள் (விதை) வெளியில் இருந்து கிடைக்கின்றது என்றால், அந்த விதைகளை படைத்தவன் வேறு ஒருவன் இருக்கின்றானா?

என்ற மற்றொரு கேள்வி உருவாகின்றது.

அப்படியானால், இறைவனை விட பெரியவன் ஒருவன் இருக்கின்றான் என்று ஆகிவிடுமே?

இல்லையென்றால், படைப்பவன் (குயவன்), படைக்கப்படும் பொருள் (பானை), மூலப்பொருள் (களிமண்) என்ற மூன்றும் தேவை என்ற நியதிப்படி, படைப்பவன் இறைவன், படைக்கப்படும் பொருள்கள் இந்த பிரபஞ்சம், பிரபஞ்சத்தினுள் உள்ள பல ஜீவன்கள், அப்படியானால் மூலப்பொருள் எது?

என்ற கேள்வி வரும்?

அதாவது, முதன் முதலாக விதையிலிருந்து மரம் வந்ததா?

அல்லது,

மரத்திலிருந்து விதை வந்ததா?

இது, விஞ்ஞான அறிவின் வெளிப்பாடான கேள்வி?

அதாவது,

முட்டையிலிருந்து கோழிக்குஞ்சு வந்ததா, அல்லது கோழியிடம் இருந்து முட்டை வந்ததா?

என்பது போன்று இங்கு குழப்பிக்கொள்ள வேண்டிய அவசியமே இல்லை.









நம்முடைய வேதாந்த சாஸ்திரம் அழகான உதாரணத்துடன், இந்த படைப்பின் இரகசியத்தையும் உடைக்கின்றது.

அதாவது,

ஒரு சிலந்திப் பூச்சியானது, தன்னிடம் உள்ள உமிழ் நீரைக் கொண்டே, ஒரு வலையைப் பிண்ணுகின்றது.

அந்த வலையைப் பிண்ண வெளியிலிருந்து எந்தவிதமான மூலப் பொருட்களையும் கொண்டு வருவதில்லை.



அதே பூச்சி, தனக்கு வலை தேவையில்லை என்றபொழுது, அந்த பிண்ணிய அழகான வலையை மீண்டும் தன்னுள்ளேயே இழுத்துக் கொள்கின்றது.

அதுப்போல, இறைவனால் படைக்கப்பட்ட சாதாரணமான ஒரு சிலந்திப் பூச்சியே

தன்னைத்தவிர, வேறு எந்த மூலப்பொருட்களின் உதவியும் இன்றி வலையைப் பிண்ணவும், உள்ளிழுக்கவும் முடியும் போது, இந்த பிரபஞ்சத்தையே படைத்த இறைவன் தனக்கு வேறாக, வெளியிலிருந்து மூலப்பொருட்களைப் பெற வேண்டிய அவசியம்தான் என்ன வந்தது?

மேலும் அவனைத்தவிர அவனுக்கு வேறாக இந்த அவணியிலே ஒன்றுமே இல்லாத போது, அவன் எப்படி இன்னொன்றை எதிர்ப்பார்ப்பான்.

ஆகவே, இங்கு மூலப்பொருளே இறைவன், படைப்பவனும் இறைவன், படைக்கப்பட்ட ஜீவன்களும் இறைவன்.

இந்த சத்தியத்தை போதிப்பதே சனாதன தர்மம்*.

இதை அறியாத அஞ்ஞானிகள் இறைவனுக்கு வேறாக ஒன்று இருக்கும்படியும் அதைக்கொண்டு இறைவன் வெடிக்க வைத்தான், என்று துவைத புத்தியில் உளறிக்கொண்டிருக்கின்றார்கள்.

சிலர், வெடிப்பிற்கு பிறகு இறைவன் வந்தான் என்று மடத்தனமாக, மனம் போனபடி, பேசிக் கொண்டிருக்கின்றார்கள்.

உண்மையில் இறைவனுக்கு வேறாக ஒரு சக்தி செயல்படுமானால், அவனை இறைவன் என்று அழைக்க வேண்டிய அவசியம் இருக்காது.

காரணம், ஒரு நாள் அந்த சக்தி இறைவனை வென்றுவிடலாம்.

சாஸ்திரத்தின் சர்வ நிச்சயமான வாக்கியம் “இருப்பதெல்லாம் இறைவனே, அவனைத் தவிர, அவனுக்கு வேறாக வேறு எதுவும் இல்லை. இருக்கவும் முடியாது”.

எனவே இருப்பதெல்லாம் ஒன்றேயான அந்த ஒன்று, வெப்பத்தால் தன்னை வெளிப்படுத்திக்கொண்டது.

வெளிப்பட்டதில் பலவாக பல்கிப் பெருகிய அனைத்தும். பல உயிர்களாக பல உடல்களாக எடுத்துக் கொண்டது.

பல உடல்களின் தேவை எதனால் என்றால், ஒவ்வொரு உடலுக்கு உண்டான குணம், மனம், திடம் என்ற மூன்றும் மாறுதலுக்கு உட்பட்டு இருப்பதினால், பிரபஞ்சத்தின் அனைத்து தேவைகளையும், அனுபவத்தில் அடைந்து, அதனால் திருப்தியும், திருத்தமும் அடைவதற்காக, உடல்களை மாற்றிக் கொண்டது.

உதாரணமாக,

**நிற்பதுவே நடப்பதுவே பறப்பதுவே**
**நீங்களெல்லாம் சொப்பனந்தானோ?**
**பல தோற்ற மயக்கங்களோ?**

**கற்பதுவே கேட்பதுவே கருதுவதே**
**நீங்களெல்லாம் அற்ப மாயைகளோ?**
**உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?**

**வானகமே இளவெயிலே மரச்செறிவே**
**நீங்களெல்லாம் கானலின் நீரோ? வெறும்**
**காட்சிப் பிழைதானோ?**

**போனதெல்லாம் கனவினைப்போல்**
**புதைந்தழிந்தே போனதனால்**
**நானும் ஓர் கனவோ? இந்த ஞாலமும்**
**பொய்தானோ?**

**காலமென்றே ஒரு நினைவும்**
**காட்சியென்றே பல நினைவும்**
**கோலமும் பொய்களோ?**
**அங்கு குணங்களும் பொய்களோ?**

**காண்பவெல்லாம் மறையுமென்றால்**
**மறைந்ததெல்லாம் காண்பமன்றோ?**

**நானும் ஓர் கனவோ? இந்த ஞாலமும் பொய்தானோ?**

என்ற மகாகவி ஞானியின் பாடல் உங்களுக்கு பொருள் உணர்த்துமாயின் நீங்கள் மீண்டும், மீண்டும் இறைவன் வேறு, நான் வேறு என்ற சந்தேகம் அடைவதற்கு வழியே இல்லை.

மீண்டும் சந்தேகம் வருகின்றது என்றால், இந்த பாடங்கள் புரியவில்லை என்றும், அல்லது இந்த பாடங்களை ஒழுங்காகப் படிக்க வில்லை என்றும் அறியலாம்.

ஆனால், அரைகுறையாகப் படித்து விட்டு மற்றவர்களையும் குழப்பி விடக்கூடாது என்பதுதான் மிக முக்கியம்.

இப்படிப்பட்ட பிரபஞ்சத்தின் வாயிலாக இறைவன் தன்னை வெளிப்படுத்திக் கொண்டதே மாயை என்று சாஸ்திரம் உபதேசிக்கின்றது.

மேலும், ஓர் உதாரணத்தின் வாயிலாக அறிய முறபடலாம்.

நீங்கள் ஒரு திரையரங்குக்குள் சென்று அமர்கின்றீர்கள்.

அங்கு ஒரு வெள்ளைத் திரை உங்கள் கண் முன்பு காணப்படுகின்றது.

அதில், அந்த திரையில் எந்த ஒரு பிம்பங்களோ, உருவங்களோ இல்லாத நிலையில் அசைவற்று அமைதியாக இருப்பதை நீங்கள் காண்கின்றீர்கள்.



அந்த அசைவற்ற, அமைதியான திரையைப் போன்று, பிரம்மத்தின் உண்மை நிலை என்று வைத்துக் கொள்ளுங்கள்.

அடுத்து, சிறிது நேரத்தில் திரைப்படம் போடப்படுகின்றது.

உடனே அங்கு காட்சிகள் விரிகின்றன.

அந்த காட்சிகளின் தத்ரூபம் அனைத்தும் உண்மைப் போன்றே காணப்படுகின்றது.

நதிகள், மரங்கள், மலைகள் பலப்பல ஜீவராசிகள் என்று அத்தனையும் அந்த திரையில் காட்சிகளாக காணப்படுகின்றது.

நீங்களும் அதனுடன் ஒன்றி விட்டீர்கள்.

திடீரென்று மின் இணைப்பு துண்டிக்கப்பட்டவுடன், அந்த திரை மீண்டும் பழைய வெள்ளை நிறத்திற்கே திரும்பி அமைதியாகவும், அசையாமலும் இருக்கின்றதை உங்களால் காண முடிகின்றது அல்லவா?

இப்பொழுது நீங்கள் உங்கள் சுய நினைவுக்கு வந்து விட்டீர்கள் இல்லையா!

அப்படியானால், நீங்கள் இதுவரை பார்த்து அனுபவித்த அனைத்தும் மாயை என்று, உங்களால் புரிந்து கொள்ள முடிகின்றது.

இதைப்போலவே, உங்கள் மரணத்திற்கு பின்பும் இதே நிலைதான் நடக்கப் போகின்றது என்பதை அறிந்து கொள்வதற்காகவே அறிவு கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த உண்மையை அறிய அறிவைப் பயன்படுத்தாமல், திரைப்படத்தில் மூழ்கி அதிலேயே லயமாகி அந்த காட்சிகளில் மயங்கியும், அழுதும், சிரித்தும் பொழுதைப் போக்கியது போன்றே, இந்த உலகத்திலும் உங்கள் பொழுதை போக்கிக் கொண்டிருக்கின்றீர்கள் என்பதே உண்மை.

மின் இணைப்பு துண்டிக்கப்பட்டவுடன் திரையில் காட்சிகள் இல்லாமல் வெறுமை உண்டாவதுப்போலவும், சிலந்திப்பூச்சி வலையை வேண்டாம் என்று தன்னுள் இழுத்துக் கொள்வதுப் போலவும், இறைவன் தன்னுடைய வெளிப்பாட்டைத் தேவையில்லை என்றவுடன் தன்னுள்ளேயே இழுத்துக் கொள்கின்றான்.

இந்த பிரபஞ்சத்தை தன்னுள்ளே இழுத்துக் கொள்ளும் நிகழ்வுக்கு “**மகாபிரலயம்**” என்று சாஸ்திரம் அழைக்கின்றது.

அவனது மாயா விளையாட்டு முடிவடையும் தருணம் இந்த “**மகா பிரலயம்**” ஆகும்.

இதைபோலவே, மனிதன் இந்த உலகத்தை ஆழ்ந்த தூக்கத்தில் தன்னுள்ளே இழுத்துக் கொள்வதை சாதாரண பிரலயம் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

இது எப்படியென்றால், நீங்கள் தினமும் தூங்கச்சென்று ஆழ்ந்து தூங்கும் வரை அனைத்து யோசனைகளையும், கனவுகளையும் கண்டு கொண்டிருப்பீர்கள், ஆனால், ஆழ்ந்து தூங்கியவுடன் உங்களுக்கு இந்த உலகத்தில் எது நடந்தாலும் தெரியாது. அருகில் படுத்துக் கொண்டிருப்பவர்கள் கூட யார் என்று அறியமுடியாமலும், உங்களுக்கு இருக்கின்ற உங்களது உடலையே நீங்கள் அறிய முடியாமலும் தினம், தினம் இந்த ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கின்றீர்கள்.

இதனைத்தான் சாஸ்திரம் “லயம்” என்று சமஸ்கிருதத்திலும், ஒடுங்குதல் என்று தமிழிலும் உபதேசிக்கின்றது.

ஆனால், மொழிப்பிரச்சனைகளை உண்டாக்கிக் கொண்டும், அரசியல் பிரச்சனைகளைக் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டும், போராடத்தில் ஈடுபட்டு இருக்கும் நீங்கள் இதை எல்லாம் அறிந்து கொள்ள நேரம் இருக்காதுதான்.

சரி! விசயத்திற்கு வருவோம்!

லயம் என்றால் ஒடுங்குதல், பிரலயம் என்றால் தோன்றி, தோன்றி ஒடுங்குதல் என்றும் பெயர்.

இந்த மகாபிரலயம் இறைவன் மேற்கொள்ளும் வரை இந்த ஜீவன்கள் அனைத்தும், அதனதற்கு கொடுக்கப்பட்டுள்ள குணம், மனம், உடல் திடம் இவைகளைக் கொண்டு இந்த உலகம் என்ற வெள்ளைத் திரையில் இறைவனின் ஒளி வெளிச்சத்தில் நன்றாக நடிக்கலாம்.



சினிமா புரொஜெக்டரில் இருந்து வெளிப்படுகின்ற ஒளி துண்டிக்கப்பட்டவுடன் காட்சிகள் மறைவது போன்று, இறைவனிடமிருந்து வெளிப்படுகின்ற ஆன்ம ஒளி துண்டிக்கப்பட்டவுடன் இந்த உலக காட்சிகள் அனைத்தும் மறைந்து விடும்!.

இவ்வாறு, இந்த ஜீவன்கள் இந்த பூமிக்கு உடல் எடுத்து வந்து அதனதன் பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப வினைகளை அனுபவிக்கின்றது.

இவ்வாறு உடல் எடுத்த உயிர்கள் அதனதன் உடல்களின் மாறுபடுகளுக்கு, அதனதன் வினைகளே காரணமாக அமைகின்றது.

ஆகவே, இந்த உயிர்களில் பலவகையான உடல் காணப்படுவதற்குக் காரணம் அதனதன் வினைகளே ஆகும்.

வினைகளுக்கு காரணம், உடல் எடுத்த உயிர்களின் செயல்களே ஆகும்.

உயிர்களின் செயல்களுக்கு காரணம், அதன் ஆசைகளே ஆகும்.

ஆசைகளுக்குக் காரணம், அதன் அஞ்ஞானமே (அறியாமை) ஆகும்.

அஞ்ஞானத்திற்கு காரணம் அவைகள் தன்னை அறியாமையே ஆகும்.

தன்னை அறியாமைக்கு காரணம் அவைகள் தன்னை உணராமையே ஆகும்.

தன்னை உணராததற்கு காரணம் அஹங்காரம் ஆகும்.

அஹங்காரத்திற்கு காரணம் படைத்தவனை அறியாததே ஆகும்.

படைத்தவனை அறியாததற்கு காரணம் மாயை ஆகும்.

மாயைக்கு காரணம் ஈஸ்வரன் ஆகும்.

ஈஸ்வரனுக்கு காரணம் பிரம்மம் ஆகும்.

பிரம்மத்திற்கு காரணம் **சத் சித் ஆனந்தமே** ஆகிய “**நான்**” ஆகும்.

அந்த “**நான்**” க்கு காரணம் என்னுடைய இருப்பு, அறிவு மற்றும் ஆனந்தம் என்ற மூன்றையும் இந்த தேகத்துக்குள் கொண்ட பரமா(ஆ)த்மா மட்டுமே காரணம்.

ஆகவே, இனி “**நான்**” என்பது உடல் அல்ல. இந்த உடலுக்குள் இருக்கின்ற அந்த “**சைதன்யம்**” என்பதை எவன் அறிகின்றனோ அவனே பிரம்மம்.

“**நான்பிரம்மம்**” என்பதை யார் அறிகின்றார்களோ,

அவர்கள் சம்ஸார சாகரத்தில் இருந்து கரை ஏறி விடுவார்கள்.

இதனையே வள்ளுவப் பெருந்தகை தன் குறட்பாவில்,

**பிறவிப் பெருங் கடல் நீந்துவர் நீந்தார்**
**இறைவன் அடி சேராதார் . - திருக்குறள்.**

மீண்டும், மீண்டும் பிறந்து, பிறவித் துன்பங்களில் சுழலாது, வீடுபேறு என்ற விடுதலை பெறுவதை அதாவது , பிறவா வாழ்வைப் பெறும் வழியை இந்த குறளில், பிறவி பெருங்கடல் என்று எண்ணற்ற பிறவிகளை குறிப்பிட்டு, அவைகளை கடக்க வேண்டுமெனில் இறைவனை அறிந்தவனால் மட்டுமே இந்த எண்ணற்ற பிறவிக்கடலைக் கடந்து நீந்தி வர முடியும் என்றும், மற்றவர்களால் நீந்த முடியாது என்ற வகையில் வெளிப்படுத்துகின்றார்.

இந்த வேத சாஸ்திரத்தின் வாயிலாக எவன் ஒருவன் ஆசையின் உந்துதலினால் விளையும் ஒவ்வொரு செயல்களும், தன்னை துயரத்திற்கு உட்படுத்துகின்றன, ஆனந்தத்திற்கு தடையாக அமைகின்றன, என்பதை அறிகின்றானோ, அவனே தன்னுடைய ஆனந்தத்திற்கு தடையானவற்றை, அறிவினால் அறிந்து, சத்தியத்திற்கு புறம்பான செயல்களைச் செய்யாமல், இந்த பிரபஞ்சத்தின் இயக்க ஒழுங்கைப் போன்று, தன்னுடைய செயல்களிலும் ஒரு ஒழுங்கை ஏற்படுத்திக் கொண்டவன் ஆகின்றான்.

இவ்வாறு, அவன் தன்னில் ஆரம்பித்த இந்த ஒழுங்கு, அவனது குடும்பத்தை ஒழுங்காக மாற்றி, அவனது குடும்பத்தார் மூலமாக, உற்றார், உறவினர்கள் ஒழுங்கான வாழ்விற்கு மாற்றி, அந்த உற்றாரும், உறவினர்களும் சேர்ந்து இந்த சமுதாயத்தை ஓழுங்கான வாழ்விற்கு மாற்றி, முடிவில் இந்த நாடே ஒரு ஒழுங்கான வாழ்விற்கு தயார் ஆகிவிடும் என்பதில் சந்தேகம் இல்லை.

இந்த நாட்டின் ஒழுங்கு, இந்த உலகத்தின் ஒழுங்கிற்கு காரணமாகும். இந்த உலகத்தின் ஒழுங்கு, இந்த பிரபஞ்சத்தின் ஒழுங்கு, இந்த பிரபஞ்சத்தின் ஒழுங்கு, அந்த பரம்பொருளின் ஒழுங்கே ஆகும்.

அந்த ஒழுங்கான ஒன்றை ஒருவன் அறிந்து கொண்டால், அனைத்தும் ஒன்றெனக் கருதி, மற்ற உயிர்களிலும், இந்த அண்ட சராசரங்களில் அனைத்திலும் தன்னையே காண்பவன் எவ்வாறு மற்றவைகளுக்கு துன்பம் கொடுக்க இயலும்.

இவனைப்போலவே, மற்றவனும் நினைத்தான் என்றால், இந்த பூமியில் சண்டை சச்சரவுகளே

இருக்காது. எல்லோரும் ஒருவரை ஒருவர் மதித்து, நேசித்து, நட்புடன் பழகுவர்.



எங்கு பார்த்தாலும் மக்கள் மகிழ்ச்சியுடன், ஒருவருக்கு ஒருவர் உதவி புரிந்து வாழ்வார்கள். அப்படிப்பட்ட, ஆனந்த உலகத்தை காண்பதற்கு யாருக்குத்தான் ஆசை இருக்காது.

அரசன் முதல் ஆண்டிவரை அனைவரும் அந்த பரமாத்மாவாகவே, ஒருவரை ஒருவர் நினைத்து கொண்டு வாழ்வதால், இங்கு பேதமைகள் நீங்கி, அரசு அலுவலகங்கள் அனைத்துமே, மக்கள் சேவையை மகேசன் சேவையாக செய்ய ஆரம்பித்து விடும்.

இந்த ஞானம் மட்டும் இந்த புவியினில் உள்ள அனைத்து மனிதர்களும் அடைந்தார்கள் என்றால், இந்த உலகம் முழுவதும் ஒரு அழகான நந்தவனமாக மாறி, எங்கும் அன்பு என்ற பூக்கள் பூத்து ஆனந்தம் என்ற மணம் பரவிக்கிடக்கும்.

அந்த ஆனந்தம் என்ற மணத்தினாலே மயங்கிக் கிடக்கும் மக்களின் மனத்தைப் பற்றி கூறவும் வேண்டுமோ?

இந்த ஆனந்தத்திற்கு திறவுகோல் “**வேதம்**” ஆகும். இந்த வேதத்திற்கு “**உயர்ந்த அறிவு**” என்று பெயர். எனவே, இந்த வேதத்தை அறிந்தவன் உயர்ந்த அறிவு உடையவன் ஆகின்றான்.

அப்படிப்பட்ட உயர்ந்த அறிவாகிய வேதங்கள் அனைத்தையுமே முழுவதுமாக, கரைத்து குடித்து விடலாம் என்று கருதுவது, ஒரு பூனை கடல் நீரை நக்கியே குடித்து முடிப்பேன் என்று கூறுவதற்கு ஒப்பானது. எனவே, அது நிச்சயமாக யாராலும் முடியாது.

எனவே, ஒரு பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்பதைப் போன்று, வேதத்தின் கடைசிப்

பகுதியான “**வேதாந்தம்**” அறிந்தால், இந்த வேதம் முழுவதும் கூற வரும் உண்மை விளங்கும்.

*(வேதம் என்றால் சாஸ்திரம், அந்தம் என்றால் முடிவுப்பகுதி என்று பொருள்)*

ஆக, அந்த வேதத்தின் இறுதிப்பகுதியான சாஸ்திரத்தை, பாமரமனும் படித்து அறிந்து கொள்ளக்கூடிய, உபநிஷத்துக்களாக, நம்முடைய ரிஷி முனிவர்களால் கொடுக்கப்பட்டு, இன்று அனைத்து தரப்பு மக்களும் அறியக் கூடிய, எளிமைப் படுத்தப்பட்டதாக உள்ளது.

நம்முடைய “**சனாதன தர்மம்**” எதைக் கூற வந்திருக்கின்றது என்பதை எளிதாக அறிய, இந்த உபநிஷத்துக்கள் வழி காட்டும்.

இந்த உபநிஷத்துக்களின் உபதேசங்களாக சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

அவைகள்,

- நீ தனக்கு எது எல்லாம் நன்மை என்று கருதி, அதில் ஆனந்தம் அடைய விரும்புகின்றாயோ, அதைப்போலவே மற்ற உயிர்களும் விரும்பும் என்பதை

அறிந்தாயானால், மற்ற உயிர்களுக்கு தீமை செய்ய மாட்டாய்.

- புகை வண்டியில் பயணம் செய்யும் பொழுது நீ கொண்டு செல்லும் சுமைகளை எப்படி புகை வண்டியே சுமக்கட்டும் என்று இறக்கி வைத்து விடுகின்றாயோ, அதுப்போல, இந்த உடலில் பயணம் செய்யும் நீ உனக்கு வரும் துன்பங்களை இந்த உடலில் இருந்து இயக்குகின்ற இறைவனிடமே ஒப்படைத்து விடு!.

- நீ தூங்கும் போது கற்பனையாக நீயே பலவற்றைப் படைத்து அனுபவித்து அதனால், துக்கமோ, ஆனந்தமோ அடைவதை, நீ விழித்தவுடன் "**கனவு**" என்று அனைத்தையும் அறிந்து துறக்கின்றாயே, அதே மன நிலையை நீ விழிப்பு நிலையில் இந்த உலகத்தில் அனுபவிக்கும் போது துக்கமோ, ஆனந்தமோ உண்டானால் அதை துறக்க முயற்சி செய்!. ஏனெனில் அது உன்

மரணத்திற்கு பிறகு “**கனவு**” போல ஆகிவிடும்.

- முட்களைத் தின்று வாயில் ரத்தம் வடிந்தாலும், ஒட்டகமானது அந்த முட்களைத் தின்பதை நிறுத்தாது. அதுப்போல, எத்தனைத்தான் துயரம் வந்தாலும், தன் துயரத்திலிருந்து விடுபடவேண்டும் என்ற திடம் இன்றி மீண்டும், மீண்டும் துன்பம் தரும் செயல்களையே செய்துவருவார்கள் அறியாமையுள்ள மனிதர்கள்.

- ஏட்டுச் சுரைக்காயை வைத்து பொறியல் செய்து சாப்பிட முடியாது. உண்மையான சுரைக்காய் கொண்டு வர வேண்டும். அதுப்போல, வேதத்தை படித்து அறிந்து கொண்டால் மட்டும் போதாது, அதில் கூறப்பட்டுள்ள விஷய ஞானங்களை அனுபவத்திற்குக் கொண்டு வர வேண்டும்.

- வாழைப்பழத்தை உண்பவன் அதன் தோலை வீசி எறிவதுப்போல, ஆத்ம

ஞானத்தைப் பெற்றவன் இந்த உலக விஷயங்களை வீசி எறிந்து விடுவான்.

- கற்ற கல்வியினால் பெற்ற பயன் என்னவென்றால், அறிந்த ஞானத்தைக் கொண்டு அமைதியுடன் ஆனந்தமாக வாழ்வதே!.

- இந்த உலகத்தில் உள்ள சிறு புழுவைக்கூட அதன் இயல்புக்கு மாறாக மாற்ற முடியாத போது, இந்த உலகத்தையே நான் மாற்றி விடுவேன் என்ற அறியாமையே மிகப்பெரிய துயரத்திற்குக் காரணம்.

- **"நான்"** என்று அந்த ஒன்று இந்த உடல் அல்ல, அது என்னுள் இருக்கின்ற **"சைதன்யம்"** என்பதை அறிந்து கொண்டால், என்னுடையது என்று சொந்தம் கொண்டாட என்ன இருக்கின்றது.

- அண்டத்தில் உள்ளதே, பிண்டத்தில் உள்ளது என்பதை அறிந்தவன், அண்டத்தில் தேடாமல், பிண்டத்தில் தேடினால் என்றால், அதன் முடிவாக அண்டமும்,

பிண்டமும் அற்ற “**அகண்டம் நான்**” என்பதை அறிந்து கொள்வான்.

- அகண்டம் நான் என்று அறிந்தவனுக்கு இனி அறிய வேண்டியது ஒன்றும் இல்லை.

- எதை அறிந்து கொண்டால், வேறு எதையும் அறியத்தேவை இல்லையோ, அதை அறிவதே உண்மை அறிவு.

இந்த ஞானத்தை அடையவே வேதம் என்ற நம்முடைய “**சனாதனதர்மம்**” அறிவுறுத்துகின்றது.

இந்த ஞானத்தை அடைந்த மெய்ஞானிகளிடம் இருந்து வெளிப்பட்ட வார்த்தைகளின் உண்மைத் தன்மையை அறியவேண்டும்.

ஆயிரந் தெய்வங்கள் உண்டென்று தேடி
அலையும் அறிவிலிகாள்! - பல்லாயிரம் வேதம்
அறிவொன்றே தெய்வமுண்டா மெனல்
கேளீரோ?

மாடனைக் காடனை வேடனைப் போற்றி
மயங்கும் மதியிலிகாள்! - எதனூடும் நின்
றோங்கும் அறிவென்றே தெய்வமென்றோதி
யறியீரோ?

சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ? - பல பித்த மதங்களிலே
தடுமாறிப் பெருமை யழிவீரோ?

வேதம் பல கோடி யொர் உண்மைக் குளவென்று
வேதம் புகன்றிடுமே - ஆங்கோர் வேதத்தை
நீருண்மை யென்று கொள்வீரென்றவ்வேத
மறியாதே.

நாமம்பல கோடியோர் உண்மைக் குளவென்று
நான்மறை கூறிடுமே - ஆங்கோர் நாமத்தை
நீருண்மை யென்று கொள்வீ ரென்றந்நான்மறை
கண்டிலதே

போந்த நிலைகள் பலவும் பராசக்தி
பூணு நிலையாமே - உப சாந்த நிலையே
வேதாந்த நிலையென்று சான்றவர் கண்டனரே

கவலை துறந்திங்கு வாழ்வது வீடென்று
காட்டும் மறைகளெலாம் - நீவிர் அவலை
நினைந்து மிமெல்லுதல் போலிங்கு
அவங்கள் புரிவீரோ?

உள்ள தனைத்திலும் உள்ளொளி யாகி
ஒளிர்ந்திடும் ஆன்மாவே - இங்கு,

கொள்ளற் கரிய பிரமமென்றே மறை
கூவுதல் கேளீரோ?

மெள்ளப் பலதெய்வம் கூட்டி வளர்த்து
வெறுங் கதைகள் சேர்த்துப் - பல கள்ள மதங்கள்
பரப்புதற் கோர்மறை காட்டவும் வல்லீரோ?

ஒன்று பிரமமுள துண்மை யஃதுன்
உணர்வெனும் வேதமெலாம் - என்றும்
ஒன்று பிரமமுள துண்மை யஃதுன்
உணர்வெனக் கொள்வாயே! - **சுப்பிரமணிய பாரதி.**



விளக்கம்:
===========

ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று அறிவில்லாமல் அலைகின்றீர்களே, அனைத்து வேதங்களும் **"அறிவே தெய்வம்"** என்று கூறுவதை நீங்கள் அறிவீர்களா?

மாடசாமி, காடசாமி, வேடசாமி என்று பல தெய்வங்களை போற்றி மயங்குகின்ற அறிவற்றவர்களே, இந்த எல்லாவற்றிற்குள்ளும் இருக்கின்ற **"அறிவு ஒன்றே தெய்வம்"** என்று அறிவீர்களா?

**"சுத்த அறிவே சிவம்"** என்று வேதம் கூறுவதை கேட்காமல், பல பைத்தியக்காரத்தனமான மதங்கள் கூறுவதை பெருமையாக நினைத்து தடுமாறி அழியப்போகின்றீர்களா?

பல கோடி வேதங்களிலும், ஒன்று மட்டுமே உண்மை வேதம் கூறுவதையும், அப்படிப்பட்ட வேதத்தை நீங்கள் உண்மை என்று கொண்டாடுவீர்கள் என்று அந்த வேதத்திற்கும் தெரியாதே!.

இறைவனுடைய நாமங்கள் (பெயர்கள்) பல கோடி இருக்கின்றன என்று (நான்கு மறைகளான) உண்மை

வேதம் கூற, அப்படிப்பட்ட நாமங்களில் ஒன்றை உண்மை என்று நீங்கள் ஏற்பதை அந்த நான்மறை (வேதம்) அறியாதே!

ஞான நிலைகள் பலவும் பராசக்தி செயல் செய்யும் முறைகளே, மன அமைதியைக் கொடுக்கின்ற "**வேதாந்தம்**" மட்டுமே "**உண்மை ஞானநிலை**" என்று சான்றோர்கள் கண்டனரே.

கவலைகளை துறந்து வாழ்வதே உண்மையில் மோட்சம் என்று வேதம் கூறினும், நீங்கள் அவலை மென்று தின்பதைப் போல பல தீமைகளைப் புரிவீரோ?.

உள்ளதனைத்திலுமே, உள்ளொளியாக, உங்கள் உள்ளே ஒளிரும் ஆன்மாவையே, "**எல்லா இடங்களிலும் நிறைந்த பிரம்மம்**" என்று வேதம் கூறுவது கேட்கவில்லையோ!.

மெல்ல, மெல்ல பல தெய்வங்களை உண்டாக்கிக் கொண்டு, அந்த தெய்வங்களைப் பற்றி பல கதைகளை உண்டாக்கிச் சேர்த்து, பல திருட்டுத்தனமான மதங்களை வளர்ப்பதை வேதம் அனுமதிப்பதாகக் காட்ட முடியுமா?

ஒன்றே பிரம்மம், அது உன்னுடைய உணர்வான உயர் வேதம் என்பது உண்மை!. ஒன்றே பிரம்மம் அது உன்னுடைய உள்ளத்தில் மட்டுமே உணர்வது என்பதே உண்மை!.

**– மகாஞானி சுப்ரமணிய பாரதி.**

ஒரு பழத்தை கடித்து, மென்று விழுங்குவதற்கு பதிலாக, அதனை பிழிந்து திரவமாக மாற்றிக் கொடுத்தால், அதை எளிதில் குடித்து விடுவதைப் போல, வேதத்தின் முழு சாரத்தையும், பிழிந்து பல மஹா வாக்கியங்களாக மாற்றி, அதனை சுவையுடன் அள்ளிப்பருக, அவைகளுக்கு “உபநிஷத்துக்கள்” என்று புதிய பெயர் சூட்டி, அதை பல் இல்லாத கிழவனும் படு ஆனந்தமாக பருகுமாறு, எளிமைப்படுத்தி கொடுத்துள்ளனர் நம்முடைய முன்னோர்கள்.

அவர்கள் வாழ்ந்த, ஆனந்தமான, ஆன்மீக தர்ம வாழ்க்கையே, ஒழுங்கான ஒழுக்க வாழ்க்கையே இந்த “**சனாதன தர்மம்**” என்பதாகும்.

அப்படி ஒழுங்கான, ஒழுக்கமான வாழ்க்கையை வாழ்ந்துக் கொண்டிருப்பவன், இந்த பிரபஞ்ச

ஒழுங்குடன் இணைவதால், இந்த அண்டத்தை முழுவதுமாக அறிந்தவன் ஆகின்றான்.

இந்த அண்டத்தை அறிந்தவன் “நான் அகண்டம்” என்பதையும் அறிந்து கொள்கின்றான். அவனே பூரணமானவன்.

இந்த பூரணமானவனே எல்லாமாக இருக்கும் பொழுது, இந்த உண்மையை அறிந்த அவன், யாரையும், எந்த உயிரையும் இழிவு படுத்த மாட்டான். ஏமாற்றவும் மாட்டான்.

யாரும், யாரையும் ஏமாற்றாமல், ஒருவருக்கு ஒருவர் உதவி புரிந்து, “இருப்பதெல்லாம் இறைவனே” என்ற ஞானத்தின் பலனாக, ஆனந்தத்தை அடைந்து என்றும் வாழ முடியும்.

இப்படிப்பட்ட, இந்த ஆனந்த உலகத்தை உருவாக்க, மஹா வாக்கியத்தினால் மட்டுமே முடியும்!.

ஆம்! அந்த தாரக மந்திரமான மஹா வாக்கியம்

**“நீ அதுவாகவே இருக்கின்றாய்”**

என்பதாகும்.

அப்படி, அதுவாகவே இருந்து, அதுவாகவே வாழ்ந்து, வந்த அது, இந்த உடலை விட்டு வெளியேறும் போது, தன்னை அறிந்த அந்த ஞானிக்கு விதேக முக்தியை கொடுக்கின்றது.

விதேக முக்தி என்பது "**பிறவாமை**" என்பதாகும்.

இது போன்று, உடல் எடுத்து இனி பிறக்காத ஜீவன் எங்கும், எதிலும் கலந்து இருப்பான். அவனுக்கு பெயர்தான் நிர்குண பிரம்மம் என்பதாகும்.

இனி அவன் சகுணத்திற்கு வரவே மாட்டான்!

அவன் எந்த உடலிலும் இனி பிறக்க மாட்டான். எங்கும் வரமாட்டான். எதுவும் செய்ய மாட்டான். அந்த ஒன்றே எல்லாமாக, எல்லா இடத்திலும் இருப்பதினால், அவன் இல்லாத இடமேயில்லை. அந்த இருப்பே அவனாக இருப்பதினால், அவனைத்தவிர அறிவதற்கு ஒன்றுமில்லை.

**"அவனே தன்னை அறிந்தவன் ஆகின்றான்"**

அவ்வாறு தன்னை அறிந்தவனுக்கு,

இந்த அஞ்ஞானத்தில் இருப்பவர்கள் என்ன கேள்விகளை வேண்டுமானாலும், அவரவர்களுக்குள் கேட்டுக் கொள்ளட்டும்,

எத்தகைய சடங்கு சம்பிரதாயங்களை வேண்டுமானாலும் கடைப்பிடிக்கட்டும், எந்த கடவுள்களை (பிரம்மா, விஷ்ணு, சிவன், ஏசு, யெகோவா, அல்லா) எப்படி வேண்டுமானாலும் அவரவர்களுக்குத் தக்கபடி, அவரவர்கள் விருப்பப்படி வழிபடட்டும். நீத்தார் கடனை நியதிக்குள் செய்யட்டும், செய்யாமல் இருக்கட்டும், பூசைகள், யாகங்கள், கோவில், சிலை என எதை வேண்டுமானாலும் ஏற்றுக்கொண்டு ஆஸ்திகனாக இருக்கட்டும், ஏற்காமல் நாஸ்திகனாக இருந்து விட்டு போகட்டும்.

**“இவர்களை மாற்ற நான் வரவில்லை, என்னை மாற்றிக்கொள்ளவே நான் வந்துள்ளேன்”**

என்பதை அறிந்து, தன்னை அறிந்த தத்துவ ஞானியாக மாறி, முன்னை வினைகளின் முடிச்சை அவிழ்த்து **“பிறவாமை”** என்ற பெரு நிலைப் பெற்று, என்றும் அறிவுடன் கூடிய ஆனந்தத்தில், இந்த உடலுடன் வாழும் பொழுதே ஜீவன் முக்தனாக நிலைபெற்றிருப்பான்.

அவனே **“சச்சிதானந்தன்”,** அவனே **“பரிபூரணன்”** ஆவான்.

பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவ சிஷ்யதே||

ஈஸ்வரன் பூரண வடிவானவர். சீவனும் பூரண வடிவானவன். பூரணமான ஈஸ்வரனிடமிருந்து பூரணமான சீவன் தோன்றியுள்ளான். பூரணமான சீவனுடைய பூர்ண வடிவத்தை எடுத்துவிட்டால் எஞ்சி இருப்பது பூரணம் மட்டுமே.

**ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||**

**************** **ஓம் தத் சத்** ******************

